# ஹிந்து விரதங்களும் விழாக்களும்

அருளியவர்
ஸ்ரீ சுவாமி சிவானந்தா அவர்கள்

தமிழாக்கம்
பேராசிரியர் திரு. T.K. நாராயணன், M.Sc., M.Phil.




வெளியிடுவோர்
தெய்வீக வாழ்க்கைச் சங்கம்
சிவானந்தா ஆஸ்ரமம்
சுவாமி சிவானந்தா சாலை
இராசிபுரம் - சேலம் மாவட்டம்

1994

விலை] [ரூ. 20.00

# பதிப்பாளர் உரை

ஹிந்துக்கள் மிக ஆழ்ந்த சமயவாதிகளாவர். ஆத்ம போதம் அல்லது இறை உணர்வைப் பெறுவதுதான் அவர்களது வாழ்வின் இலட்சியமாகும். ஏதாவது ஒரு வகையிலான சமயத்தை அவர்கள் பெற்றிருப்பர். இதயத்தின் ஆழத்தில் புகுந்து, நம்பிக்கை, பக்தி மற்றும் அன்பை வெளிப்படுத்துவதாக அவர்களது சமயம் அமையும்.

எல்லா ஹிந்து விழாக்களுக்கும் ஓர் ஆழ்ந்த ஆன்மீக தத்துவமும், உயர்ந்த சமயக் குறிப்பும் உண்டு. எல்லா பெரிய ஹிந்து விழாக்களும் சமய, சமூக, சுகாதார அம்சங்களைத் தம்பால் கொண்டுள்ளன. ஒவ்வொரு பண்டிகையிலும் சூரிய உதயத்திற்கு முன்னரேயே கிணற்றிலோ, குளத்திலோ அல்லது நதியிலோ ஸ்நானம் செய்யும் அம்சம் இருக்கும். ஒவ்வொருவரும் கொஞ்சம் ஜபம், பிரார்த்தனை, கீர்த்தனை, தியானம், சில சமஸ்கிருத சுலோகங்களின் பாராயணம் செய்ய வேண்டியதிருக்கும்.

கடினமான உழைப்பு மற்றும் களைப்பூட்டும் செயல்களால் மனிதன் சோர்வடைகிறான். அவனுக்கு மாற்றமும், வேறு வகையான வேலையும் தேவை. ஓய்வு அவனுக்குத் தேவை. அவனை மகிழ்வூட்டுவதற்கு ஏதாவது தேவைப்படுகிறது. இந்த விழாக்கள் அவனுக்கு மகிழ்ச்சியும், சந்தோஷமும் அளித்து, ஒய்வையும் அமைதியையும் அளிக்கின்றன.

இந்த நூலில் குருதேவர் நமது விழாக்கள் மற்றும் விரதங்கள் பலவற்றின் முக்கியத்துவம் குறித்தும் தத்துவம் குறித்தும் விவரித்துள்ளார். இவற்றைக் கடைப்பிடிப்பதில் இரண்டு அம்சங்களில் அவர் எப்பொழுதும் மிக அதிகமான சுதந்திரத்தை அளித்துள்ளார். 1) விழாக்கள் கொண்டாடப்படும் நாட்களைப் பற்றியது. 2) அவை

காலம்காலமாக கொண்டாடப்படும் விதம் பற்றியது. உதாரணமாக, துர்க்கா பூஜையின் போது தென்னிந்தியாவில் பல்வேறு பொம்மைகளும் பொருள்களும் கொலுவில் அழகாக வரிசை வரிசையாக வெவ்வேறு படிகளில் அடுக்கி வைக்கப்படுகின்றன. அவற்றின் முன் மாலைவேளையில் பெண்கள் அமர்ந்து பாடுகின்றனர். சில இடங்களில் காவடி இல்லாமல் தீமிதிக்கும் பழக்கம் உள்ளது. இது தீயில் பிறந்த திரௌபதி அம்மனைப் போற்றும் வகையில் கொண்டாடப்படுகிறது. கொழும்பு யோகி சச்சிதானந்தாவின் கருத்துக்கேற்ப இது கண்ணகி அம்மனைப் போற்றும் வகையில் கொண்டாடப்படுகிறது. யாருடைய நல்ல நம்பிக்கையையும் பழக்க வழக்கத்தையும் குருதேவர் அவமதிப்பதில்லை.

ரிஷிகேசம் சிவானந்தாசிரமத்தில் எவ்விதம் சில முக்கியமான விழாக்கள் கொண்டாடப்படுகின்றன என்ற விபரமும் இந்நூலில் தரப்படுகிறது. முன் பழக்கம் எதுவும் இல்லையெனில் நாமும் அதையே பின் பற்றலாம். குறிப்பிட்ட நாளில், அந்த தினத்திற்குப் பொருந்தும் வகையில், அந்தப் பண்டிகையின் சிறப்பை நமக்கு உணர்த்தும் பகுதியை வாசித்தலே போதும்.

குருதேவர் அவரது ஆசிரமத்தில் ஹிந்து விழாக்களை மட்டுமல்லாது, கிறிஸ்தவ, முஸ்லிம் விழாக்களையும் கொண்டாடுவார். இது நாமும் பின்பற்ற வேண்டியதொரு நல்ல உதாரணமாகும். அவர் பார்வையில் வேறுபாடுகளே கிடையாது. ஆங்கில காலண்டரின் புத்தாண்டு தினமானது தமிழ் அல்லது தெலுங்கு வருடப் பிறப்பைப் போன்றே முக்கியத்துவம் வாய்ந்ததாகும். எனவே இந்த நூலில் அவர் தெலுங்கு வருடப் பிறப்பு என்று சொல்லுகையில், அதை தமிழ் வருடப் பிறப்பு அல்லது குஜராத்தி வருடப் பிறப்பு என்றும் கொள்ளலாம்.

- தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கும் சற்குரு ஸ்ரீசுவாமி சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமஹராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப் பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புகள் இன்று இருக்கின்றன.

குருதேவ் சிவானந்தா ஆங்கிலத்தில் எழுதிய "Hindu Fasts And Festivals" என்ற நூலை பேராசிரியர் திரு. T.K. **நாராயணன்** M.Sc., M.Phil. மிக மிக அற்புதமாக தூய எளிய தமிழில் அழகிய முறையில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் மதுரை 'பிரிண்ட ஷாப்' நிறுவனத்தினர் டைப்செட் செய்து கொடுத்துள்ளனர். சிவகாசி தி ஓரியண்ட் லித்தோ பிரஸ்ஸார், சிறந்த முறையில் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கிய அன்பர், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீகப் போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம்வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

**சுவாமி சிதானந்தா**

# உள்ளடக்கம்

## விரதங்கள்

## எல்லா நிகழ்ச்சிகளுக்கும் உரிய பிரார்த்தனைகள்

உலகெங்கும் உள்ள குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்தரின் சீடர்களும் பக்தர்களும் தங்கள் எல்லா நிகழ்ச்சிகளையும் கீழ்க்காணும் பிரார்த்தனை கீர்த்தனைகளுடன் தொடங்கி மந்திரத்துடன் முடிக்கும் வழக்கத்தைக் கொண்டுள்ளனர்.

### தொடக்க வழிபாடு

*ஜய கணேச ஜய கணேச ஜய கணேச பாஹிமாம்*
*ஸ்ரீ கணேச ஸ்ரீ கணேச ஸ்ரீ கணேச ரக்ஷமாம்*
*ஜய ஸரஸ்வதி ஜய ஸரஸ்வதி ஜய ஸரஸ்வதி பாஹிமாம்*
*ஸ்ரீஸரஸ்வதி ஸ்ரீஸரஸ்வதி ஸ்ரீஸரஸ்வதி ரக்ஷமாம்*
*சரவணபவ சரவணபவ சரவணபவ பாஹிமாம்*
*ஸுப்ரம்மண்ய ஸுப்ரம்மண்ய ஸுப்ரம்மண்ய ரக்ஷமாம்*
*சிவானந்த சிவானந்த சிவானந்த பாஹிமாம்*
*சிவானந்த சிவானந்த சிவானந்த ரக்ஷமாம்*
*ஜய குரு சிவகுரு ஹரி குரு ராம்*
*ஜகத் குரு பரம்குரு ஸத்குரு சியாம்*
*ஆதி குரு அத்வைத குரு ஆனந்த குரு ஓம்*
*சித்குரு சித்கன குரு சின்மய குரு ஓம்*

*ஜய ஸியா ராம் ஜய ஜய ஸியாராம் (2)*
*ஜய ராதே ச்யாம் ஜய ஜய ராதே ச்யாம் (2)*
*ஜய ஹநுமான் ஜய ஜய ஹநுமான் (2)*
*ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே*
*ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண க்ருஷ்ண க்ருஷ்ண*
*ஹரேஹரே (3)*

*சிவானந்த சிவானந்த ஸத்குரு நாதா சிவானந்தா*

## மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரம்

ஓம் த்ரயம்பகம் யஜாமஹே ஸுகந்திம் புஷ்டி வர்தனம் |
உர்வாருகமிவ பந்தனான் ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத் ||

## இறுதி சாந்தி மந்திரங்கள்

ஸர்வேஷாம் ஸ்வஸ்திர் பவது, ஸர்வேஷாம் சாந்திர் பவது
ஸர்வேஷாம் பூர்ணம் பவது, ஸர்வேஷாம் மங்களம் பவது

ஸர்வே பவந்து ஸுகின:, ஸர்வே ஸந்து நிராமயா:
ஸர்வே பத்ராணி பச்யந்து, மா கஸ்சித் துக்கபாக் பவேத்

அஸதோ மா ஸத் கமய
தமஸோ மா ஜ்யோதிர் கமய
ம்ருத்யோர் மா அம்ருதம் கமய

ஓம் பூர்ணமத : பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே |
ஓம் சாந்தி சாந்தி சாந்தி:

## சிவஸ்துதி

சாந்தம் பத்மாஸனஸ்தம் சசதர மகுடம் பஞ்சவக்த்ரம் த்ரி நேத்ரம்

சூலம் வஜ்ரம் சகட்கம் பரசுமபயதம் தக்ஷிணாங்கே வஹந்தம் |

நாகம் பாசம் ச கண்டாம் டமருக ஸஹிதம் சாங்குசம் வாம பாகே

நானாலங்கார தீப்தம் ஸ்படிக மணி நிபம் பார்வதீசம் நமாமி ||

பொருள் : முக்கண்களுடன் சந்திரப் பிறையை மகுடத்தில் தாங்கி பத்மாசனத்தில் அமைதியாக அமர்ந்து ஸ்படிக மணியைப் போல பிரகாசிப்பவரும், திரிசூலம், வஜ்ரம், வாள், கோடரி ஆகியவற்றை வலப்புறத்திலும்,

அரவம், பாசம், மணி, உடுக்கை, ஈட்டி ஆகியவற்றை இடப்புறத்திலும் பெற்று விளங்கி அனைத்து பயத்திலிருந்தும் தனது பக்தர்களைக் காத்தருளும் ஐந்து முகம் கொண்ட பார்வதி நாதனை நான் வணங்குகிறேன்.

## ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்துதி

*பத்மாஸீனம் ப்ரசாந்தம் யமநிரதமானங்காரீ*
*துல்யப்ரபாவம்*
*பாலே பஸ்மாங்கீடாம் பஸ்மித ருஜிர முகாம்போஜ*
*நிந்தீவராக்ஷம்।*
*கம்புக்ரீவம் கராப்யாம் அவித்தா முருலஸாத் புஸ்தகம்*
*ஞானமுத்ராம்*
*வந்த்யம் கீர்வாண முக்யைர் நதஜன வரதம் பாவயே*
*சங்கரார்யம்॥*

பத்மாஸனத்தில் ஞானமுத்திரை தாங்கி யம, நியமம் போன்ற பண்புகளுடன் அமைதியாக அமர்ந்திருப்பவரும், நெற்றியில் விபூதி தரித்து தாமரை போன்ற கண்களுடன் அன்றலர்ந்த தாமரையையொத்த முகத்துடன் சிவபெருமானுக்கிணையான புகழ் வாய்ந்தவரும், கையில் மறைநூலைத் தாங்கியவரும், ஞானிகளால் யாண்டும் துதிக்கப்படுபவரும், சீடர்களின் விருப்பங்களை நிறைவேற்றிவைப்பவருமான ஸ்ரீ சங்கராச்சாரியாரை நான் தியானிக்கிறேன்.

## தத்தாத்ரேய ஸ்துதி

*மாலாகமண்டலு தர கரபத்மயுக்மே*
*மத்யஸ்த பாணியுகளே டமருத்ரிசூலம்।*
*அத்யஸ்த ஊர்த்வ கரயோ: சுப சங்கசக்ரே*
*வந்தே தமத்ரிவரதம் புஜ ஷட்க யுக்தம்॥*

பொருள் : மாலையையும் கமண்டலத்தையும் இரண்டு கைகளிலும், உடுக்கை மற்றும் ஈட்டியை இருகைகளிலும், சங்கு, சக்கரத்தை மேலே உள்ள இரு கைகளிலும் தாங்கியுள்ள ஆறு கைகளை உடைய அத்ரி குமாரரான தத்தாத்ரேயப் பெருமானை நான் தியானிக்கிறேன்.

## விநாயக த்யானம்

*கஜானனம் பூதகணாதிஸேவிதம்*
*கபித்த ஜம்பூ பலஸார பக்ஷிதம் |*
*உமாஸுதம் சோக விநாச காரணம்*
*நமாமி விக்னேஸ்வர பாத பங்கஜம் ||*

பொருள் : உமாதேவியின் மைந்தரும், வில்வப் பழத்தின் ரஸத்தினை அருந்துபவரும், தேவர்கள் மற்றும் பூத கணங்களால் வணங்கப்படுபவரும், எல்லாத் துக்கங்களைப் போக்குபவருமாகிய கணேசப் பெருமானின் தாமரைப் பாதங்களை நான் வணங்குகிறேன்.

## ஸுப்ரமண்ய ஸ்துதி

*ஷடானனம் குங்குமரக்த வர்ணம்*
*மஹாமதிம் திவ்ய மயூர வாஹனம் |*
*ருத்ரஸ்ய ஸூனும் ஸுரஸைன்ய நாதம்*
*குஹம் ஸதாஹம் சரணம் ப்ரபத்யே ||*

பொருள் : சிவந்த நிறமுடையவரும், சீரிய அறிவு பொருந்தியவரும், தெய்வீக மயிலை வாகனமாக உடையவரும், தேவர்களின் படைத்தலைவருமாகிய ஆறுமுகப் பெருமானை நான் சரணமடைகிறேன்.

## ஸ்ரீ கிருஷ்ண ஸ்துதி

*வம்சீ விபூஷித கரான் நவநீரதாபாத்*
*பீதாம்பராதருண பிம்ப பலா தரோஷ்டாத் ।*
*பூர்ணேந்து ஸுந்தரமுகாத் அரவிந்த நேத்ராத்*
*க்ருஷ்ணாத் பரம் கிமபி தத்வமஹம் ந ஜானே ॥*

பொருள் : முழுநிலவையொத்த முகத்துடனும், சிவந்த பிம்பப் பழம் போன்ற கீழ் உதடுகளுடன் மஞ்சள் பட்டு உடுத்தி நீருண்ட மேகம் போல் பிரகாசிப்பவரும் கைகளில் புல்லாங்குழலுடன் தாமரைக் கண் அழகரான ஸ்ரீகிருஷ்ணரையன்றி வேறு எந்தப் பரம்பொருளையும் நான் அறியமாட்டேன்.

## ஸ்ரீராமஸ்துதி

*த்யாயேதாஜானுபாஹும் த்ருத சரதனுஷம் பத்த பத்மாஸனஸ்தம்*
*பீடம் வாஸோ வஸானம் நவகமல தல ஸ்பர்திநேத்ரம் ப்ரஸன்னம் ।*
*வாமாங்காரூதாசீதா முக கமல மிலல்லோசனம் நீரதாபம்*
*நானாலங்கார தீப்தம் ததாத முரு ஜடா மண்டலம் ராமச்சந்திரம் ॥*

பொருள்: முழங்காலைத் தொடும் கைகளை உடைய வரும், வில்லையும் அம்பையும் ஏந்தியவரும், அன்றலர்ந்த தாமரை இதழ்களைப் போன்ற கண்களுடன் மஞ்சள் உடை உடுத்தி பத்மாசனத்தில் இருப்பவரும், நீல மேகம் போல இனிய தோற்றத்துடன் இடது தொடையில் சீதையை வைத்திருப்பவரும், சகலவித ஆபரணங் களுடன் தலையில் பெரிய ஜடா மண்டலத்துடன் கூடிய ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியை நாம் தியானிப்போமாக.

# 1. சித்திரா பௌர்ணமி

சாந்திராயன பஞ்சாங்கத்தின் அடிப்படையில் ஹிந்து வருடத்தின் பன்னிரண்டு மாதங்கள் அமைந்துள்ளன. அந்தந்த மாதத்தில் பௌர்ணமியன்று உச்சத்தில் இருக்கும் நட்சத்திரத்தை ஒட்டி மாதங்கள் பெயரிடப்பட்டிருக்கின்றன. சித்திரை மாதத்தின் பௌர்ணமி, அதாவது சித்திரை நட்சத்திரத்தின் உச்சத்தில் இருக்கும் பௌர்ணமியானது ஹிந்து கடவுளரின் கணிக்கும் தேவதைகளான சித்திர குப்தர்களுக்கு மிகவும் புனிதமானதாகும். மரண தேவனின் தேவலோக பிரதிநிதிகளான இவர்களுக்கு விசேஷ வழிபாடு நடத்தப்படுகிறது. வாசனைப் பொருள்கள் கலந்த சாதம் தயாரிக்கப்பட்டு, பிறகு பிரஸாதமாக விநியோகிக்கப்படுகிறது. சடங்கு வழிபாட்டின் இறுதியில் அக்னி வழிபாடு செய்யப்படுகிறது. வருடந்தோறும் நடத்தப்படும் இந்த சமயச் சடங்குகளால் இந்த மேலுலக தேவதைகள் பெரிதும் திருப்தி அடைந்து, மனிதர்களின் செயல்களை மிகுந்த பரிவுடன் தீர்மானிக்கிறார்கள்.

பன்னிரண்டு மாதங்களில் முதலாவது சைத்திர என்ற சித்திரை மாதமாகும். ஒவ்வொரு வருடத்தின் முதலாவது பௌர்ணமியன்று செய்யப்படும் இந்த வழிபாட்டின் மானஸீகமான பலன், இப்பூவுலகில் நம் ஒவ்வொருவருடைய செயல்களையும் இடையறாது கண் காணிக்கும் ஒரு மேலான சக்தி உள்ளது என்பதை நமக்கு நினைவூட்டவேயாகும். ஒருவரது நடத்தையை, மறைந்துள்ள சக்தி ஒன்று கண்காணிக்கிறது என்பதை இது நமக்கு உணர்த்துகிறது. ஒவ்வொருவர் தோளிலும் சித்திர குப்தர்கள் அமர்ந்துள்ளனர் என்ற எண்ணமானது

நாம் யாண்டும் நல்ல செயல்களையே செய்ய வேண்டும் என்று தூண்டுவதற்காகவேயாகும்.

சித்திர குப்த என்ற வார்த்தை ''மறைந்துள்ள படம்'' என்று பொருள்படுகிறது. நமது நல்ல மற்றும் தீய செயல்களின் உண்மையான படம் சூக்ஷ்மமான ரிகார்டுகளில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. வழிபாட்டிற்காக ஹிந்து ஒருவன் அதற்கு உருவம் கொடுக்கிறான். சித்திர குப்தர்களை வழிபடுவதன் உட்பொருள், அதனுடன் தொடர்புடைய கீழ்க்காணும் கதையால் அழகாக விளக்கப்படுகிறது.

தேவர்களின் தலைவனான இந்திரனின் குரு பிருஹஸ்பதி. ஒரு சமயம் இந்திரன் பிருஹஸ்பதியை அவமதித்துவிட்டான். அதன் விளைவாக எதைச் செய்வது, எதைச் செய்யக் கூடாது என்று இந்திரனுக்கு அறிவுரை கூறுவதை பிருஹஸ்பதி நிறுத்திவிட்டார். குரு இல்லாத சமயத்தில் இந்திரன் பல தீய செயல்களைச் செய்தான். கருணை மிகுந்த குரு மீண்டும் தமது பணியைத் தொடங்கிய வேளையில், குரு இல்லாத சமயம், தான் செய்த தவறுகளுக்கு என்ன பிராயச்சித்தம் செய்ய வேண்டுமென்று கேட்டான் இந்திரன். ஒரு தீர்த்த யாத்திரை செல்ல வேண்டும் என்று பிருஹஸ்பதி சொன்னார்.

தனது தீர்த்தயாத்திரையின்போது, ஒரு குறிப்பிட்ட இடத்தில் (தென்னிந்தியாவில் மதுரைக்கு அருகில்) தனது தோள்களிலிருந்து பாவச் சுமை அகற்றப்பட்டது போல இந்திரன் உணர்ந்தான். அந்த இடத்தில் ஒரு சிவலிங்கம் இருக்கக் கண்டான். அந்த அதிசயம் அங்கே இருந்த சிவலிங்கத்தால்தான் நிகழ்ந்தது என்று அவன் கருதி அதற்கு ஒரு கோவில் கட்ட விரும்பினான். உடனடியாக

கோவிலையும் கட்டினான். இப்பொழுது அவன் லிங்கத்தைப் பூஜிக்க விரும்பினான். அருகிலிருந்த ஒரு குளத்தில் இறைவனே பொற்றாமரைகளைத் தோன்றச் செய்தார். இந்திரன் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தான். அவன் ஆசீர்வதிக்கப்பட்டான். அவன் அவ்வாறு வழிபட்ட நாள்தான் சித்திரா பௌர்ணமி.

நீங்கள் சித்திரா பௌர்ணமியன்று வழிபாடு செய்கையில் . இந்தக் கதையை நினைவில் கொள்ளுங்கள். உங்களிடம் ஆழ்ந்த சிரத்தை இருக்குமானால், அறியாமையின் காரணமாக நீங்கள் பாபம் புரிந்துவிட்டீர்கள் என உறுத்தும் இதயத்துடன் நீங்கள் உணர்வீர்களேயானால், உங்கள் பாபங்களை மன்னிக்க பக்தி சிரத்தையுடன் நீங்கள் இறைவனை வழிபடுவீர்களேயாகில், அவற்றை மீண்டும் எதிர் காலத்தில் செய்யமாட்டீர்கள் என்று உறுதி கொள்வீர் களேயாகில், உங்கள் குருவிடம் பணிவு கொண்டு அவரது அறிவுரைகளை ஒருபொழுதும் மீற மாட்டீர்கள் என்று உறுதி எடுப்பீர்களாகில் அப்பொழுது உங்களது பாபங்கள் மன்னிக்கப்படும். இதில் சந்தேகமே கிடையாது. மேற்காணும் இந்திரனின் கதையின் உட்பொருள் இதுவே. சித்திரா பௌர்ணமியன்று இந்தக் கதையைத் தியானியுங்கள்.

இந்த தினத்தில் விரிவான வழிபாடுகளை எப்படிச் செய்ய வேண்டும் என்று ஹிந்து மறைநூல்கள் தெரிவிக் கின்றன. ஒரு கலசம் அல்லது விக்கிரகத்தில் தேவதை ஆவாஹனம் செய்யப்பட்டு, எல்லாச் சடங்குகளுடன் வழிபடப்பட்டு, அந்தக் கடவுள் விக்கிரகத்திற்கு பூஜை செய்யப்படுகிறது.

கீழ்க்காணும் சுலோகத்தைச் சொல்லியவாறே சித்திர குப்தரை தியானியுங்கள் :

*சித்திர குப்தம் மஹா ப்ராக்ஞம் லேகனீபத்ர தாரிணம்*
*சித்ர ரத்னாம்பரதாரம் மத்யஸ்தம் ஸர்வதேஹினாம்*

பிறகு தீபம், தூபம், பூக்கள் போன்றவற்றுடன் உரிய வழிபாடு செய்யுங்கள். ஏழை, எளியவர்கட்கும், பிராம்மணர்களுக்கும் உணவு அளியுங்கள். தாராளமாக தானம் செய்து இறைவனது அருளைப் பெறுங்கள்.

## 2. தீபாவளி

தீபாவளி அல்லது தீவாலி என்பது 'விளக்கு வரிசை'யைக் குறிக்கிறது. (அக்டோபர் - நவம்பர்) கார்த்திகை மாதத்தின் க்ருஷ்ணபட்சத்தின் கடைசி இரண்டு நாட்களில் இது வருகிறது. சிலருக்கு இது ஒரு மூன்று நாள் திருவிழா. கார்த்திகை க்ருஷ்ண பட்சத்தின் பதிமூன்றாம் நாளன்று இது ஆரம்பிக்கிறது. 14ம் நாளான அடுத்த நாளன்று நரக சதுர்த்தசி. 15ம் நாளன்று தீபாவளி.

இந்தத் திருநாள் எவ்விதம் தொடங்கியது என்பது பற்றிப் பல்வேறு கதைகள் கூறப்படுகின்றன. பகவான் விஷ்ணுவுடன் லக்ஷ்மிதேவியின் திருமணத்தைக் கொண்டாடுவதே இந்த விழா என்கின்றனர். வங்காளத்தில் இவ்விழா காளிமாதாவை வழிபடுவதற்காக அர்ப்பணிக்கப்படுகிறது. ராவணனை வென்று ஸ்ரீராமன் அயோத்திக்குத் திரும்பிய நன்னாளாகவும் இந்தப் புனித தினம் கருதப்படுகிறது. இந்த நாளில்தான் நரகாசுரனை ஸ்ரீ கிருஷ்ணர் வதம் செய்தார்.

தென்னிந்தியாவில் தீபாவளி நாளன்று அதிகாலையில் எண்ணெய் ஸ்நானம் செய்து புத்தாடை அணிகின்றனர். இனிப்புகளை அவர்கள் உண்கின்றனர். இந்த தினத்தில் அழிக்கப்பட்ட நரகாசுரனின் கொடும்பாவியைக் குறிக்கும் விதத்தில் பட்டாசுகளை அவர்கள் வெடிக்கின்றனர். 'கங்கா ஸ்நானம் ஆயிற்றா?' என்று அவர்கள் ஒருவருக்கொருவர் குசலம் விசாரிக்கின்றனர். கங்காஸ்நானம் தூய்மையாக்குவது போல அன்றைய தினம் அவர்கள் செய்த எண்ணெய் ஸ்நானம் புனிதமானது என்பதையே அது குறிக்கிறது.

ஒருவர் மற்றவருக்குச் செய்த தீங்குகளை மறந்து விடுகின்றனர். எங்கும் விழா, நட்பு மற்றும் சுதந்திரக்

கோலம் தென்படுகிறது. இந்த விழா ஒற்றுமையை ஏற்படுத்துகிறது. மக்கள் மனதில் அது தயாள குணத்தை உருவாக்குகிறது. ஒவ்வொருவரும் குடும்பத்தாருக்குப் புத்தாடைகளை வழங்குகின்றனர். முதலாளிகளும் தங்கள் தொழிலாளிகளுக்கு புத்தாடைகளை வழங்குகின்றனர். அதிகாலை பிரம்ம முகூர்த்தமான நான்கு மணிக்கு எழுந்திருப்பது ஆரோக்கியம், வேலைத் திறமை, ஆன்மீக முன்னேற்றம், ஒழுக்கக் கட்டுப்பாடு ஆகியவற்றை வளர்ப்பதில் மிகவும் உதவிகரமாக அமைகிறது. தீபாவளி தினத்தன்று அனைவரும் அதிகாலையில் எழுந்திருக்கின்றனர். தங்கள் சந்ததியார் இந்த விழாவின் நன்மைகளை உணர்ந்து தங்கள் வாழ்வில் அவற்றைக் கடைப்பிடிப்பர் என்ற நம்பிக்கையில்தான் இதை நம் முன்னோரான துறவியர் பெருமக்கள் ஏற்படுத்தியிருக்கின்றனர்.

தங்களது விரோதத்தையெல்லாம் மறந்து, எந்தவித வேறுபாடும் பாராட்டாமல் கிராம மக்கள் ஒருவரோடொருவர் அன்பாகப் பழகுகின்றனர். அன்புடன் அவர்கள் ஒருவரை ஒருவர் கட்டித் தழுவுகின்றனர். தீபாவளி ஒரு பெரும் ஒற்றுமைப்படுத்தும் சக்தியாகும். "இறைவனின் குழந்தைகளே! ஒன்றுபடுங்கள். அனைவரையும் நேசியுங்கள்", என்று முனிவர்கள் கூறுவதை அந்தர்முக ஆன்மீகச் செவி உள்ளவர்கள் தெளிவாகக் கேட்பர். ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்ளும் அன்பு வாழ்த்துக்களின் அலைகள் ஆகாயத்தை நிரப்பி உலகில் ஒவ்வொரு ஆண் பெண்ணின் இதயத்திலும் நல்லதொரு மாற்றத்தை ஏற்படுத்துகின்றன. எந்த ஓர் இதயம் இறுகிப் போயிருக்கிறதோ அதை இளக்கி, அழிவைத் தரும் விரோதப் பாதையிலிருந்து நம்மை விலக்கி நிறுத்துவது தொடர்ந்து தீபாவளி போன்ற பண்டிகைகளை நமது வீடுகளில் நாம் கொண்டாடுவதேயாகும்.

இந்த நன்னாளில் வட இந்தியாவில் ஹிந்து வியாபாரிகள் புதுக்கணக்குப் புத்தகங்களை எழுதி, வரும் ஆண்டில் சுபிட்சத்திற்கும் வெற்றிக்கும் வேண்டிப் பிரார்த்திக்கின்றனர். பகலில் வீட்டினைக் கழுவி சுத்தப்படுத்தி இரவில் மண் விளக்குகளால் ஒளிமயமாக்குகின்றனர். பம்பாயிலும் அமிருதசரஸிலும் தான் கண்ணைக் கவரும் ஒளி அலங்காரத்தைக் காணலாம். புகழ்பெற்ற அமிருதசரஸில் உள்ள தங்கக் கோவிலில் உள்ள குளத்தின் படிகள் பல்லாயிரக் கணக்கான விளக்குகளால் அலங்கரிக்கப்படுகின்றன. வைஷ்ணவர்கள் கோவர்தன் பூஜையைக் கொண்டாடி பெருமளவில் அன்னதானம் செய்கின்றனர்.

ஓ ராம்! ஒளிக்கு ஒளியான, சுயம் ஜோதியான ஆத்மனின் உள்ஜோதி உங்கள் இதய அறையில் எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அமைதி யாக உட்காருங்கள். உங்கள் கண்களை மூடுங்கள். புலன்களை உள்முகமாக்குங்கள். இந்தப் பேரொளியில் மனத்தை நிறுத்தி ஆத்மப் பிரகாசத்தைப் பெற்று உண்மையான தீபாவளியைக் கொண்டாடுங்கள்.

எவர் அனைத்தையும் பார்க்கிறாரோ, ஆனால் எவரை யாரும் பார்ப்பதில்லையோ, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் மற்றும் புத்தியை யார் ஒளிர்விக்கிறாரோ, ஆனால் எவரை அவை ஒளிர்விக்காதோ, அவரே பிரம்மன், அந்தராத்மன். பிரம்மனில் வாழ்ந்து உண்மை யான தீபாவளியைக் கொண்டாடி ஆத்மனில் பரமானந் தத்தை அனுபவியுங்கள்.

அங்கே சூரியனோ, சந்திரனோ, நட்சத்திரங்களோ, மின்னல்களோ - ஏன் - நெருப்புகூட ஒளிர்வதில்லை. ஆத்மனின் உள்ளொளியின் ஒரு கிரணத்திற்குக்கூட உலகின் அனைத்து ஒளிகளும் ஈடாகாது. இந்தப்

பேரொளியில் ஒன்றித்து மேலான தீபாவளியை அனுபவியுங்கள்.

பல தீபாவளிகள் வந்து போய்விட்டன. ஆனால் பலரது மனங்கள் அமாவாசை இரவைப் போல இருள் சூழ்ந்திருக்கின்றன. வீட்டில் விளக்குகள் ஏற்றப்பட்டு பிரகாசமாயிருக்கிறது. ஆனால் இதயம் அறியாமையாம் இருளில் மூழ்கியிருக்கிறது. மனிதர்களே! அறியாமை யாம் தூக்கத்தைத் தவிர்த்து எழுந்திருங்கள். உதயமும் அஸ்தமனமும் இல்லாத ஆத்மப் பிரகாசத்தை தியானம் மற்றும் ஆழ்ந்த விசாரத்தினால் உணருங்கள்.

நீங்கள் அனைவரும் முழு உள்ஒளியைப் பெறுவீர்களாக!. உங்கள் அறிவை பரஞ்ஜோதி ஒளிமயமாக்கட்டும்! குறையாத ஆன்மீகச் செல்வத்தை நீங்கள் பெறுவீர்களாக! பொருள் மற்றும் அருள் உலகில் நீங்கள் அனைத்தையும் பெற்று வளமடைவீர்களாக.

# 3. துர்கா பூஜை (நவராத்திரி)

எல்லா உயிர்களிலும் அறிவு, கருணை மற்றும் அழகு வடிவத்தில் இருப்பவளும், பிரபஞ்சத்தைப் படைத்துக் காத்து அழிப்பவளும் சிவனுக்கு உரியவளுமாகிய துர்க்கையாகிய தெய்வீக அன்னைக்கு வணக்கங்கள்.

சைத்ர மாதத்திலும், பிறகு அஸ்வாயுஜ மாதத்திலும் வருடத்திற்கு இருமுறை இத்திருநாள் கொண்டாடப் படுகிறது. துர்க்கையின் ஒன்பது வடிவங்களைக் கொண்டாடும் விதத்தில் அது ஒன்பது நாட்கள் கொண்டாடப்படுகிறது. நவராத்திரியின்போது (ஒன்பது இரவுகள் என்பது பொருள்) துர்க்கையின் பக்தர்கள் உபவாசம் இருக்கிறார்கள். பிராம்மணர்களுக்கு உணவு அளிக்கப்படுகிறது. ஆரோக்கியத்திற்காகவும், வளமான வாழ்விற்காகவும் பிரார்த்தனைகள் செய்யப்படுகின்றன.

பருவ ரீதியிலும், சூரிய கதியிலும் கோடை மற்றும் குளிர்கால ஆரம்பம் முக்கியம் வாய்ந்ததாகும். பராசக்தியை வழிபட இந்த இரண்டு நேரங்களும் புனிதம் வாய்ந்தவையாகக் கருதப்படுகின்றன. அவை (ஏப்ரல்-மே) சைத்ர மாதத்தில் ராம நவராத்திரி என்றும், (செப்டம்பர் - அக்டோபர்) அஸ்வாயுஜத்தில் துர்கா நவர்ாத்ரி என்றும் குறிப்பிடப்படுகின்றன. இயற்கையில் மாற்றங்கள் நிகழ்கையில் மக்களது உடலிலும் மனத்திலும் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்படுகின்றன. ராம நவமியின் போது ஸ்ரீராமரும் நவராத்திரியின் போது துர்க்கையும் வழிபடப்படுகின்றனர்.

பாரதத்தின் பல்வேறு பகுதிகளில் துர்கா பூஜை பலவிதங்களில் கொண்டாடப்படுகிறது. சக்தியின் வடிவத்தில் அன்னை பராசக்தியை வழிபடுவதுதான் இந்த விழாவின் அடிப்படை நோக்கமாகும். செல்வம்,

சுபிட்சம், மங்களம், உலகியல் மற்றும் ஆன்மீக அறிவு மற்றும் எல்லா ஆற்றல்களையும் மனிதனுக்கு அருளுமாறு அன்னையை வேண்டுவது இதன் நோக்கமாகும். அன்னையிடம் எந்த ஒரு விசேஷ வேண்டுகோளை எவர் விடுத்தாலும், அவளிடம் யார் எந்த வரத்தை வேண்டினாலும், இஃதனைத்தின் ஒரே அடிப்படை, அவளை வணங்கி, வழிபட்டு, தன்னை அவளுடன் ஐக்கியப்படுத்திக் கொள்வதேயாகும். இதைத் தவிர வேறு எந்த இலட்சியமும் கிடையாது. தெரிந்தோ தெரியாமலோ இது கடைப்பிடிக்கப்படுகிறது. அவளது அருளுக்கு ஒவ்வொருவரும் பாத்திரமாகி ஆசீர்வதிக்கப்படுகின்றனர்.

துர்க்கையின் தாயான இமவானின் மனைவி தன் மகளைப் பார்க்க விரும்பினாள். வருடத்தில் ஒன்பது நாட்கள் மட்டுமே தன் தாயைப் பார்ப்பதற்கு சிவபெருமான் துர்க்கைக்கு அனுமதி அளித்தார். இந்த குறுகிய தரிசனத்தைத் தான் நவராத்திரி எடுத்துக்காட்டுகிறது. தேவி துர்க்கை கயிலைமலைக்குத் திரும்பும் நாளான விஜயதசமியுடன் இவ்விழா முடிவடைகிறது. சில பக்தர்களின் கருத்து இது.

வங்காளத்தில் துர்க்கா பூஜை மிகப் பெரும் விழாவாகும். இந்தப் பூஜா நாட்களில் வெளியூரில் வசிப்பவர்கள் அனைவரும் தத்தம் ஊர்களுக்குத் திரும்புகின்றனர். தாய்மார்கள் தங்கள் மகன், மகள்களுடனும், மனைவிமார் தங்கள் கணவன்மாருடனும் ஒன்று சேர்கின்றனர்.

குயவன் விக்கிரகங்களை வடிப்பதிலும், ஓவியர் சித்திரங்களைத் தீட்டுவதிலும், இசைக்கலைஞன் தனது கருவிகளை திறம்பட மீட்டுவதிலும், வேதியர் மறைநூல்களை வாசிப்பதிலும் தங்கள் திறமைகளை வெளிப்படுத்துகின்றனர். பூஜை நாட்களில்

செலவழிப்பதற்கென்றே வங்காளிகள் வருடம் முழுவதும் பணத்தைச் சேர்க்கின்றனர். பிராம்மணர்களுக்கு வஸ்திரங்கள் இலவசமாக வழங்கப்படுகின்றன.

தாயின் அன்புடன் துர்க்கையை வங்காளிப் பெண்கள் வரவேற்று, கடைசி நாளில் கணவன் வீட்டிற்குச் செல்லும் தன் மகளுக்கு உரிய சடங்குகளுடன் கண்களில் கண்ணீருடன் அவளது விக்கிரகத்தை அனுப்பி வைக்கின்றனர். தாயிடமிருந்து துர்க்கை விடைபெறுவதை இது காட்டுகிறது.

கடவுள் அன்னையாக வழிபடப்படும் மிகப் பெரிய ஹிந்து விழா துர்க்கா பூஜையாகும். இறைவனின் தாய் சொரூபத்தை மிகவும் வலியுறுத்திப் பேசும் ஒரே சமயம் ஹிந்து மதமேயாகும். மனித உறவுகளில் தனது தாயுடன் ஒருவன் கொள்ளும் உறவே மிகவும் நெருங்கியதும், இனியதுமாகும். எனவே கடவுளைத் தாயாகப் பார்ப்பது சரிதானே!

துர்க்கை தெய்வீக அன்னையின் வடிவமாவாள். இறைவனின் சக்தி அம்சம் அவள். துர்க்கையின்றி சிவனுக்கு வடிவம் கிடையாது. சிவனின்றி துர்க்கைக்கு இருப்பு கிடையாது. துர்க்கையின் ஆன்மா சிவன். துர்க்கை சிவனுடன் ஐக்கியமானவள். சிவபெருமான் மௌனமான சாட்சியாவார். அவர் அசைவற்றவர். எந்தவித மாற்றமும் இல்லாதவர். பிரபஞ்ச விளையாட்டினால் அவர் பாதிக்கப்படுவதில்லை. துர்க்கைதான் அனைத்தையும் செய்கிறாள்.

இறைவனின் எங்கும் நிறைந்த பராசக்தியே அன்னை சக்தியாவாள். அன்னை பராசக்தி அவள் கைகளில் பத்துவிதமான பல்வேறு ஆயுதங்களைத் தரித்திருக்கிறாள். சிங்கத்தின் மீது அவள் அமர்ந்திருக்கிறாள். ஸத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய



துர்க்கா தேவி

இயற்கையின் முக்குணங்களின் வாயிலாக அவள் இறைவனின் லீலையை நிகழ்த்துகிறாள். அறிவு, அமைதி, காமம், சினம், பேராசை, ஆணவம், கர்வம் முதலியன அவளது தோற்றங்களாகும்.

பேச்சுக்கு அதிதேவதையான அன்பீர்ண முனிவரின் மகளான வாக், இறைவனின் சக்தியான தெய்வீக அன்னையுடன் தனது இரண்டற்ற நிலையை உணர்ந்தாள் என்று ரிக்வேத ஸம்ஹிதையின் தேவி சூக்தம் தெரிவிக்கிறது. இந்த சக்திதான் தேவர்களிடமும், மனிதர்களிடமும், மிருகங்களிடத்திலும், ஆழ்கடல் உயிரினங்களிடத்தும் வெளிப்படுகிறது.

இந்திரன் மற்றும் தேவர்கள் மீது ஞானத்தை அளித்து பரம்பொருளின் சக்தியின் துணையுடன் தான் அசுரர்களை தேவர்கள் வெல்ல முடியும் என்று பராசக்தி சொன்னதாக கேன உபநிடதத்தில் காண்கிறோம்.

பிரபஞ்சத்தின் தாயாக விளங்கும் தேவியை வழிபட்டால் ஆன்ம ஞானம் கைகூடும். கேன உபநிடதத்தில் உள்ள 'யக்ஷ ப்ரச்ன' பகுதி இதை உறுதிப் படுத்துகிறது. தெய்வீக அன்னையாம் உமாதேவியார் தேவர்களுக்கு இந்த உண்மையை எப்படி உபதேசித்தார் என்பதை அது கூறுகிறது.

எனவே, தேவி உபாசனை என்பது இறைவனது புகழ், பெருமை மற்றும் மகிமையைப் போற்றுவதேயாகும். அது சர்வேசுவரனை வணங்குவதேயாகும். ரத்த வெறி பிடித்த ஒரு ஹிந்து தேவதையே தேவி என்று ஒரு சிலரால் தவறாக எண்ணப்படுவது பரிதாபத்திற் குரியதாகும். 'இல்லை! தேவி ஒரு கொடூர அரக்கி அல்ல, அல்லது அவள் ஹிந்துக்களுக்கு மட்டும் உரிய சொத்து அல்ல. தேவி எந்த ஒரு குறிப்பிட்ட சமயத்தையும் சார்ந்தவள் அல்ல. கடவுளின் உணர்வு சக்தியே தேவி.

தேவி, சக்தி மற்றும் இது போன்ற பெயர்களுடன் தொடர்புடைய பல்வேறு வடிவங்களும் எல்லைக்கு உட்பட்ட மனித அறிவினால் கொடுக்கப்பட்ட துறவியரின் உருவகங்களேயாகும். அவை சக்தியின் இறுதியான திட்டவட்டமான விளக்கங்கள் ஆகமாட்டா.

ஆதிசக்தி மனித சிந்தனைக்கு அப்பாற்பட்டவள் ஆவாள். கீதையில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர், "இது எனது கீழான பிரகிருதி. இதற்கு அப்பால் இப் பிரபஞ்சத்தையே தாங்கும் எனது மேலான பிரகிருதி உள்ளது", என்று கூறுகிறார்.

"கடவுளின் மேலான சக்தி பல விதங்களில் வெளிப்படுகிறது. அறிவு, ஆற்றல், செயல் போன்ற பல வடிவங்களில் இறைவனின் தன்மைகள் இந்த சக்தியாகப் பரிணமிக்கின்றன," என்று உபநிஷதமும் கூறுகிறது.

உண்மையாகச் சொல்லப் போனால் அறிந்தோ அறியாமலோ இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து உயிர்களும் சக்தி உபாஸகர்களேயாம். ஏனெனில், ஏதாவது ஒருவிதத்தில் ஆற்றலைப் பெறுவதற்கு விரும்பாதவர்கள் ஒருவரும் இல்லையல்லவா! விஞ்ஞானிகளும், இயற்பியல் வல்லுநர்களும் அனைத்தும் தூய அழிக்க முடியாத சக்தியே என இப்பொழுது நிரூபித்துள்ளனர். ஒவ்வொரு வடிவத்திலும் இயங்கும் தெய்வீக சக்தியின் ஒரு வடிவமே இந்த சக்தி.

ஒரு குழந்தை தந்தையைக் காட்டிலும் தனது தாயிடம் அதிக அன்புடன் பழகுகிறது. ஏனெனில் தாய் அன்புடனும், பாசத்துடனும், பரிவுடனும் அதனுடன் பழகி அதனது ஒவ்வொரு தேவையையும் பூர்த்தி செய்கிறாள். ஆன்மீக உலகிலும் ஆன்மீக குழந்தையான சாதகன் அல்லது பக்தன், தந்தையாகிய சிவனைக் காட்டிலும் தாயாகிய சக்தியிடம் நெருங்கிய தொடர்பு

கொண்டு விளங்குகிறான். எனவே சாதகன் முதலில் சக்தியை நெருங்குவது பொருத்தமானதே. பிறகு அன்னை பராசக்தி சாதகனின் தெளிவிற்காக தனது ஆன்மீகக் குழந்தையை தந்தைக்கு அறிமுகப் படுத்துகிறாள்.

அன்னையின் கருணைக்கு எல்லை கிடையாது. அவளது பரிவு அளவு கடந்தது. அவளது அறிவு எல்லையற்றது. அவளது ஆற்றல் அளப்பரியது. அவளது புகழ் சொல்லொணாதது. அவளது கீர்த்தி அளவிடற்கரியது. லௌகிக சுபிட்சத்தையும், ஆன்மீக சுதந்திரத்தையும் அவள் உங்களுக்கு நல்குகிறாள்.

அவளைத் திறந்த மனதுடன் அணுகுங்கள். பணிவுடனும், ஒளிவுமறைவின்றியும் அவளை சரணடையுங்கள். ஒரு குழந்தையைப் போல எளிமையுடன் இருங்கள். ஆணவம், சூழ்ச்சி, சுயநலம் மற்றும் வஞ்சகத் தன்மைகளை ஈவுஇரக்கமின்றி இல்லா தாக்குங்கள். அவளிடம் பரிபூரண சரணாகதி அடையுங்கள். அவளது புகழைப் பாடுங்கள். நம்பிக்கை யுடனும், சலியாத பக்தியுடனும் அவளை வழிபடுங்கள். நவராத்திரி தினங்களில் விசேஷ பூஜை செய்யுங்கள். தீவிரமான ஆன்ம சாதனையில் ஈடுபடுவதற்கு நவராத்திரி ஏற்ற தருணமாகும். அன்னை பராசக்திக்கு மிகவும் உகந்த ஒன்பது நாட்கள் இவை. அவளது வழிபாட்டில் மூழ்குங்கள். தினமும் இத்தனை மணி நேரம், இத்தனை தடவைகள் என்று அவளது நாமஜபத்திற்கும் பாராயணத்திற்கும் ஒதுக்கி தீவிர வழிபாட்டில் ஈடுபடுங்கள்.

பண்டாசுரன் மற்றும் அவனது படைகளுடன் தேவி ஒன்பது பகல் மற்றும் ஒன்பது இரவுகள் போரிட்டாள். இந்த பண்டாசுரனின் பிறப்பும் வாழ்வும் வியக்கத்தக்கது ஆகும். சிவபெருமான் மன்மதனை தனது மூன்றாவது

கண்ணினால் எரித்தபொழுது அந்த சாம்பலிலிருந்து விநாயகப் பெருமான் ஓர் உருவத்தை சமைத்தார். சிவபிரான் அதற்கு உயிர் ஊட்டினார். இவன்தான் பயங்கரமான பண்டாசுரன். அவன் கடும் தவம் புரிந்து அதன் விளைவாக சிவபிரானிடமிருந்து ஒரு வரமும் பெற்றான். அந்த வரத்தினால் அவன் எல்லா உலகங்களையும் துன்புறுத்தத் தொடங்கினான். இந்த அசுரர்களுக்கு இரவில் அசாதாரணமான ஆற்றல் இருக்கும். அன்னை அந்த அசுரனுடன் ஒன்பது இரவுகள் போரிட்டாள். இறுதியில் விஜயதசமி எனப்படும் பத்தாவது நாளின் மாலைவேளையில் அவனைக் கொன்றாள். இந்தப் புனிதமான நன்னாளில் கல்வி பயிலுதல் ஆரம்பிக்கப்படுகிறது. இந்த தினத்தில் தான் குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் கௌரவர்களுக்கு எதிராகப் போரைத் தொடங்கும் முன் அர்ஜுனன் தேவியை வழிபட்டான்.

ராவணனுடன் யுத்தம் புரிகையில் அந்த யுத்தத்தில் அவளது உதவியை வேண்டி ஸ்ரீராமர் துர்க்கையை வழிபட்டார். விஜயதசமிக்கு முந்தைய தினங்களில் இது நிகழ்ந்தது. அவர் போரிட்டு அவளது அருளினால் வெற்றியடைந்தார்.

பண்டைய நாட்களில் விஜயதசமியன்று அரசர்கள் பெரும் படையெடுப்புகளை மேற்கொண்டனர். அவ்விதம் படையெடுப்புகளை மேற்கொள்ளாதவர்கள் அடர்ந்த காடுகளில் வேட்டையாடச் சென்றனர். இன்றும்கூட ராஜபுதனத்தில் விஜயதசமியன்று சில கோட்டைகள் மீது ஜனங்கள் வேடிக்கையாகப் படையெடுத்தலை ஏற்பாடு செய்கின்றனர்.

ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியின் வாழ்க்கையுடன் இந்த நாள் மிகவும் தொடர்பு கொண்டுள்ளது. உலகின் சரித்திரத்திலே வேறு எங்கும் ஸ்ரீராமரைப் போன்ற

மனிதனை, மகனை, சகோதரனை, கணவனை, தந்தையை, அரசனைக் காண முடியாது. ஸ்ரீராமனின் பெருமையை விளக்க மஹரிஷி வால்மீகி பெரிதும் முயன்றிருக்கிறார். தசரா தினத்தன்று நம்மிடம் உள்ள பயங்கர அசுரனான ஆணவத்தை அழித்து நாம் எங்கு சென்றாலும் அன்பையும் அமைதியையும் பரப்ப நாம் உறுதி கொள்வோமேயானால் அதுதான் உண்மையான விழாக் கொண்டாட்டமாகும். நல்ல குணவான்களாக மாற நாமனைவரும் உறுதி கொள்வோமாக. நாம் உறுதிபூண்டு செயல்படுவோமாக. பாரெங்கும் ஸ்ரீராமனின் சரிதம் புகழ்பெற்று விளங்குகிறது. அவனது போதனைகளில் நூற்றில் ஒரு பங்கையாவது நாம் கடைப்பிடிக்க முயன்றால், நம் வாழ்வு ரோஜாவைக் காட்டிலும் பன்மடங்கு மணம் மிக்கதாகவும், தங்கத்தைக் காட்டிலும் பல மடங்கு ஒளிமிக்கதாகவும் திகழும்.

தசரா என்பது 'தசஹர' என்றும் பொருள்படும். அதாவது ராவணனின் பத்து தலைகளை அறுத்தது என்பது பொருள். எனவே ஆணவம் என்னும் அரக்கனின் பத்துத் தலைகளான காமம், கர்வம், கோபம், பேராசை, மோஹம், ஆசை, பொறுமை, குரோதம், சுயநலம், வஞ்சகம் ஆகியவற்றை அறுத்து தசராவைக் கொண்டாட நாம் இந்த நன்னாளில் உறுதி பூணுவோமாக.

சமயச் சடங்குகள், விரதங்கள் மற்றும் வழிபாடுகளுக்கு பல்வேறு விளக்கங்கள் உள்ளன. தெய்வீகத்தை வழிபடுவதைத் தவிர அவை சரித்திரத்தின் பிரமிக்கத்தக்க நிகழ்ச்சிகளை விளக்குகின்றன. ஆன்மீக நோக்கில் பல அற்புதங்களை தெரிவிக்கின்றன. இறை உணர்விற்கான தனி மனிதனின் வழிகாட்டிகளாகவும் திகழ்கின்றன.

வெளிப்படையாகப் பார்த்தால் தேவியின் ஒன்பது நாள் வழிபாடு வெற்றியைக் கொண்டாடுவதேயாகும். பயங்கரமான மஹிஷாஸுரன் மற்றும் அவனது குழுவைச் சார்ந்த அரக்கர்களை தேவி வெற்றி கொண்டதைக் குறிப்பதுவே இந்த ஒன்பது நாள் விழாவாகும். ஆனால் ஆன்மீக சாதகனுக்கு இந்த ஒன்பது நாட்களை மூன்று மூன்று நாட்களாகப் பிரித்திருப்பது தேவியின் பல்வேறு தெய்வீக அம்சங்களை வழிபடுவதற்கான நடைமுறை உண்மையை வெளிப்படுத்துவதாக அமைகிறது. பரந்த அளவில் அது மனிதன் கடவுளாவதையும், ஜீவன் சிவனாவதையும் குறிக்கிறது. தனித்த முறையில் அவனது ஆன்மீக வழிமுறையை அது சுட்டிக் காண்பிக்கிறது.

எனவே, நவராத்திரியின் ஆன்மீக உட்பொருளை நாம் விரிவாகக் காண்போம்.

வாழ்வின் முக்கிய இலட்சியம் பரம்பொருளுடன் உங்களது நித்திய ஒன்றிப்பை உணர்வதுவேயாகும். தெய்வீகச் சாயலில் வளர்வதுவே அது. அதனுடன் உங்களது ஒன்றித்தலை உணர, அதனுடன் நீங்களும் இணைய, அந்த தெய்வீகத்தின் சாயலுடன் நீங்களும் ஒருங்கே வளர்வதேயாகும். எனவே, சாதகன் முதற்படியாக அவன் பிறவியெடுத்த பின் அவனை வந்தடைந்துள்ள கணக்கற்ற அசுர இயல்புகளையும் மாசுகளையும் நீக்கித் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். பின்னர் உயர்ந்த பண்புகளையும், புனிதமான தெய்வீக குணங்களையும் பெற வேண்டும். இவ்விதம் மிகவும் அமைதியாகத் திகழும் தடாகத்தின் தெள்ளிய நீரில் சூரியனின் ஒளிமிக்க கிரணங்கள் போல தூய அறிவு அவனிடம் பிரகாசிக்கிறது.

இதற்கு உறுதியான எண்ணம், திட்டவட்டமான முயற்சி, மேலும் இடைவிடாத உழைப்பு வேண்டும்.

அதாவது ஆற்றலும், எல்லையற்ற சக்தியுமே அடிப்படைத் தேவைகள். இதற்கு அன்னை பராசக்தி சாதகன் மூலம் செயல்பட வேண்டும்.

முதல் மூன்று தினங்களில் மேலாம் ஆற்றலான பயங்கர துர்க்கையாக அவள் எவ்விதம் வணங்கப் படுகிறாள் என்று பார்ப்போம். உங்களிடம் நிலவும் எல்லா தீமைகளையும், கெட்ட குணங்களையும், மாசுக்களையும் இல்லாதாக்குமாறு நீங்கள் துர்க்கா மாதாவிடம் பிரார்த்தனை செய்கிறீர்கள். ஆன்மீக சாதகனிடம் நிலவும் கீழான விலங்கு இயல்புகளுடன் அவள் போரிட்டு அவற்றை இல்லாதாக்க வேண்டியுள்ளது. அது தவிர உங்களது ஆன்மீகப் பயிற்சியையும் அதனது பல்வேறு ஆபத்துகள் மற்றும் சோதனைகளிலிருந்து காக்கும் சக்தியாகவும் அவள் விளங்குகின்றாள். இவ்விதம் முதல் மூன்று தினங்கள் உங்கள் மனத்தில் நிலவும் அசுத்தங்களையும் தீய சுபாவங்களையும் அகற்ற அன்னையின் சம்ஹார சக்தியை வழிபடுவதாக அமைகிறது.

பழைய தீய வழக்கங்களையும் அசுத்தமான இயல்புகளையும் எதிரிடை ரீதியில் இல்லாதாக்கும் உங்கள் முயற்சியில் ஈடுபட்ட பின், அடுத்த முயற்சி நீக்கப்பட்ட அசுர இயல்புகளின் இடத்தில் ஒரு சீரிய ஆன்மீக தன்மையை உண்டாக்குவதேயாகும். பகவத்கீதையில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் விளக்கிக் கூறும் தெய்வீக இயல்புகளைப் பெற வேண்டும். சாதகன் அனைத்து நற்பண்புகளையும் வளர்க்க வேண்டும். தெய்வீக ஞானமாம் அரிய பொக்கிஷத்தைப் பெறுவதற்காக அவன் ஒப்பற்ற ஆன்மீகச் செல்வத்தைப் பெற்றாக வேண்டும். இந்த நல்ல குணங்களை வளர்க்கும் முயற்சியானது ஒழுங்கான ரீதியில் மேற்கொள்ளப் படாவிட்டால், பழைய அசுர இயல்புகள் மீண்டும்

மீண்டும் தலைதூக்கும். எனவே சாதகனின் முன்னேற்றத்தில் முந்தையதைப் போலவே இந்த நிலையும் முக்கியமானதாகும். அடிப்படை வேறுபாடு இதுதான்: முந்தையது, மோசமான ஆணவத்துடன் கூடிய கீழான இயல்புகளைத் திட்டவட்டமாக அழித்தொழித்தல், பிந்தையது, தூய்மையினை வளர்க்க வேண்டி மேற்கொள்ளப்படும் முறையான, சீரான, அமைதியான முயற்சியாகும். சாதகனின் இந்த மனோரம்யமான சாதனை அன்னை லக்ஷ்மியின் வழிபாடாகச் சித்தரிக்கப்படுகிறது. அவள் அவளுடைய சீடர்கள்பால் தெய்வ சம்பத் எனப்படும் வற்றாத தெய்வீகச் செல்வத்தை அருளுகிறாள். அவள் தூய்மையின் வடிவம். இவ்வாறு இரண்டாவது நிலையில் அமையும் மூன்று தினங்களில் லக்ஷ்மி தேவி வழிபடப்படுகிறாள்.

தீய இயல்புகளை நீக்கி, சாத்துவிக, அதாவது தூய இயல்பினை வளர்த்துக் கொண்டால் சாதகன் ஞானத்தைப் பெறத் தகுதியுடைவன் ஆகிவிடுகிறான். மேலான ஞானமாம் ஒளியினைப் பெற அவன் தயாராகி விடுகிறான். இந்த நிலையில் வருகிறது அன்னை ஸரஸ்வதியின் வழிபாடு. அவள் தெய்வீக அறிவின் திருவுருவம். பரம்பொருளின் ஞானவடிவம் அவள். அவளுடைய தெய்வீக வீணையின் நாதமானது உபநிடதங்களின் உயரிய ஒலிகளையும், ஓம்காரத்தின் உட்பொருளையும் எழுப்புகின்றது. மேலான மோன ஒலியின் ஞானத்தைத் தந்தருளி தூய வெள்ளை உடை உடுத்திய அவள் ஆத்ம ஞானத்தையும் அருளுகிறாள். எனவே, ஞானத்தை நல்கும் ஸரஸ்வதியை வழிபடுதல் மூன்றாவது நிலையாகிறது.

இவ்வுலகில் வாழும்போதே ஸரஸ்வதி தேவியின் அருளால் ஞானத்தைப் பெற்று விடுதலை அடைந்த வெற்றியைக் குறிப்பதுவே பத்தாம் நாளான

விஜயதசமியாகும். ஆன்மா அதனது மேலாம் நிலையான ஸச்சிதானந்தப் பிரம்மனில் நிலைபெற்றுள்ளது. இந்த தினம் லட்சியத்தை அடைந்த வெற்றியைக் குறிக்கிறது. வெற்றிக் கொடி உயர்ந்து பறக்கிறது. நானே அவன்! நானே அவன்!

இந்த ஏற்பாடு சாதகனின் ஆன்மீக முன்னேற்றத் தில் ஒரு விசேஷ நிலைமையைக் குறிக்கிறது. படிப்படியான வளர்ச்சிப் பாதையில் ஒவ்வொருவரும் கடந்து செல்ல வேண்டிய படிகளை அது குறிக்கிறது. ஒன்று மற்றொன்றிற்கு வழிவகுக்கிறது. இதில் ஏதாவது சுருக்கம் செய்தால் அது எதிர்பாராத தோல்வியில் முடியும். இப்பொழுது அறியாத பல சாதகர்கள் முதற் படிகளான தூய்மை மற்றும் தெய்வீகப் பண்புகளைப் பெறாமல், நேரடியாக எடுத்த எடுப்பிலேயே ஞானத்தைப் பெற முனைகின்றனர். பிறகு அவர்கள் தங்கள் முயற்சியில் வெற்றி பெறவில்லை என்று புகார் கூறுகின்றனர். அவர்களால் எப்படி வெற்றி பெற முடியும்? அசுத்தங்கள் அகற்றப்பட்டு, தூய்மை வளர்க்கப் பட்டாலன்றி அறிவு வர வாய்ப்பு இல்லை. மோசமான மண்ணில் நல்ல செடி ஒன்று எவ்விதம் வளர முடியும்?

எனவே, இந்த முறையைப் பின்பற்றுங்கள் : உங்கள் முயற்சிகள் வெற்றி அடையும். இதுவே உங்கள் வழி. நீங்கள் ஒரு தீய குணத்தை இல்லாதாக்குகையில், அதற்கு மாறான நல்ல குணத்தை வளருங்கள். இந்த முறையினால் உங்களது இலட்சியமான ஆத்மானுபவத்தை அடையும் உயரிய நிலையினை நீங்கள் விரைவில் எய்துவீர்கள். பின் எல்லா ஞானமும் உங்களுடையதே: நீங்கள் அனைத்தையும் அறிந்தவர்களாவீர்கள். சர்வ வல்லமை வாய்ந்தவர்களாவீர்கள். எங்கும் நிறைந்துள்ள தன்மை யையும் நீங்கள் உணர்வீர்கள். உங்களை நீங்கள் அனைத்திலும் காண்பீர்கள். பிறப்பிறப்புச் சக்கரத்திலி

ருந்தும் லோகாயதம் எனும் அரக்கனிடமிருந்தும் விடுபட்டு நிரந்தர வெற்றியினை நீங்கள் அடைவீர்கள். இனி துன்பமில்லை, துக்கமில்லை, பிறப்பில்லை, மரணமில்லை! வெற்றி, வெற்றி உங்களதே!

அன்னை பராசக்தி மாதா கீ ஜய்! படிப்படியாக அவள் ஆன்மீக ஏணியில் உங்களை மேலே இட்டுச் சென்று இறைவனுடன் ஒன்றிக்கச் செய்வாளாக.

ரிஷிகேசத்தில் இருக்கும் சிவானந்தாசிரமத்தில் துர்க்கா பூஜை விழாவின் போது கீழ்க்காணும் நிகழ்ச்சிகள் இடம்பெறுகின்றன.

1. துர்க்கா ஸப்தஸதீ பாராயணத்துடன் தினமும் அன்னை பராசக்தியின் விசேஷ வழிபாடு.

2. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்துடன் ஆலயத்தில் அன்னைக்கு லக்ஷார்ச்சனை செய்யப்படுகிறது.

3. ஐம் ஹ்ரீம் க்லீம் சாமுண்டாயை விச்சே என்ற நவார்ண மந்திர ஜபம் அல்லது அவரவரது இஷ்ட தெய்வ மந்திர பாராயணத்தை அதிகமதிகம் அனைவரும் செய்யுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

4. முதல் மூன்று நாட்களில் துர்க்கையன்னை, அடுத்த மூன்று நாட்களில் லக்ஷ்மி தேவி, இறுதி மூன்று நாட்களில் ஸரஸ்வதி தேவி ஆகியோரின் படங்களுடன் விசேஷமாக அலங்கரிக்கப்பட்ட மேடை மாலை ஸத்ஸங்கத்திற்காக ஏற்பாடு செய்யப்படுகிறது. மறை நூல்களிலிருந்து பல முக்கிய ஸ்தோத்திரங்கள் பாரா யணம் செய்யப்படுகின்றன. பல கீர்த்தனைகள் பாடப் படுகின்றன. துர்க்கா ஸப்தஸதீ மற்றும் தேவீ மாஹாத்ம்யம் வாசிக்கப்பட்டு சொற்பொழிவில் விளக் கப்படுகிறது: அர்ச்சனை மற்றும் ஆரத்தியுடன் நிகழ்ச்சி முடிவுறுகிறது. சில சமயங்களில் தேவீ மாஹாத்ம்யத் திலிருந்து சில காட்சிகள் நாடகமாக நடிக்கப்படுகின்றன.

5. ஆர்வம் மிக்க ஆன்ம சாதகர்கள் எல்லா ஒன்பது தினங்களிலுமோ அல்லது மூன்று நாட்களில் ஒவ்வொரு நாட்களிலுமோ வெறும் பாலும் பழமும் மட்டும் சாப்பிட்டு விரதம் அனுஷ்டிக்கின்றனர்.

6. புத்தகங்கள் தவிர தட்டச்சுக் கருவிகள், அச்சு இயந்திரங்கள் போன்ற அனைத்துமே ஸரஸ்வதி பூஜை யன்று ஒன்பதாவது தினத்தில் விசேஷமாக பூஜிக்கப்படுகின்றன.

7. விஜயதசமியன்று எல்லா சாதகர்களும் மொத்தமாக அவரவர் வணங்கும் இஷ்ட தெய்வத்திற்கேற்ப தீட்சை பெறுகின்றனர். புனித ஸன்யாஸ ஆசிரமத்திற்குத் தகுதியுள்ள சாதகர்கள் தீட்சை அளிக்கப்படுகின்றனர். இளம் குழந்தைகளுக்கு மட்டுமல்லாது, வயதான குழந்தைகளுக்கும் அக்ஷராப் யாஸம் செய்விக்கப்படுகிறது. இசை போன்றவற்றில் புதிய மாணவர்கள் பயிற்சியைத் தொடங்குகின்றனர். காலை ஸத்ஸங்கத்தில் ஒன்பதாம் நாள் வழிபடப்பட்ட நூல்கள் மீண்டும் வணங்கப்பட்டு, கீதை, உபநிடதம், பிரம்மஸூத்திரம், ராமாயணம், ஸ்ரீமத் பாகவதம் போன்ற நூல்களிலிருந்து ஒவ்வொரு அத்யாயம் வாசிக்கப் படுகின்றது.

8. விஜயதசமியன்று கன்யா பூஜையும் செய்யப்படுகிறது. பத்து வயதுக்குக் கீழ்ப்பட்ட ஒன்பது சிறுமிகள் தெய்வீக அன்னையின் வடிவமாக பூஜை செய்யப்பட்டு வணங்கப்படுகின்றனர். புத்தாடைகள் அவர்களுக்கு வழங்கப்படுகின்றன. நல்ல விருந்தும் அவர்களுக்கு அளிக்கப்படுகிறது.

9. கடைசி நாளன்று ஆலயத்தில் அன்னை பராசக்தியைப் போற்றிப் புகழும் துர்கா ஸப்தஸதீ போன்ற ஸ்தோத்திரங்களுடன் ஒரு பெரிய ஹோமம் நடத்தப்படுகிறது.

# 4. காயத்ரி ஜபதினம்

சான்றோர்களின் உணர்ச்சியூட்டும் வாழ்க்கையினை மீண்டும் மீண்டும் ஒருவனுடைய மனதில் எழச் செய்வதற்காக பழைமையான சமயங்களைச் சேர்ந்த அறிஞர்கள் அனைவரும் வருடத்தில் சில குறிப்பிட்ட நாட்களை விசேஷமாக ஒதுக்கி இருக்கின்றனர். இந்த புனித நாட்களில் நாட்டு மக்களும், சமுதாயத்தினரும் இந்தச் சான்றோர் பெருமக்களின் பெருமையினை எடுத்துக்கூறி, இவர்களது நினைவு என்றென்றும் நம்மிடையே இருக்க வேண்டும் என்பதற்காக அவர்களது வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் நினைவுகூருகின்றனர். இவ்விதம் ஹிந்துப் பஞ்சாங்கத்தில் கீதா ஜயந்தி, குரு பூர்ணிமா, சிவராத்திரி, வைகுண்ட ஏகாதசி மற்றும் முனிவர்கள், அவதாரங்களின் ஜயந்தி நாட்கள் ஆகியவற்றை விசேஷமாகக் குறிப்பிட்டிருக்க காண்கிறோம். மந்திரங்களிலெல்லாம் மிகவும் பெருமை வாய்ந்ததும், புகழ் பெற்றதுமான காயத்ரி மந்திரத்தை நமக்கு நினைவூட்டும் காயத்ரி மந்திர ஜப தினம் இத்தகையதொரு பெருமை வாய்ந்த தினமாகும்.

ஒவ்வொரு உண்மையான ஹிந்துவின் வாழ்வாகவும் ஆதாரமாகவும் விளங்குவது காயத்ரியாகும். இந்த மந்திரத்தைப் பாராயணம் செய்பவனைக் காக்கும் ஆன்மீகக் கேடயமாகவும், கோட்டையாகவும் இது விளங்குகிறது. 'ஜபிப்பவனைக் காப்பது' என்பது தான் காயத்ரி என்ற வார்த்தையின் பொருளாகும். மனிதனை தேவனாக்கி அவனுக்கு மிக உயர்ந்த ஆன்மீக அறிவையும் ஒளியையும் நல்கும் தெய்வீக சக்தியே காயத்ரி. ஒருவரது வழிபடும் தெய்வம் எதுவாக இருந்தாலும், தினமும் ஒரு சில மாலைகள் காயத்ரி ஜபம்

செய்வது (108 மணிகள் கொண்ட ஜபமாலை) அளவற்ற அற்புத பலன்களை அளிக்கும். மேலான பரமாத்மனை நோக்கிய ஒளியை வேண்டும் ஓர் ஒப்பற்ற சமரச பிரார்த்தனையே அது. பரப் பிரம்ம காயத்ரி மந்திரம் அனைத்து மந்திரங்களிலும் மிக முக்கியமானதாகும். எந்தப் பிரிவைச் சார்ந்த அந்தணனுக்கும் ஒப்பற்ற வழிகாட்டும் ஒளியாக இது சொல்லப்பட்டிருக்கிறது. பிரம்மச்சர்யத்தைக் கடைப்பிடிக்கும் பிரம்மச்சாரியா கட்டும், இல்லறத்தில் வாழும் கிருஹஸ்தனாகட்டும், அல்லது ஓய்வுபெற்ற வானப்ரஸ்தன்ாகட்டும் - இந்த மந்திரத்தைத் தினமும் பாராயணம் செய்ய வேண்டும். சன்யாசி இந்த மந்திரத்திற்குப் பதிலாக 'ஓம்' ஜபம் செய்யலாம்.

உங்களுக்கு விருப்பமான எந்த உருவத்தில் நீங்கள் தியானம் செய்யும்போதும் காயத்ரி மந்திரத்தை நீங்கள் பாராயணம் செய்யலாம் என்பதுதான் இதன் தனிச் சிறப்பாகும். பக்தர்கள் பலரால் காயத்ரி ஒரு பெண் தெய்வமாகக் கருதப்படுகிறாள். கடவுளை அன்னையாக வழிபடுவோர் இவ்வாறு எண்ணுகின்றனர். ஆனால் உண்மையில் காயத்ரி மந்திரம் பெண்ணைப் பற்றிப் பேசுவதே கிடையாது. காயத்ரி மந்திரம் முழுவதும் பெண்ணைப் பற்றிய குறிப்பே கிடையாது. பெண்பாலாகத் தோன்றும் காயத்ரி வார்த்தை அதன் தேவதையைப் பெண்ணாக ஆக்கத் தேவையில்லை. "காயத்ரீ" என்ற பதம் சீர்வகையைக் குறிக்கிறதே தவிர காயத்ரி தேவியை அல்ல.

சிலர் காயத்ரி மந்திரத்தின் அதிஷ்டான தேவதை சூரியன் எனக் கருதுகின்றனர். உண்மையில் இந்தக் கருத்தும் சிறிது மாற்றிக் கொள்ளப்பட வேண்டியதே. அது குறிக்கும் சூரியன் நம் ஊனக் கண்களுக்கு முன் பூமிக்கு மேல் ஒளிரும் சூரியன் அல்ல; சூரியனோ அல்லது சந்திரனோ ஒளிர்விக்க முடியாத அந்த நிர்குண

நிராகார பிரம்மனையே 'தத் ஸவிது:' - 'அந்த சூரியன்' என்ற பதம் குறிக்கிறது.

எனவே பரப் பிரம்மமே அதனது அதிஷ்டான தெய்வம். ஆகையால் இது எல்லா மந்திரங்களிலும் மிகச் சிறந்ததாகக் கருதப்படுகிறது. எனவே பிற மந்திரங்களின் பின் செல்வானேன்? மந்திரங்களின் மகுடமாக விளங்குவது காயத்ரி. அனைத்து மந்திரங்களிலும், சக்தி வாய்ந்தது அதுவே. '*ந காயத்ரய : பரோ மந்த்ர :*' - காயத்ரியை விடச் சிறந்த மந்திரம் கிடையாது.

காயத்ரியிலுள்ள ஒவ்வொரு வார்த்தையும், ஒவ்வொரு எழுத்தும் மிகச் சிறந்த வேதாந்த தத்துவத்தைத் தன்பால் கொண்டு திகழ்கிறது. காயத்ரி ஜபம் செய்யுங்கள். அது அமிருதமாகிய அழியா நிலையை அளிக்கவல்லது.

*ஓம் பூர் புவஸ் ஸ்வ:*
*தத் ஸவிதுர் வரேண்யம்*

*பர்கோ தேவஸ்ய தீமஹி*
*தியோ யோ ந: ப்ரசோதயாத்*

ஓம் : பரப்பிரம்மத்தைக் குறிப்பது

பூ :- பூலோகம் அல்லது பூவுலகம்

புவ :- நட்சத்திர லோகம்

ஸ்வ : தேவலோகம்

தத் : அந்த; மேலான பரமாத்மா; கடவுள்

ஸவிது : அனைத்தையும் உண்டாக்குபவர்

வரேண்யம் : வணங்கத்தக்க

பர்க : பாபத்தையும் அறியாமையும் அகற்றுபவர்;
புகழ், ஒளி

தேவஸ்ய : ஒளிரும், சுடர்விடும்

தீ மஹி : நாம் தியானிக்கிறோம்.

திய : புத்தி, அறிவு

யோ : யார்

ந : நம்முடைய

ப்ரசோதயாத் : தூண்டுவாராக, வழிநடத்துவாராக.

பொருள் : இப்பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தவரும், வணங்கத்தக்கவரும், அறிவு மற்றும் ஜோதி வடிவான வரும், அனைத்துப் பாபத்தையும் அறியாமையையும் அகற்றுபவருமான அந்த மேலான தெய்வத்தின் மகிமையை நாம் தியானிக்கிறோம். அவர் நம் அறிவைத் துலக்குவாராக.

இதில் ஐந்து பகுதிகள் உள்ளன : *ஓம்* என்பது முதல் பகுதி; *பூர் புவஸ்ஸுவ:* என்பது இரண்டாவது; *தத்ஸவிதுர் வரேண்யம்* என்பது மூன்றாவது; *பர்கோ தேவஸ்ய தீ மஹி* என்பது நான்காவது; *தியோ யோ ந: ப்ர சோதயாத்* என்பது ஐந்தாவது பகுதியாகும். இந்த மந்திரத்தை உச்சரிக்கையில் ஒவ்வொரு பகுதிக்குப் பிறகும் சிறிது இடைவெளிவிட வேண்டும்.

காயத்ரி மந்திரமாகிய இந்த ஒப்பற்ற பொக்கிஷத்தை இன்றைய இளைஞர்கள் புறக்கணிக் கின்றனர். இது உண்மையிலேயே மிகவும் வருந்தத் தக்கது. இந்த காயத்ரி மந்திர ஜப புனித நாளில் உங்கள் கண்களைத் திறந்து, காயத்ரி ஜபத்தை பயபக்தியுடன் தொடங்குங்கள். காயத்ரி ஜப தினத்தன்று குறைந்தது 108 தடவையாவது (1008 தடவை ஜபித்தால் மிகவும் நல்லது!) ஜபம் செய்யுங்கள். பிறகு நாள் தவறாமல் தினமும் 108 முறை ஜபம் செய்யும் வழக்கத்தை மேற்கொள்ளுங்கள்.

புனிதமான காயத்ரி ஜபதினத்தால் உலகம் முழுவதும் காயத்ரியின் பெருமையை உணரட்டும்! இந்த வினாடி முதல் தினமும் காயத்ரியை ஜபிக்கும் விரதம் மேற்கொண்டு நீங்கள் மும்மடங்கு ஆசீர்வதிக்கப்பட்டவர்களாக ஆவீர்களாக! காயத்ரி மந்திரத்தின் உட்பொருளை நீங்கள் உணர்வீர்களாக!

ரக்ஷா பந்தன் அல்லது ஆவணி அவிட்டத் (ஜூலை -ஆகஸ்டு)திற்கு அடுத்த நாள் காயத்ரி ஜபம் பின்பற்றப் படுகிறது.

# 5. குரு பூர்ணிமா

ஜூலை - ஆகஸ்டு மாதத்தில் (ஆஷாட மாதம்) வரும் புனித நாளான குரு பௌர்ணமி மிகமிகப் புனிதம் வாய்ந்த நாளாகும். இந்த நாளில் பகவான் ஸ்ரீவியாஸரை நினைவு கூரும் விதத்தில் ஸன்யாஸிகள் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தங்கி மஹரிஷி வியாஸரால் இயற்றப்பட்ட புண்ணிய நூலான பிரம்ம சூத்திரத்தைப் படித்து விளக்கம் சொல்லவும், வேதாந்த தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடவும் தங்களை அர்ப்பணித்துக் கொள்கின்றனர்.

நான்கு வேதங்கள், பதினெட்டு புராணங்கள், மஹாபாரதம் மற்றும் ஸ்ரீமத் பாகவதம் போன்றவற்றைத் தொகுத்து எந்தக் காலத்திலும் மனித குலம் மறக்கமுடியாத மாபெரும் தொண்டு செய்திருப்பவர் ஸ்ரீவியாஸர். அவர் தந்துள்ள பெருமை மிக்க அந்த நூல்களைப் படித்து, கலிகாலத்தில் மனித குலம் உய்வதற்காக அவர் காட்டியுள்ள வழியில் நாம் நிற்க முயல்வதுதான் அவருக்கு நாம் செய்யும் நன்றிக் கடனாகும். இந்தத் தெய்வீக புருஷரை மதிக்கும் விதத்தில் இந்த நாளில் எல்லா ஆன்மீக சாதகர்களும், பக்தர்களும் வியாஸ பூஜை செய்து தங்கள் குருநாதரை வணங்கி வழிபடுகின்றனர். துறவிகள், இறைமனிதர்கள் மற்றும் சன்யாசிகள் மிகுந்த பக்தி சிரத்தையுடன் இல்லறத்தாரால் வணங்கப்பட்டு தானம் அளிக்கப்படுகின்றனர். 'சாதுர்மாஸ்யம்' (நான்கு மாதங்கள்) என்றழைக்கப்படும் பகுதி இந்த நாளில்தான் தொடங்குகிறது. அதை அடுத்து வரும் நான்கு மாத மழைக் காலத்தில் சன்யாசிகள் ஒரே இடத்தில் தங்கியிருந்து பிரம்மசூத்திரம் படித்து தியானத்தில் ஈடுபடுகின்றனர்.

இந்த மகிமை வாய்ந்த தினத்தின் உட்பொருளைத் தெரிந்து கொள்ளுங்கள். ஆவலுடன் எதிர்பார்த்த மழை

வரும் நன்னாளை அது குறிக்கிறது. கோடை காலத்தில் ஆவியாகி மேகமாகத் திரண்டவை இப்பொழுது பூமியில் புதிய பயிர்கள் உண்டாகக் காரணமான மழையாகப் பொழியப் போகின்றன. அதைப்போல பொறுமையான படிப்பினால் தாங்கள் பெற்றுள்ள அனைத்து தத்துவத்தையும், கொள்கைகளையும் நடைமுறையில் கொண்டு வருவதற்கு அனைவரும் முயற்சியை மேற்கொள்ளும் நன்னாள் இது. சாதகர்கள் இந்த நன்னாளில் பக்தி சிரத்தையுடன் தங்களது நடைமுறை ஆன்மீக சாதனையை தீவிரப்படுத்த உறுதி ஏற்கிறார்கள்.

புதிய ஆன்மீக அலைகளை உண்டாக்குங்கள். நீங்கள் கற்றது, கேட்டது, பார்த்தது, படித்தது அனைத்தும் சாதனையின் மூலம் பரந்த அன்பு, தொடர்ந்த தொண்டு, அனைத்துயிரிலும் இலங்கும் ஆண்டவனை வழிபடுதல் போன்றவையாகப் பரிணமிக்கட்டும். இந்த நாளில் வெறும் பால், பழம் மட்டும் உட்கொண்டு தீவிரமான ஜபம், தியானத்தில் ஈடுபடுங்கள். பிரம்ம சூத்திரத்தைப் படியுங்கள். குரு பூர்ணிமாவை அடுத்து வரும் நான்கு மாதங்களில் உங்கள் குரு மந்திரத்தை ஜபம் செய்யுங்கள். உங்களுக்கு மிகுந்த நலம் கிட்டும்.

ஒருவரது குருநாதரை வழிபடும் நாள் பக்திமிக்க ஆன்ம சாதகனுக்கு மகிழ்ச்சிக்குரிய ஒரு நன்னாளாகும். தனது அபிமான குருவிற்கு தன்னுடைய பணிவான நமஸ்காரத்தைத் தெரிவிக்கும் இந்த வாய்ப்பை சாதகர்கள் ஆவலுடனும் பக்தியுடனும் எதிர்பார்க்கின்றனர். பற்று எனும் பந்தத்திலிருந்து சீடனை குரு விடுவித்து சம்சார சக்கரத்திலிருந்து அவனுக்கு விடுதலை அளிக்கிறார்.

"ஆண்டவனிடம் எவனுக்கு பக்தி இருக்கிறதோ, ஆண்டவனிடம் இருப்பதைப் போல குருவினிடமும் எவனுக்கு அபாரமான பக்தி இருக்கிறதோ அவனுக்கு

இங்கே குறிப்பிடப்படும் ரகசியங்கள் புலப்படுகின்றன'', என்று சுருதிகள் கூறுகின்றன. குரு பிரம்மமெனும் பரம்பொருளான கடவுளே ஆவார். உங்கள் அந்தராத்மாவிலிருந்து அவர் உங்களை ஊக்குவிக்கிறார். அவர் எங்கும் நிறைந்தவர்.

ஒரு புதுப் பார்வைக் கோணத்தைப் பெறுங்கள். அனைத்துப் பிரபஞ்சத்தையும் குருவின் வடிவமாகப் பாருங்கள். இந்தப் படைப்பின் ஒவ்வொரு பொருளிலும் குருவின் வழிகாட்டும் கரத்தையும், உத்வேகமூட்டும் குரலையும், ஒளியூட்டும் ஸ்பரிசத்தையும் உணருங்கள். உங்களது மாறிய பார்வையில் உலகம் முழுவதுமே இப்பொழுது மாறிக் காட்சி தரும். உலகமாகிய குரு வாழ்வின் முக்கிய ரகசியங்களையெல்லாம் உங்களுக்கு வெளிக்காட்டி, ஞானத்தையும் உங்களுக்கு நல்கும். கண்ணுக்குப் புலப்படும் இயற்கையின் வடிவில் தெரியும் பரம குரு வாழ்வின் மிக முக்கிய பாடங்களை உங்களுக்குப் புகட்டுவார்.

அவதூத தத்தாத்ரேயருக்கே பாடம் புகட்டிய இந்தப் பரமகுருவை தினமும் வணங்குங்கள். இறைவனாகவும், குருவிற்குக் குருவாகக் கருதப்படும் தத்தாத்ரேயர் இயற்கையையே குருவாகக் கொண்டார். இயற்கையின் இருபத்து நான்கு படைப்புகளிடமிருந்து அவர் பாடம் கற்றார். எனவே அவருக்கு 24 குருமார் உண்டு என்று சொல்லப்படுகிறது. பொறுமைக்கு இலக்கணமான பூமாதேவி, தியாகத்தின் சின்னமான நிழல்தரும் பழமரம், சிறு விதையில் அடங்கிக் கிடக்கும் பிரம்மாண்டமான ஆலமரம், பெரும் பெரும் பாறைகளையும் கரைக்கவல்ல சிறு சிறு மழைத் துளிகள், ஒழுங்கு தவறாமல் குறித்த காலத்தில் செயல்படும் கோள்களும் பருவ காலங்களும் அவருக்கு தெய்வீக குருவாகத் திகழ்ந்தனர். எவரால்

பார்க்க முடியுமோ, கேட்க முடியுமோ அவர்கள் பாடம் கற்பார்கள்.

எதையும் கற்கும் ஆர்வமுள்ளவர்களாகத் திகழுங்கள். ஒன்றுக்கும் உதவாத ஆணவத்தை விடுங்கள். இயற்கையில் புதைந்து கிடக்கும் அனைத்துப் பொக்கிஷங்களும் உங்களுடையதாகும். வெகு குறுகிய காலத்தில் நீங்கள் முன்னேற்றமடைந்து பூரணத்துவத்தை அடைவீர்கள். மலைத் தென்றல் போல தூய்மையுடனும் பற்றற்றும் விளங்குங்கள். தங்களது இலட்சியமான கடலை நோக்கி நதிகள் யாவும் தொடர்ந்து, நிதானமாக இடையறாது ஓடுவது போல உங்களது அனைத்து எண்ணங்கள், அனைத்து சொற்கள், அனைத்து செயல்களும் இலட்சியமான சத்சித் ஆனந்தப் பரம்பொருளை நோக்கியதாகவே அமையட்டும்.

சூரியனின் கண்ணைப் பறிக்கும் ஒளியை சந்திரன் பிரதிபலித்து ஒளிர்கிறது. சூரியனின் மேலான ஒளியை பௌர்ணமி நாளன்று முழுநிலா பிரதிபலிக்கிறது. அது சூரியனைப் பெருமைப்படுத்துகிறது. தன்னலமற்ற தொண்டு மற்றும் சாதனை எனும் தீயின் மூலம் உங்களைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுங்கள். பௌர்ணமி நிலவைப் போல ஆன்மாவின் உயர் ஒளியைப் பிரதிபலியுங்கள். ஒளிக்கெல்லாம் ஒளியான பிரம்ம தேஜஸைப் பிரதிபலிப்பவராக ஆகுங்கள். "சூரியனுக்கெல்லாம் சூரியனான தெய்வீகத்தின் ஜீவசாட்சியாக நான் ஆவேனாக" - என்பதை உங்கள் இலட்சியமாகக் கொள்வீர்களாக.

பரமாத்மனே உண்மை. அவரே அனைத்தின் ஆன்மா. எல்லாம் அவரே. இந்தப் பிரபஞ்சத்தின் சாரமும் அவரே. இயற்கையின் எல்லா வேற்றுமைகள் மற்றும் வேறுபாடுகளுக்கிடையில் இருமையை அனுமதிக்காத ஒற்றுமை அவரே. இந்த அழியாத, எங்கும் நிறைந்த

ஆனந்தமயமான ஆன்மாவே நீங்கள். அதுவே நீங்கள்! இதை உணர்ந்து விடுதலை அடைவீர்களாக.

பிரம்ம சூத்திரத்தின் இந்த நான்கு முக்கியமான வரிகளை நினையுங்கள்:

1. *அதாதோ பிரம்ம ஜிக்ஞாஸா* - இப்பொழுது பிரம்மத்தைப் பற்றிய சிந்தனை.

2. *ஜன்மாத் யஸ்ய யத.* - எதிலிருந்து தோற்றம் முதலானவை உண்டாகிறதோ.

3. *சாஸ்த்ர யோனித்வாத்* - உண்மை அறிவைப் பெறுவதற்கு சாஸ்திரங்களே துணையாகும்.

4. *தத்து ஸமன்வயாத்* - அதுவே பிரபஞ்சத்தின் மூலாதாரம்.

*ஜயகுரு சிவகுரு ஹரிகுரு ராம்*

*ஜகத்குரு பரம்குரு ஸத்குரு ச்யாம்*

குருவின் துணையுடன்தான் சாதகன் தன்னை பேருணர்வு நிலைக்கு உயர்த்த முடியும். குருவின் துணை யினால்தான் அபூரணன் பூரணனாகவும், எல்லையுள்ளது எல்லையற்றது ஆகவும், அழிவது அழியாத ஆனந்த நிலையையும் அடைய முடியும். ஜீவாத்மனுக்கும் பரமாத் மனுக்கும் இடையில் தொடர்பு ஏற்படுத்துபவரே குரு. தன்னை 'இதி'லிருந்து 'அத'ற்கு உயர்த்திக் கொண்டு இரண்டு நிலைகளுக்கும்" தடையில்லாத் தொடர்பு உடையவர் அவர். அமரத்வம் எனும் படியில் நின்று கொண்டு குனிந்து தத்தளிக்கும் ஜீவர்களை ஒரு கையால் உயர்த்தி, மறுகையால் எல்லையற்ற உண்மை உணர்வு மற்றும் பேரானந்த நிலைக்கு அவர்களை உயர்த்தி விடுகிறார்.

மனிதனின் வளர்ச்சியில் குருவின் புனிதமான பங்கினையும், மேலாம் முக்கியத்துவத்தையும் நீங்கள்

இப்பொழுது உணர்கின்றீர்களா? கடந்த கால பாரதம் குருதத்துவம் எனும் விளக்கினை காரணமில்லாமலா அணையாமல் பாதுகாத்து வந்திருக்கிறது! எத்தனையோ வருடங்களாக, யுக யுகாந்தரமாக இந்த மிகப் புராதனமான குரு தத்துவத்தைப் பாதுகாத்து, திரும்பத் திரும்ப குருவிற்கு நமஸ்காரம் செய்து, தனது பணிவையும் பக்தியையும் பாரதம் வெளிக்காட்டியிருக்கிறது! துக்கம், மரணம் எனும் பந்தங்களைத் தாண்டி உண்மையை ஜீவன் உணர வைக்கும் ஒரே தத்துவம் குரு ஒருவரே என்பதை ஒவ்வொரு இந்தியனும் அறிவான்.

குருவிற்குப் பணிவது, அவரை வணங்கி அவர் சொல் கேட்பது போன்றவையெல்லாம் அடிமை மனப்பான்மை என்ற தவறான கருத்தை விடுங்கள். வேறு ஒருவனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிவது தனது மதிப்பிற்கும் சுதந்திரத்திற்கும் ஊறு விளைவிக்கக் கூடியது என்று நினைப்பவன் முட்டாள் மனிதன். இது ஒரு பெரும் தவறு. நீங்கள் ஆழ்ந்து சிந்திப்பீர்களேயானால் உங்கள் சொந்த சுதந்திரம் என்பது உங்கள் ஆணவம் மற்றும் டம்பத்தின் அடிமைத்தனமே என்பது புலனாகும். புலனுக்குட்பட்ட மனத்தின் விளையாட்டே அது. தனது ஆணவம் மற்றும் மனத்தினை எவன் வெல்கிறானோ அவனே உண்மையில் மாவீரனாவான். அவனே சுதந்திர புருஷன். இந்த வெற்றியை அடைவதற்காகத்தான் ஒருவன் மேல் நிலையில் உள்ள ஆன்மீகவாதியான குரு ஒருவரிடம் சரணடைகிறான். இத்தகைய சரணாகதியால் அவன் தனது கீழான ஆணவத்தை இல்லாதாக்கி அகண்ட சிதானந்தப் பேரின்பத்தை அனுபவிக்கிறான்.

மனிதனின் ஊசலாடும் நம்பிக்கையை ஸ்திரப் படுத்தி உறுதிப்படுத்துவதற்கும் எல்லா வழிபாட்டின்

பலனையும் பெறச் செய்வதற்கும் குரு தத்துவத்தை நமது முன்னோர் தெய்வீகமயமாக்கியுள்ளனர். குருவை வணங்குவது என்பது உண்மையில் பரம்பொருளை வணங்குவதேயாகும். அழிவையே மையமாகக் கொண்டு விளங்கும் இவ்வுலகில், மாற்றுலக தூதுவர் போல குரு அமைகிறார். தனது நாட்டின் பிரதிநிதியாக ஒரு தூதுவர் விளங்குவதைப் போல, தான் அடைந்த மேலாம் நிலையின் பிரதிநிதியாக குரு திகழ்கிறார். தூதுவரைப் பாராட்டினால் அவரது நாட்டினைப் பாராட்டியதாக ஆவது போல், குருவை வணங்கிப் பாராட்டுவது என்பது மேலான பரம தத்துவத்தை நேரடியாக வணங்குவதற்கு நிகர். தொலைவில் உள்ள கண்ணுக்குத் தெரியாத ஒரு மரம் அதனது முற்றிலும் மலர்ந்த நறுமணமுள்ள பூக்களால் அறியப்படுவது போன்று, ஊனக் கண்ணுக்குப் புலப்படாத இறைவன் இருக்கிறார் என்ற ஆன்மீக மணத்தை எங்கும் பரப்பும் தெய்வீக மலராக குரு திகழ்கிறார். இறைவனது பிரதிநிதியாக குரு விளங்குகிறார். அவரை வணங்குவதால் ஒருவன் தன்னையுணர்கிறான்.

ஆன்ம ஞானத்தில் யாண்டும் திளைத்திருக்கும் ஸ்ரீவியாஸர் மற்றும் குருமாரை வணங்குங்கள். அவர்களது ஆசிகள் உங்கள் மீது மலரட்டும்! அறியாமைத் தளையை அறுத்து நீங்கள் மேலாம் துறவியராக ஒளிர்ந்து எங்கும் அமைதியையும், இன்பத்தையும், ஒளியையும் பரப்புவீர்களாக!

சிவானந்தாசிரமத்தில் ஒவ்வொரு வருடமும் குரு பூர்ணிமா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. நாட்டின் பல பாகங்களிலுமிருந்து சீடர்களும் பக்தர்களும் இதில் வந்து பங்கேற்கின்றனர்.

1. எல்லா சாதகர்களும் அதிகாலை நான்கு மணிக்கு பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்திருக்கின்றனர்.

குருவைத் தியானித்து குரு ஸ்தோத்திரங்களைச் சொல்லு கின்றனர்.

2. பிறகு, குருவின் திருப்பாதங்கட்கு புனித வழிபாடு செய்கின்றனர். குரு கீதையில் இதைப் பற்றிச் சொல்லும் சுலோகம் கீழ்வருமாறு :

*த்யான மூலம் குரோர் மூர்த்தி :*
*பூஜாமூலம் குரோர் பதம் ।*
*மந்த்ரமூலம் குரோர் வாக்யம்*
*மோக்ஷமூலம் குரோ : க்ருபா ॥*

"தியானத்திற்குகந்தது குருவின் திருவுருவம்; பூஜிக்கத் தகுந்தது குருவின் திருப்பாதங்கள்; மந்திரத் திற்குகந்தது குருவின் வாக்கியங்கள்; குருவின் அருள் மோட்சம் நல்குகிறது".

3. சாது சன்யாசிகள் வணங்கப்பட்டு, பகலில் அன்னதானம் நிகழ்கிறது.

4. தொடர்ந்து நடைபெறும் ஸத்ஸங்கத்தில் குரு மகிமை பற்றியும் ஆன்மீக விஷயங்கள் குறித்தும் சொற் பொழிவுகள் நிகழ்கின்றன.

5. இந்தப் புண்ணிய நாளில் தகுதியுள்ள சாதகர் களுக்கு ஸன்யாஸ தீட்சை அளிக்கப்படுகிறது.

6. பக்தி மிகுந்த சீடர்கள் அன்று முழுவதும் உப வாசமிருந்து பிரார்த்தனையில் கழிக்கின்றனர். ஆன்மீக முன்னேற்றத்திற்கான புதிய பிரதிக்ஞைகளை அவர்கள் மேற்கொள்கின்றனர்.

இந்த நன்னாளில் அதிகாலை 4 மணிக்கு பிரம்மமுகூர்த்தத்தில் எழுந்திருங்கள். உங்கள் குருவின் தாமரைப் பாதங்களை தியானியுங்கள். அவரது அருளை மானஸீகமாக நாடுங்கள். அதனால்தான் உங்களுக்கு

ஆன்மஞானம் கிட்டும். அதிகாலை வேளையில் ஆழ்ந்த ஜபம் தியானம் செய்யுங்கள்.

ஸ்நானம் செய்த பின் உங்கள் குருவின் பாதங்களையோ அல்லது விக்ரகம் அல்லது படத்தையோ புஷ்பம், தூப, தீபத்துடன் வணங்குங்கள்.

அன்று முழுவதும் உபவாசம் இருங்கள். அல்லது பால் பழம் சாப்பிடுங்கள். மாலையில் ஏனைய சீடர்களுடன் அமர்ந்துகொண்டு உங்கள் குருவின் போதனைகளைப் பற்றி உரையாடுங்கள்.

அல்லது அன்று முழுவதும் மௌனம் இருந்து உங்கள் குருவின் நூல்களைப் படித்து அவரது போதனைகளைக் குறித்துச் சிந்தியுங்கள்.

உங்கள் குருவின் போதனைகளின்படி ஆன்மீக வாழ்க்கை வாழ இந்நாளில் புதிய பிரதிக்ஞைகளை மேற்கொள்ளுங்கள்.

இரவில் மீண்டும் ஏனைய சீடர்களுடன் ஒன்று கூடி, இறைவன் மற்றும் குருவின் புகழைப் பாடுங்கள்.

உங்கள் குருவின் போதனைகளின்படி வாழ்ந்து அவரது புகழையும் போதனைகளையும் பரப்புவதே உங்கள் குருவை நீங்கள் உண்மையாக வழிபடும் விதமாகும்.

# 6. ஹோலி

முற்காலத்தில் இந்தியாவில் நரமாமிசம் தின்னும் கூட்டத்தினர் இருந்தனர். அவர்கள் பெருத்த தொல்லை விளைவித்தனர். பல அப்பாவி மக்களின் உயிருக்கு அவர்கள் அச்சுறுத்தலை ஏற்படுத்தினர். அவர்களில் ஒருத்தி ஹோலிகா அல்லது பூதனா என்பவள். குழந்தைகளை விழுங்குவதில் அவள் பெரிதும் நாட்டம் காட்டினாள். பகவான் கிருஷ்ணர் அவளைக் கொன்று குழந்தைகளைக் காப்பாற்றினார். இந்த நாளில் ஹோலி காவின் கொடும்பாவி தீயினில் எரிக்கப்படுகிறது. தென் னிந்தியாவில் களிமண்ணால் செய்யப்பட்ட காமன் அல்லது மன்மதனின் உருவம் எரிக்கப்படுகிறது. பெரிய பண்டிகையான ஹோலியின் ஆரம்பம் இதுதான்.

பங்குனி (பிப்ரவரி - மார்ச்)யில் வரும் பௌர்ண மிக்கு பத்து நாட்களுக்கு முன்னதாகவே ஹோலி பண்டிகை ஆரம்பமாகிறது என்றாலும், பௌர்ண மியுடன் முடிவுறும் இறுதி மூன்று அல்லது நான்கு நாட்களிலேயே அது பிரதானமாகக் கொண்டாடப் படுகி றது. ஹிந்துக்களுக்கு இது ஒரு வஸந்தோத்ஸவம் ஆகும். வஸந்த காலத்தில் எல்லா மரங்களும் நறுமணங்களுடன் கூடிய பூக்களால் நிரம்பிக் காணப்படுகின்றன. கடவு ளுடைய மகிமையையும் எல்லையற்ற அழகையும் அவை பேசாமல் பேசுகின்றன. உங்களிடம் நம்பிக்கை, மகிழ்ச்சி மற்றும் புதுவாழ்விற்கான ஆர்வத்தையும் ஊட்டி இத்தனை வடிவங்களுக்குப் பின் மறைந்திருக்கும் அந்தர் யாமியான இறைவனைக் காண உங்களைத் தூண்டுகிறது.

சிவபெருமானால் மன்மதன் எரிக்கப்பட்ட நாளான காம தகனமாக தென்னிந்தியாவில் ஹோலி கருதப் படுகிறது.

இதையொட்டிய மற்றொரு கதையும் உண்டு. ஒரு சமயம் ஹோலிகா என்ற பெயர் கொண்ட ஒரு அரக்கிக்கு ஒரு மூதாட்டியின் பேரக் குழந்தை பலி கொடுக்கப்பட இருந்தது. வைது திட்டினால் ஹோலிகாவைப் பணிய வைக்க முடியும் என்று ஒரு சாது அவளுக்கு அறிவுரை கூறினார். உடனே அம்மூதாட்டி பல குழந்தைகளைத் திரட்டி ஹோலிகாவைத் திட்ட வைத்தாள். அந்த அரக்கி செத்துக் கீழே விழுந்தாள். அவளை அந்தக் குழந்தைகள் எரித்தனர்.

பக்த ப்ரஹ்லாதனது பகவான் நாராயணரிடம் உள்ள பக்தி மற்றும் ஹோலிகாவிடமிருந்து அவன் சாகாமல் தப்பியதும் ஹோலிகா கதையுடன் இணைக்கப்படுகிறது. பிரஹலாதனது பக்தியை மாற்றி அவனை உலகாயதமாகத் திருப்புவதற்கு அவனது தந்தையான ஹிரண்யகசிபு பல்வேறு யுத்திகளைக் கையாண்டான். அனைத்து முயற்சிகளிலும் அவன் தோல்வியுற்றான். கடைசியில் அவன் தனது சகோதரியான ஹோலிகாவின் உதவியை நாடினான். நெருப்பினுள் புகுந்தாலும் தான் எரியாத வரம் ஒன்றை அவள் பெற்றிருந்தாள். பிரஹலாதனை மடியில் வைத்துக் கொண்டு கொழுந்து விட்டு எரியும் தீக்குள் புகுமாறு அவன் தனது தங்கைக்கு உத்தரவிட்டான். ஹோலிகாவும் அப்படியே செய்தாள். அவள் எரிந்து போனாள். ஆனால் பிரஹலாதன் சிரித்துக் கொண்டிருந்தான். பகவான் நாராயணரது கருணையினால் அந்தத் தீயினால் அவன் சிறிதும் பாதிக்கப்படவில்லை.

இறைவனைப் பணிபவர்கள் காப்பாற்றப்படுவார் கள், இறைவனது பக்தர்களைத் துன்புறுத்துபவர்கள் சாம்பலாக்கப்படுவார்கள் என்பதை ஜனங்களுக்கு நினை வூட்டுவதற்காகவே இந்தக் காட்சி ஒவ்வொரு வருடமும்

செய்து காட்டப்படுகிறது. ஹோலிகா எரிக்கப்பட்ட பொழுது மக்கள் அவளைத் தூற்றினர். மாறாக இறைவனையும், இறைவனது தலைசிறந்த பக்தனான பிரஹலாதனையும் அவர்கள் போற்றிப் பாடினர். அதை நினைவூட்டும் வகையில் மக்கள் இன்றும் வசைமொழி களைப் பயன்படுத்துகின்றனர். ஆனால் இறைவனையும் இறை பக்தனையும் போற்றிப் புகழ மறந்துவிடுகின்றனர்.

வட இந்தியாவில் சாயத் தண்ணீரால் மக்கள் விளையாடுகின்றனர். மாமா, மருமகன் முகத்தின் மீது சாயத் தண்ணீரைத் தெளிக்கிறார். மருமகள் தனது அத்தையின் முகத்தின் மீது சாயப் பொடியைத் தூவுகிறாள். சகோதரர்கள் சகோதரிகளுடனும், உறவின ருடனும் விளையாடுகின்றனர்.

பெரும் பெரும் மரக்கட்டைகளை ஓர் இடத்தில் குவித்து இரவில், மக்கள் எரித்து மகிழ்கின்றனர். ஹோலி -ஹோ, ஹோலி-ஹோ' என்ற சப்தம் எங்கும் கேட்கிறது. மக்கள் தெருக்களில் நின்று கொண்டு, பணக்காரனாகட்டும் அல்லது பெரிய அதிகாரியாகட்டும் தெருவில் போவோர் மீது பீய்ச்சாங்குழல் கொண்டு சாயத் தண்ணீரை உடலின் மீது பாய்ச்சுகின்றனர். இந்த நாளில் இதற்கு எவ்விதத் தடையும் கிடையாது. ஐரோப் பியர்களின் 'ஏப்ரல்-பூல்' கொண்டாட்டம் போன்றது இது. ஜனங்கள் விசேஷ ஹோலிப் பாடல்களை இயற்றிப் பாடுகிறார்கள்.

ஹோலிப் பண்டிகையின்போது ஜனங்கள் வீடுகளைச் சுத்தம் செய்து, வீட்டைச் சுற்றியுள்ள குப்பை களையெல்லாம் அப்புறப்படுத்தி அவற்றை எரித்து விடுகின்றனர். வியாதியை உண்டாக்கும் கிருமிகள் அதனால் அழிக்கப்படுகின்றன. சுற்றுப்புறத்தின் சுகா தாரம் பாதுகாக்கப்படுகிறது. பண்டிகை நாளில் சிறுவர்கள் தெருக்களில் மகிழ்ச்சியுடன் நடனமாடு

கின்றனர். போவோர் வருவோரிடம் ஜனங்கள் கேளிக்கைகளில் ஈடுபடுகின்றனர். விழாவின் இறுதியில் சொக்கப்பனை கொளுத்தப்படுகிறது. எரியும் தீயைச் சுற்றி பகவான் ஸ்ரீகிருஷ்ணரது பால லீலைகள் செய்து காட்டப்படுகின்றன.

ஹோலியின் கடைசி தினத்தில் இந்தச் சொக்கப்பனைச் சாம்பலிலிருந்து சிறு பகுதியை ஜனங்கள் தங்கள் வீட்டிற்கு எடுத்துச் செல்லுகின்றனர். அதனால் தங்கள் இல்லங்கள் தூய்மையாகி வியாதிகளிலிருந்து காப்பாற்றப்படுவதாக அவர்கள் நம்புகின்றனர்.

இன்றைய நாட்களில் ஹோலிப் பண்டிகையின் பெயரால் மக்கள் எல்லாவிதமான தீய செய்கைகளிலும் ஈடுபடுகின்றனர். சிலர் அபரிமிதமாகக் குடித்துவிட்டு தெருவில் கிடந்து உருளுகின்றனர். குடித்துவிட்டுத் தகாத வார்த்தைகள் சொல்லித் திட்டுகின்றனர். பெரியோருக்கும் ஆசிரியர்களுக்கும் அவர்கள் மரியாதை செலுத்துவதில்லை. குடிப்பதிலும் சூதாட்டத்திலும் அவர்கள் பணத்தைச் செலவிடுகின்றனர். இந்தத் தீய பழக்கங்கள் முற்றிலும் அகற்றப்பட வேண்டும்.

ஹோலி போன்ற பண்டிகைகளுக்கு மிகுந்த ஆன்மீக மதிப்பு உண்டு. வேடிக்கை விநோதங்களைத் தவிர, முறையாகக் கொண்டாடப்பட்டால், அவை கடவுளிடம் நம்பிக்கையை உண்டாக்குகின்றன. ஹிந்துப் பண்டிகைகளுக்கு எப்பொழுதுமே ஆன்மீகப் பொருள் உண்டு. புலனின்பங்களிலிருந்து அவை மனிதனை விலக்கி ஆன்மீகப் பாதைக்கும், தெய்வீக சான்னியத்திற்கும் இட்டுச் செல்கின்றன. ஜனங்கள் ஹோமம் செய்து, புதிதாகக் கிடைத்த அறுவடை தானியங்களைத் தாங்கள் பயன்படுத்தும் முன் ஹோமத் தீயில் இட்டு கடவுளுக்குப் படைக்கின்றனர்.

சாயத் தண்ணீரைப் பீச்சுதல் மற்றும் கொடும்பாவி எரித்தல் போன்ற கேளிக்கை நிகழ்ச்சிகள் மட்டும் இல்லாமல் இதுபோன்ற விழாக்களில் சமயக் கூட்டங்கள், பகவான் ராமபஜனை போன்ற இறைவழிபாட்டு நிகழ்ச்சிகளும் இடம் பெற வேண்டும். இத்தகைய விழாக்கள் புனிதம் வாய்ந்தவையாகக் கருதப்பட்டு பக்திப்பாடல் பாராயணம், திருத்தலங்களுக்குச் செல்லல், புண்ணிய நதிகளில் நீராடல், சான்றோருடன் சத்சங்கம், ஏழைகளுக்கு தானம் அளித்தல் போன்றவை செய்யப்பட வேண்டும். அப்பொழுதுதான் ஹோலி பண்டிகை தக்க முறையில் கொண்டாடப்பட்டதாகக் கருதப்படும். இத்தகைய மகிழ்ச்சிகரமான விழாக்களின் போது பக்தர்கள் பகவானின் குதூகலமான திருவிளை யாடல்களை நினைவுகூர்கின்றனர்.

ஹிந்து மத அனைத்து பெரிய விழாக்களும் அவற்றில் சமய, சமூக மற்றும் சுகாதாரத் தத்துவங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றன. இதற்கு ஹோலிப் பண்டிகையும் விதிவிலக்கல்ல. ஒவ்வொரு பருவமும் அதற்கென்றே அமைந்த விழாவைக் கொண்டுள்ளது. பாரதத்தின் வஸந்த கால உத்ஸவமே ஹோலி. இந்தியா அடிப்படையில் ஒரு விவசாய நாடு என்பதால் இந்தியாவின் இரண்டு பெரிய விழாக்களும் அறுவடை காலத்திலேயே அமைந்திருக்கின்றன. அப் பொழுது விவசாயிகளின் களஞ்சியங்களும், வயல்களும் தானியங்களால் நிரம்பி வழிகின்றன. தங்களது கடின உழைப்பின் பலனை அவர்கள் மகிழ்ச்சியுடன் கொண்டாடும் வேளை அது. உலகின் எல்லா இடங் களிலுமே அறுவடைக் காலம் விழாக் காலமே.

கடினமான உழைப்பிற்குப் பிறகு மனிதனுக்கு மாற்றமும் ஓய்வும் தேவைப்படுகிறது. வேலையினாலும் கவலையினாலும் களைப்படைந்திருக்கும் அவனுக்கு

மகிழ்ச்சி தேவை. ஆனந்தத்தையும் மனஅமைதியையும் அளிக்கும் அருமருந்தாகவும் இனிய விருந்தாகவும் இத்தகைய விழாக்கள் அமைகின்றன.

ஹோலிப் பண்டிகையின் சமய அம்சம் என்பது பகவான் ஸ்ரீகிருஷ்ணரை வழிபடுவதேயாகும். சில இடங்களில் அது டோல் யாத்திரை என்று அழைக்கப் படுகிறது. ‘டோல்’ என்றால் ஊஞ்சல் என்று பொருள். குழந்தை வடிவில் பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் உருவம் ஓர் ஊஞ்சலில் கிடத்தப்பட்டு பூக்களால் அலங்கரிக்கப்பட்டு சாயப் பொடியால் வண்ணமாக்கப்படுகிறது. கோபி யருடன் பகவான் செய்த பாலலீலைகள் நடித்துக் காட்டப் படுகின்றன. பக்தர்கள் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் மீது பாடல்களைப் பாடி, கோபிகா ஸ்திரீகளுடன் பகவான் செய்த ராஸலீலையின் ஹோலிப் பாடல்களைப் பாடுகின்றனர்.

பெரியவர் - சிறியவர், ஏழை - பணக்காரர் மற்றும் சமமான நிலையில் உள்ளவர்கள் எந்தவித வேறுபாடும் இன்றி ஒருவரை ஒருவர் கட்டித் தழுவி ஒற்றுமையை உணர்வது ஹோலியின் சமூக அம்சமாகும். ‘சென்றது சென்றதாக இருக்கட்டும்’ என்ற பாடத்தை ஹோலி நமக்குப் புகட்டுகிறது. கடந்த காலத்தின் கசப்பான உணர்வுகளை மறந்துவிட்டு, அன்பு, இரக்கம், ஒற்றுமை மற்றும் அனைவருடனும் சமத்துவத்துடன் புத்தாண்டை ஆரம்பிக்க வேண்டும். அனைவருடனும் இந்த ஒற்றுமையை உணர்ந்து ஆத்மாவுடனும் ஐக்கியமாக வேண்டும்.

ஹோலி என்றால் ‘தியாகம்’ என்றும் பொருள்படும். பக்தி, ஞானம் என்னும் தீயினால் மனத்தில் உள்ள ஆணவம், டம்பம் போன்ற அனைத்து மாசுகளையும் எரியுங்கள். யோகப்பயிற்சி எனும் நெருப்பின் மூலம் விச்வப்ரேமை, இரக்கம், தயாளகுணம், சுயநலமின்மை,

உண்மை, தூய்மை போன்றவற்றை சுடர்விட்டுப் பிரகாசிக்கச் செய்யுங்கள். இதுவே ஹோலியின் உண்மைத் தத்துவம். ஆபாசம் மற்றும் அறியாமையிலிருந்து விடுபட்டு தெய்வீக சாகரத்தில் ஆழமாகத் திளைத்து இன்புறுங்கள்.

உங்கள் இதயத்தில் எப்பொழுதும் தெய்வீக அன்புச் சுடரைப் பிரகாசிக்கச் செய்வதுதான் ஹோலியின் அறைகூவலாகும். அந்தர்முக ஆன்மீகச் சுடரொளியே உண்மை ஹோலியாகும். இறைவன் வெளிப்படுவது தான் பகவத்கீதையின்படி வஸந்த காலமாகும். அவரது இதயமாக ஹோலி சொல்லப்படுகிறது.

# 7. கார்த்திகை தீபம்

கார்த்திகை மாத ( நவம்பர் - டிசம்பர் ) பௌர்ணமி தினத்தன்று கிருத்திகை நட்சத்திரம் உச்சத்தில் இருக்கையில் ஹிந்துக்கள் கார்த்திகை தீபம் கொண்டாடு கிறார்கள். இந்த தினத்தில்தான் தென்னிந்தியாவில் அருணாசல மலை மீது புனித கார்த்திகை பெரும் தீபம் ஏற்றப்படுகிறது.

ஒரு சமயம் சிவபெருமான் தென்னிந்தியாவில் உள்ள திருவண்ணாமலையில் மலையாய் வடிவெடுத்து நின்றார்.. தங்களுக்குள் யார் பெரியவர் என்று சண்டையிட்டுக் கொண்டிருந்த பிரம்மா, விஷ்ணுவின் கர்வத்தை அவர் அடக்கியதும் இங்கேதான். ஒரு நாள் சிவபெருமான் தியானத்தில் இருந்தபொழுது பார்வதி அவரை விட்டுவிட்டு அருணாசல மலைக்குச் சென்றுவிட்டாள். அங்கே அவள் தவம் இருந்தாள். கௌதம முனிவரின் அதிதியாக அவள் அங்கே இருந்தாள். இங்கே அவள் தவம் செய்த பொழுதுதான் துர்க்கையினால் மஹிஷாஸுரன் கொல்லப்பட்டான். சிவனை அருணாசலேசுவரராக பார்வதி கண்டாள். சிவபெருமான் பார்வதியை தம்முடன் சேர்த்துக் கொண்டு அர்த்தாங்கினியாக ஆக்கிக் கொண்டார். சிவனின் உடலில் பாதியில் பார்வதி இடம் பெற்றாள்.

அருணாசலம் தேஜோலிங்கம். அருணாசலம் அல்லது திருவண்ணாமலை ஐம்பூதங்களில் ஒன்றான அக்னிக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. (ஐம்பூதங்கள் பாரதத்தின் ஐந்து புண்ணிய ஸ்தலங்களால் குறிப்பிடப்படுகின்றன).

கார்த்திகை தீபத்தன்று திருவண்ணாமலை மலை மீது அக்னி தோன்றுகையில், ஜனங்கள் அந்தப் பேரொளியைக் கண்டு வணங்குகின்றனர். 'ஹரோ

ஹரா' என்று அவர்கள் திரும்பத் திரும்ப மெய்மறந்து கூவுகின்றனர். தனது இதயத்தில் என்றென்றும் ஒளிர்ந்து கொண்டிருக்கும் பேரொளியை எவன் தியானத்தின் மூலம் காண்கின்றானோ அவன் மரணமிலாப் பெரு வாழ்வை அடைகிறான் என்பது இதன் தத்துவார்த்த மாகும்.

சிவபெருமான் அல்லது ஆத்மசொரூபமே சுயம்ஜோதி, அவரே பரம் ஜோதி என்ற தத்துவத்தை அருணாசல ஜோதி உங்களுக்குத் தெரிவிக்கிறது.

கார்த்திகை தீபத்தன்று மாலை வேளையில் தென்னிந்தியாவில் ஜனங்கள் கோவில்களுக்கு முன்னால் சொக்கப்பனை கொளுத்துகிறார்கள். தேவர்களையும் முனிவர்களையும் துன்புறுத்திய பல அரக்கர்களின் தேர்களை சிவபெருமான் எரித்தார் என்று சொல்லப்படுகிறது. இந்தச் சொக்கப்பனை அந்தக் கதையை நமக்கு நினைவூட்டுகிறது.

கார்த்திகை தீபத்தன்று மாலை வேளையில் ஜனங்கள் தங்கள் வீடுகளுக்கு முன் மண் அகல் விளக்குகளை வரிசை வரிசையாக ஏற்றி வைத்து இறைவனை வணங்குகின்றனர். பல்வேறு வாண வேடிக்கைகளையும் அவர்கள் வெடித்து மகிழ்கின்றனர்.

ஆணவம், சுய்நலம், மயக்கம் என்ற மூன்று மாசுகளையும் இல்லாதாக்குங்கள். சிவஞானம் அல்லது ஆன்ம ஞானம் என்னும் தீயில் மனம், புலன்கள், ஆசை ஆகியவற்றைப் பொசுக்குங்கள். முழு ஞானத்தைப் பெற்று மனம், புத்தி, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மின்னல், தீ அனைத்தையும் ஒளிர்விக்கும் அந்தப் பரஞ்ஜோதியைத் தரிசனம் செய்யுங்கள். இதுதான் உண்மையான கார்த்திகை தீபம்.

பரஞ்ஜோதி உங்கள் அனைவரையும் ஒளிர்விக்கட்டும்! சிவபெருமான் உங்களுக்கு மேலும் பிரகாசத்தை அருள்வாராக! இந்த பேரொளியில் நீங்கள் கலந்து அழிவிலா இன்பம், அமரத்துவத்தை அடைவீர்களாக!

# 8. மகர சங்கராந்தி

வருடத்தை நான்கு பருவங்களாகப் பிரித்த அந்த மூல சக்தியான மேலான இறைவனுக்கு நமஸ்காரம். இந்த நன்னாளில் தனது உத்தராயண (வடக்கு நோக்கிய) கதியைத் துவக்கும் சூரிய பகவானுக்கு வணக்கம்.

'ஸங்க்ரமனம்' என்ற சமஸ்கிருத வார்த்தைக்கு 'நகர ஆரம்பித்தல்' என்று பொருள். எந்த தினத்தில் சூரியன் வடக்கு நோக்கி நகர ஆரம்பிக்கிறதோ அந்த தினம் மகர சங்கராந்தி எனப்படுகிறது. இது பொதுவாக ஜனவரி மாதத்தின் மத்தியில் வருகிறது.

தென்னிந்தியாவில் தமிழர்கள் இந்த விழாவைப் பொங்கல் என்றழைக்கிறார்கள்.

பலருக்கு, குறிப்பாக தமிழர்களுக்கு, மகர சங்கராந்தி புத்தாண்டு தினத்தன்று வருகிறது. அந்த நாளில் புதிதாக அறுவடை செய்யப்பட்ட தானியம் முதன்முறையாக பொங்கலிடப்படுகிறது. ஒவ்வொரு வீட்டிலும் இந்த நிகழ்ச்சியைக் கொண்டாட குதூகலமான நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. வேலையாட்கள், உழவர்கள், ஏழைகள் அனைவருக்கும் விருந்து அளிக்கப்பட்டு, புத்தாடை வழங்கப்படுகிறது. அடுத்த நாள் புனித அன்னையின் வடிவமாக கருதப்படும் 'கோமாதா'வாகிய பசு வணங்கப்படுகிறது. அதன்பின் பறவைகளுக்கும் விலங்குகளுக்கும் அன்னம் இடப்படுகிறது.

இந்த விதமாக இந்த விழாவின்போது தனது அன்புப் பிணைப்பால் முதலில் வீட்டிலுள்ளவர்கள், பிறகு அக்கம்பக்கத்தவர், அதன் பின் வேலையாட்கள், ஏழை எளியவர்கள், பின்னர் பசு மற்றும் அனைத்து உயிரினங்கள் என்று படிப்படியாக பக்தனது இதயம் விரிவடைகிறது. அதை உணராமலேயே ஒருவன் தனது

இதயத்தை விரிவுபடுத்தி அகில உலகமுமே அதில் அடங்கும் அளவிற்கு பரந்த சுபாவத்தைக் கொண்டு விளங்குகிறான்.

சங்கராந்தி அன்று மாதப் பிறப்பானதால் அந்தணர்கள் தங்கள் காலஞ்சென்ற முன்னோருக்குத் தர்ப்பணம் செய்கிறார்கள். இவ்விதம் மனிதன் செய்ய வேண்டிய எல்லா யக்ஞங்களும் இந்தப் பெரியவிழாவில் இடம் பெறுகின்றன. இந்தியாவில் உள்ள ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தாங்கள் செய்கிறோம் என்ற உணர்வு இல்லாமலேயே இறைவனின் விராட்சொரூப வழிபாட்டில் மிக அற்புதமாக ஈடுபடுத்தப்படுகின்றனர்.

உலகெங்கும் உள்ள சாதகர்களுக்கு இந்த நாள் ஒரு விசேஷ முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. சூரியன் வடக்குமுகமாக சஞ்சரிக்கும் ஆறுமாத காலம் தங்களது வாழ்வின் இலட்சியத்தை நோக்கி சாதகர்கள் முன்னேற மிகவும் உதவிகரமானதொரு வேளையாகும். பரம்பொருள் நோக்கிய பயணத்தில் இந்த பருவத்தில் சாதகன் எளிதில் முன்னேறுகிறான். பரமஹம்ஸ சன்னியாசிகள் இந்தப் பருவத்தில் சஞ்சாரம் செய்து பக்தர்களின் மனதிலுள்ள க்வலையைப் போக்குகிறார்கள். தேவர்களும் ரிஷிகளும் புதிய பருவம் வந்தது குறித்து மகிழ்ச்சி அடைந்து சாதகனின் உதவிக்காக விரைந்து வருகிறார்கள்.

பாண்டவர்களின் பிதாமகரான பீஷ்மர், மகாபாரத யுத்தத்தில் மிகவும் காயமடைந்தபொழுது தனது உயிரை விடுவதற்காக முள்படுக்கையின் மீது உத்தராயண புண்ணிய காலம் வருவதற்காகக் காத்திருந்தார். எனவே இந்த தினத்தில் அவருக்கு அஞ்சலி செய்து நாமும் உயரிய பிரதிக்ஞைகளுடன் வாழ்ந்து காட்டுகின்ற பெருமக்களாக ஆக முயல்வோமாக.

ஏற்கனவே சொல்லப்பட்டது போல தென்னிந்தியாவில் இது பொங்கலாகும். விவசாயத்துடன் இது மிகவும் தொடர்புடையது. விவசாயிக்கு இது வெற்றித் திருநாளாகும். அவனது உழைப்பின் பலனை அவன் தன் வீட்டிற்குக் கொண்டுவந்திருப்பான். முதல் அறுவடை தானியத்தை இறைவனுக்குப் படைப்பதுதான் பொங்கல் திருநாளாகும். உழைப்பது அவனது கடமை. அதன் பலன் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யப்படுகிறது. இதுதான் கர்மயோகத்தின் உட்பொருள்.

அறுவடையின் முழுப்பலனையும் தானே பிடுங்கிக் கொள்ள நில உடமஸ்தன் அனுமதிக்கப்படுவதில்லை. தன்னிடம் வேலை பார்க்கும் தொழிலாளிகளுக்கு நிலத்தின் சொந்தக்காரர் உணவு, உடை மற்றும் பணத்தை மகிழ்ச்சியுடன் பொங்கல் நாளன்று தருகிறார். எத்தகைய சிறந்த செயல்! இதைப் பொங்கலன்று மட்டும் ஏதோ விழாவுக்காக அல்லாமல் எப்பொழுதுமே உங்களுக்கு முன், லட்சியமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

உதாரகுணத்துடன் விளங்குங்கள். தானம் செய்யுங்கள். உங்களிடம் பணிபுரியும் வேலைக்காரர்களை உங்கள் உற்ற நண்பர்களைப் போலவும் சக தொழிலாளர்களைப் போலவும் கருதுங்கள். பொங்கல் திருநாளின் உட்கருத்து இதுதான். இவ்விதம் நீங்கள் உங்கள் பணியாளர்களின் அன்பையும் ஆதரவையும் பெறுவீர்கள்.

மகர சங்கராந்திக்கு முதல் நாள் போகிப் பண்டிகையாகும். இந்த நாளில் குப்பைகளும் கிழிந்த துணிகளும் தூர எறியப்பட்டு எரிக்கப்படுகின்றன. வீடுகள் சுத்தம் செய்யப்பட்டு வெள்ளையடிக்கப் படுகின்றன. தெருக்களும்கூட நன்கு பெருக்கப்பட்டு வீட்டு வாசலில் பல வர்ணக் கோலங்கள் இடப்

படுகின்றன. ஆரோக்கிய ரீதியில் இவற்றிற்கெல்லாம் முக்கியத்துவம் உண்டு. ஆனால் இங்கே இவற்றினுடைய வெளி அர்த்தத்துடன் மட்டும் நின்றுவிடக் கூடாது. மனத்தில் படிந்துள்ள காலம் காலமான எண்ணங் களையும் உணர்ச்சிகளையும் அகற்றி மனத்தைச் சுத்தப்படுத்துவதுதான் உடனடியாகச் செய்ய வேண்டிய காரியமாகும். இந்த நன்னாள் முதல் உண்மை, அன்பு, தூய்மை நிறைந்த பாதையில் செல்வோம் என்ற உறுதியை மேற்கொண்டு அந்த மாசுகளைப் பொசுக்கி விடுங்கள். ஆன்ம சாதகனின் வாழ்க்கையில் பொங்கலின் உட்கருத்து இதுதான்.

இதை நீங்கள் செய்தால், மகர சங்கராந்தி உங்களுக்கு ஒரு விசேஷ மகத்வம் வாய்ந்ததாக இருக்கும். நீங்கள் அறியாமை, மயக்கம், புலனின்பம் எனும் இருளில் உழல்கையில், அறிவு, ஞானம், ஆன்ம ஒளியைக் குறிக்கும் சூரியன் உங்களிடமிருந்து அகன்று போயிற்று. அந்த சூரியன் இப்பொழுது அதனது ஒளியையும் வெம்மையையும் உங்கள் மீது பொழிந்து உங்களிடம் புத்துணர்ச்சியையும் புது வாழ்வையும் ஏற்படுத்துவதற்காக மகிழ்ச்சிகரமாக தனது வடக்கு நோக்கிய பயணத்தில் உங்களை நோக்கி வருகிறார்.

உண்மையில் பொங்கல் திருநாள் சூரிய பகவானைத்தான் உணர்த்துகிறது. ஒளி, ஒற்றுமை, ஒரம் சாராமை, உண்மையான சுயநலமின்மை, கர்மயோகத் தின் உயர் நோக்கம் ஆகியவற்றை உணர்த்துவதே சூரிய பகவானின் உயர் செய்தியாகும். அனைத்துக்கும் நலம் தரும் சூரியன் அனைத்தின் மீதும் எவ்விதப் பாகுபாடும் இன்றி ஒளிர்கிறது. சூரியன் இன்றி பூமியில் உயிர்கள் அழிந்துவிடும். தனது பணியில் அது மிகவும் ஒழுங்காகவும் நேரம் தவறாமலும் இருப்பதுடன், தன் செயலுக்கு எந்தவிதமான பரிசையோ பாராட்டையோ

எதிர்பார்ப்பதில்லை. சூரியனின் இந்த தன்மைகளை நீங்கள் பெற்று விளங்கினால், சூரிய பகவானுக்குள்ள அனைத்துப் பெருமைகளையும் நீங்களும் பெற்று விளங்குவீர்கள் என்பதில் எவ்வித ஐயமும் உண்டோ!

எவர் சூரியனில் இருக்கிறாரோ, எவரை சூரியன் அறியாதோ, எவரது சரீரமாக சூரியன் இருக்கிறதோ, எவரது ஆற்றலால் சூரியன் பிரகாசிக்கிறதோ அவரே மேலாம் பரம்பொருள், ப்ரமாத்மா, அந்தர்யாமி. தத் த்வம் அஸி - அதுவே நீ. இதை உணர்ந்து இந்தப் புனித பொங்கல் எனும் மகர சங்கராந்தி நாளில் இங்கேயே இப்பொழுதே சுதந்திர புருஷராகுங்கள். இதுவே உங்கள் அனைவரிடத்தும் நான் விடுக்கும் பொங்கல் பிரார்த்தனையாகும்.

சங்கராந்தி தினத்தன்று இனிப்புகள், சர்க்கரைப் பொங்கல் போன்றவை, குறிப்பாக, தென்னிந்தியாவில் ஒவ்வொரு வீட்டிலும் தயாரிக்கப்படுகின்றன. எந்தப் பாத்திரத்தில் சர்க்கரைப் பொங்கல் செய்யப்படுகிறதோ அந்தப் பொங்கல் பானை மங்களத்தைக் குறிக்கும் மஞ்சளாலும், மஞ்சள் இலையினாலும் அலங்கரிக்கப் படுகிறது. இது பகவானுக்குப் படைக்கப்படுகின்ற பிரஸாதம் என்ற பக்தி உணர்வுடன் வீட்டுப் பெண் மணிகள் பொங்கலைத் தயார் செய்கின்றனர். பொங்கல் சாதம் வேகும் பானையில் உள்ள பால் கொதித்து வருகையில் வீட்டில் உள்ள பெண்களும் குழந்தைகளும் பொங்கல் பானையைச் சுற்றி நின்றுகொண்டு மகிழ்ச்சி யுடன் 'பொங்கலோ பொங்கல்' என்று குரல் எழுப்பு கின்றனர். ஆலயங்களிலும் இல்லங்களிலும் விசேஷ பிரார்த்தனைகள் நிகழ்த்தப்படுகின்றன. பின்னர் வீட்டில் உள்ள அனைவரும் சுற்றி அமர்ந்து மகிழ்ச்சியுடன் பொங்கலை உண்கின்றனர்.

எல்லா வீடுகளிலும் ஆங்காங்கு பிரிந்து இருப்பவர்கள் பொங்கலன்று ஒன்று சேருகின்றனர். தங்கள் கணவன்மாருடன் தனித்து வாழும் தங்கையருக்கு பரிசுகளைக் கொடுத்து சகோதரர்கள் அன்பைப் புதுப்பித்துக் கொள்கின்றனர்.

இனிப்புகள், புதிய உடைகள் மற்றும் பணத்துடனும் அன்புடனும் பண்ணையாரால் விவசாயி வரவேற்கப்படுகிறார்.

பொங்கலுக்கு மறுநாள் பசுக் கூட்டம் அழகாக அலங்கரிக்கப்பட்டு, நன்கு உணவு அளித்து வணங்கப் படுகிறது. சில கிராமங்களில் இளைஞர்கள் மிரண்டு வரும் காளைகளின் கொம்பைப் பிடித்து நிறுத்தி தங்கள் வீரத்தைக் காண்பித்துத் தங்களுக்குரிய மனைவியரைப் பெறுகின்றனர்.

அதே நாளில் இளம் பெண்கள் வீடுகளில் புளியோதரை, சர்க்கரைப் பொங்கல், தேங்காய்ச் சாதம் என்று பலவிதமான சாதங்களைத் தயாரித்து ஆற்றின் கரைக்கு எடுத்துச் செல்கிறார்கள். அங்கே இலைகளைப் பரப்பி அந்தச் சாதங்களை உருண்டையாகப் பிடித்து வைத்து மீன், பறவைகள் போன்ற உயிரினங்களுக்கு அன்புடன் அளிக்கிறார்கள். இது பார்ப்பதற்கு கண்ணைக் கவரும் ஒரு நிகழ்ச்சியாகும். காக்கைகள் கூட்டமாகப் பறந்து வந்து இவற்றை உண்ணும். "உங்களிடம் இருப்பதை அனைவருடனும் பகிர்ந்து கொள்ளுங்கள்", என்ற பாடம் நம் மனதில் இதன் மூலம் பதியவைக்கப்படுகிறது. தாங்கள் உண்ணும் முன் காக்கைகள் கரைந்து மற்ற காக்கைகளையும் உண்ண அழைக்கும்.

குடும்பத்தவர் ஒன்று சேர வேண்டும் என்பதை அடிப்படையாகக் கொண்ட இந்த இரண்டு நாட்களும்

பிரயாணத்திற்கு ஒவ்வாத நாட்களாகக் கருதப் படுகின்றன. இது வீட்டைவிட்டு இந்த நாட்களில் நாம் வேறு எங்கும் செல்லக் கூடாது என்பதற்காகவேயாகும்.

இந்த விதத்தில் நீங்கள் சங்கராந்தி அல்லது பொங்கலைக் கொண்டாடுகையில் உங்களது எண்ணங் களின் தரம் உயருகிறது. உங்களது உற்றார், உறவினர், நண்பர்கள் மற்றும் வேலைக்காரர்களின் அன்பும் நட்புமே உங்களது உண்மையான செல்வம் என்பதை நீங்கள் உணர ஆரம்பிக்கிறீர்கள். உங்கள் உணவு பயிராகும் நிலம், உழவுக்கு உதவும் கால்நடைகள், உங்களுக்குப் பால் தரும் பசு ஆகியவையே உங்களது உண்மையான செல்வமாகும். அவற்றின்பாலும், காக்கைகள், மீன் மற்றும் உயிரினங்கள்பாலும் நீங்கள் அதிக அன்பைக் காட்டத் தலைப்படுகின்றீர்கள்.

மகாராஷ்டிரத்திலும், வட இந்தியாவிலும் ஆன்ம சாதகர்கள் மகர சங்கராந்திக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கின்றனர். சீடன்பால் தனது கருணையைப் பொழிவதற்கு குரு தேர்ந்தெடுக்கும் பருவமும் இதுவே. இதே சமயத்தில்தான் ரிஷிகள் பலருக்கு மஹாதேவன் தரிசனம் தந்து அருளிய காலம் என்று தென் னிந்தியாவில் கருதப்படுகிறது.

## 9. ரக்ஷா பந்தன்

ரக்ஷாபந்தன் தென்னிந்தியாவில் ஆவணி அவிட்டம் எனப்படுகிறது. (ஆகஸ்டு - செப்டம்பர்) ஆவணி மாதத்தின் பௌர்ணமியன்று இது வருகிறது. இது ஒரு முக்கியமான ஹிந்துத் திருநாள். இந்த நாளில் ஹிந்துக்கள் புதுப் பூணூல் அணிந்து தங்கள் முன்னோருக்கு தர்ப்பணம் அளிக்கிறார்கள்.

இந்தப் புண்ணியநாளில் வேத பாராயணம் செய்வது மிகவும் நலம்பயக்கவல்லது. உபாகர்மம் என்றும் அழைக்கப்படும் இந்த நிகழ்ச்சி பூணூல் அணியும் பிராம்மணர்களுக்கு மிகவும் முக்கியமானது. இந்தப் புனித பூணூல் பிராம்மணச் சிறுவனுக்கு அணிவிக்கப்படுகையில் அவனது மூன்றாவது கண்ணான ஞானக் கண் திறக்கப்படுவதாக கருதப்படுகிறது. இந்த உபாகர்மத் திருநாள் பூணூல் அணிபவருக்கு அதன் மேலான ஆன்மீக தத்துவத்தை உணர்த்துகிறது. தங்களுக்குப் பிறவியைக் கொடுத்த தங்கள் முன்னோருக்கும், ஆன்மீக அறிவைக் கொடுத்த ரிஷிகளுக்கும், வேதங்களுக்கும் பிராம்மணர்கள் தர்ப்பணம் கொடுக்கிறார்கள். உண்மையான ஹிந்து தனக்கு நலம் செய்தவர்களை ஒருபோதும் மறக்கமாட்டான்.

நான்கு வேதங்களைச் சார்ந்தவர்களும் நான்கு வெவ்வேறு தினங்களில் உபாகர்மத்தைக் கொண்டாடுகிறார்கள்.

இந்த நாளில்தான் இந்திரனின் மனைவியான சசி, அசுரர்களால் இந்திரன் தோற்கடிக்கப்பட்ட பொழுது அவனது மணிக்கட்டில் ரக்ஷை கட்டினாள். பிறகு தேவர் தலைவனான இந்திரன் இந்த ரக்ஷையின் துணையுடன் அசுரர்களைத் தோற்கடித்து, தான் இழந்த அமராவதி

நகரை மீண்டும் பெற்றான். (ரக்ஷை என்றால் காப்பு என்று பொருள்).

வட இந்தியாவில் வரும் ஆண்டில் தீமையிலிருந்து விடுபட வேண்டி இந்த நாளில் சகோதரிகளால் சகோதரர்களின் மணிக்கட்டில் ராகீ அல்லது ரக்ஷீ எனப்படும் புனிதநூல் கட்டப்படுகிறது. பிராம்மணர்களும் புரோஹிதர்களும் இதுபோலவே தங்கள் போஷகர்களின் கரங்களில் ரக்ஷை கட்டி பரிசுகளைப் பெறுகிறார்கள். ராகீ அல்லது பட்டு நூல் கட்டப்படுகையில் ஒரு மந்திரம் சொல்லப்படுகிறது. மந்திரசக்தியுடன் கூடியதாக பட்டுநூல் கட்டப்படுகிறது.

*யேன பத்தோ பலீ ராஜா தானவேந்த்ரோ மஹாபல:*
*தேன த்வாம் அனுபத்நாமி ரக்ஷே மா சல மா சல!*

இந்த மந்திரத்தின் ஆற்றல் தீயவற்றிலிருந்து இது தரித்திருப்பவனைக் காக்கிறது.

## 10. ரத ஸப்தமி

இது மார்கழி (டிசம்பர் - ஜனவரி) மாதத்தின் வளர்பிறை 7ம் நாளில் வருகிறது. ஜனங்கள் அதிகாலையில் சூரியனை வணங்கி சூரிய ஸஹஸ்ர நாமத்தை ஜபிக்கிறார்கள். இந்த நாளில் செய்யப்படும் நற்காரியங்கள் பன்மடங்கு பலனைத் தரும். இந்த தினத்தில் பிராம்மணர்கள் உபவாசம் இருந்து இறைவனை வழிபட்டால் அவர்கள் தேவர்கள் ஆகிறார்கள். க்ஷத்திரியர்கள் இதுபோல் செய்தால் பிராம்மணர்களாகிறார்கள். வணிகம் செய்யும் வைசியர் கள் க்ஷத்திரியர்கள் ஆகிறார்கள்; ஊழியம் செய்யும் சூத்திரர்கள் வைசியர்கள் ஆகிறார்கள். இந்த தினத்தில் பெண்கள் உபவாசம் இருந்தால் அவர்கள் ஞானத்தையும் நற்குணங்களையும் பெறுகிறார்கள். விதவைகள் இந்த நாளில் உபவாசம் இருந்தால் அடுத்த பிறவி முதல் அவர்கள் விதவை நிலையிலிருந்து விடுபடுவார்கள். இந்த நாளில் விரதமிருந்தால் அந்தணனைக் கொன்ற பாபம்கூட இல்லாதாகிறது. சூரியோதய சமயத்தில் ஸ்நா னம் செய்பவன் கங்கை அன்னையைப் போல தூய்மை அடைகிறான். அவன் ஏழையாகவே இருக்கமாட்டான்.

இந்த நாளில் உபவாசமிருங்கள். மௌனத்தைக் கடைப்பிடியுங்கள். தனி இடத்தில் இருங்கள். ஜபம் செய்யுங்கள். சிரத்தை பக்தியுடன் ஆழ்ந்த தியானம் செய்யுங்கள். இந்த நாளிலேயே நீங்கள் இறை அனுபவம் பெறுவீர்கள்.

# 11. தெலுங்குப் புத்தாண்டு தினம்

சாந்திரமானத்தின்படி இது சைத்ர (மார்ச் - ஏப்ரல்) மாதத்தின் முதல் நாளில் வருகிறது. இது ஒரு மகிழ்ச்சிகரமான நன்னாள். ஆந்திரப் பிரதேச மக்களுக்கும், உலகெங்கிலும் உள்ள தெலுங்கர்களுக்கும் இது புத்தாண்டு தினம்.

விந்திய மலைக்கு வடக்கே இருப்பவர்கள் பார்ஹஸ் பத்யமானத்தைக் கடைப்பிடிக்கிறார்கள். விந்திய மலைக்குத் தெற்கே உள்ளவர்கள் சௌரமானம் அல்லது சாந்திரமானத்தை அனுஷ்டிக்கிறார்கள்.

பிராம்மணர்களின் பல பிரிவினர் கடைப்பிடிக்கும் பழக்கவழக்கங்களில் ஒரு விசேஷம் உண்டு. அவற்றில் பழக்கம் இல்லாதவர்கள் அதன் பொருள் தெரியாது சிரமப்படுவர். அவர்கள் அனைவரும் பிராம்மணர்கள். ஆனாலும் கோத்திரத்தைப் பொருத்தமட்டில் அவர்களுக் கிடையில் சிறிது வேறுபாடு உண்டு. அவர்கள் பின்பற்றும் காலண்டர்களின் மாதமும் தேதியும் வேறுபடும். சிலர் சூரிய கதியையும், வேறு சிலர் சந்திரனின் கதியையும் அடிப்படையாகக் கொண்டு கணக்கீடுகள் செய்வதால் அனைவரும் பிராம்மணர்கள் என்றாலும் புத்தாண்டுக் கணக்கு வெவ்வேறு பிரிவினரிடையே வேறுபடுகிறது. இவ்வாறு தெலுங்கு வருஷப் பிறப்பும் தமிழ் வருஷப் பிறப்பும் வட இந்திய வருஷப் பிறப்பினின்றும் வேறுபடுகின்றன.

## 12. வஸந்த நவராத்திரி

வஸந்த நவராத்திரியின்போது தேவி தெய்வீக அன்னையாக வழிபடப்படுகிறாள். இது வஸந்த காலத்தில் நிகழ்கிறது. அன்னை கேட்டுக் கொண்டதற் கிணங்கவே அவள் வணங்கப்படுகிறாள். தேவீ பாகவதத்தில் வரும் கீழ்க்காணும் பகுதியில் நீங்கள் இதைக் காணலாம்.

முன்பொரு நாள் த்ருவஸிந்து என்ற மன்னன் ஒரு சமயம் வேட்டைக்குச் சென்றபோது ஒரு சிங்கத்தால் கொல்லப்பட்டான். அதன் பிறகு இளவரசன் ஸுதர்சனின் முடிசூட்டு விழா ஏற்பாடுகள் வெகு விமரிசையாக நடைபெற்றன. ஆனால் அரசி லீலாவதியின் தந்தையான உஜ்ஜயினி மன்னன் யுதாஜித்தும், அரசி மனோரமாவின் தந்தையான கலிங்க மன்னனான வீரஸேனனும் தங்கள் பேரக் குழந்தை களுக்கு கோசலை நாட்டைப் பெற்றுத் தர விரும்பினர். அவர்கள் ஒருவரோடொருவர் போரிட்டனர். சண்டையில் வீரஸேன மன்னன் கொல்லப்பட்டான். இளவரசன் ஸுதர்சனன் மற்றும் ஓர் அலியுடன் அரசி மனோரமா காட்டிற்கு ஓடிவிட்டாள். பாரத்வாஜ ரிஷியின் ஆசிரமத்தில் அவர்கள் அடைக்கலம் புகுந்தனர்.

வெற்றிபெற்ற மன்னனான யுதாஜித் கோசலை யின் தலைநகரமான அயோத்தியில் தனது பேரனான சத்ருஜித்தை மன்னனாக முடிசூட்டினான். பிறகு மனோரமா மற்றும் அவளது மகனையும் தேடி காட்டிற்குச் சென்றான். தன்னிடம் அடைக்கலம் புகுந்த வர்களை விடமுடியாது என்று ரிஷி கூறிவிட்டார். அதைக் கேட்ட யுதாஜித் சினப்பட்டான். அவன் ரிஷியைத் தண்டிக்க விரும்பினான். ஆனால் அவனது

மந்திரி, ரிஷியின் கூற்றின் உண்மையை அவனுக்கு எடுத்துரைத்தான். யுதாஜித் தலைநகரத்திற்குத் திரும்பினான்.

இளவரசன் ஸுதர்சனுக்கு அதிர்ஷ்டம் காத்திருந்தது. துறவி ஒருவரின் மகன் ஒரு நாள் அங்கு வந்து அலியின் சமஸ்கிருதப் பெயரான க்ளீபன் என்றழைத்தான். இளவரசன் அந்தப் பெயரின் 'க்ளீ' முதல் எழுத்தைப் பிடித்துக் கொண்டு 'க்ளீம்' என்று உச்சரிக்க ஆரம்பித்தான். இந்த வார்த்தை சக்திவாய்ந்த ஒரு மந்திரமாகும். இது அன்னை பராசக்தியின் பீஜாக்ஷரமாகும். இதை திரும்பத் திரும்ப உச்சரித்ததால் அன்னையின் அருளைப் பெற்று இளவரசன் . மன அமைதி அடைந்தான். அவன் முன் தேவி தோன்றி அவனை ஆசீர்வதித்து அவனுக்கு தெய்வீக ஆயுதங்களையும், அளப்பரிய ஆற்றலையும் அருளினாள்.

காசி மன்னனின் தூதுவர்கள் ரிஷியின் ஆசிரமத்தைக் கடந்து செல்கையில் அழகான இளவரசன் ஸுதர்சனனைப் பார்த்ததும் காசி மன்னனின் புதல்வி சசிகலாவிற்கு அவனைத் திருமணம் செய்து வைக்கலாம் என்று சிபாரிசு செய்தனர்.

சுயம்வர விழாவும் நடைபெற்றது. சசிகலா உடனேயே ஸுதர்சனனைத் தேர்ந்தெடுத்தாள். முறைப் படி அவர்களது திருமணம் நிகழ்ந்தது. அந்த நிகழ்ச்சியில் பங்குகொண்ட மன்னன் யுதாஜித், காசி மன்னனுடன் போரிட்டான். ஸுதர்சனனுக்கும் அவனது மாமனாருக்கும் தேவி உதவி செய்தாள். யுதாஜித் தேவியைக் கேலி செய்தான். அதைக் கண்ட தேவி யுதாஜித்தையும் அவனது படையையும் சாம்பலாக்கினாள்.

இவ்வாறு ஸுதர்சன் தனது மனைவி மற்றும் மாமனாருடன் தேவியைத் துதித்தான். தேவி மிகவும் மகிழ்ந்து வஸந்த நவராத்திரியின்போது ஹோமத்துடன் தன்னை வழிபடுமாறு அவர்களைப் பணித்தாள். பிறகு அவள் மறைந்துவிட்டாள்.

இளவரசன் ஸுதர்சனனும் சசிகலாவும் பாரத்வாஜ ரிஷியின் ஆசிரமத்திற்குத் திரும்பினர். ரிஷி அவர்களை ஆசீர்வதித்து ஸுதர்சனனை கோசல மன்னனாக முடி சூட்டினார். ஸுதர்சனன், சசிகலா, காசி மன்னன் மூவரும் அன்னை பராசக்தியின் ஆணையின்படி வஸந்த நவராத்திரியின்போது பூஜையை வெகு சிறப்பாகக் கொண்டாடினர்.

ஸுதர்சனனின் வாரிசுகளான ஸ்ரீராமனும் லக்ஷ்மணனும் வஸந்த நவராத்திரி பூஜை செய்து சீதையைக் கண்டுபிடிப்பதில் அவ்ளது அருள்ளப் பெற்றனர்.

வஸந்த நவராத்திரியின்போது ஸுதர்சனன் மற்றும் ஸ்ரீராமர் செய்தது போல வஸந்த நவராத்திரி பூஜை செய்து தேவியை வழிபடுதல் பொருள் மற்றும் அருள் வளத்தைப் பெற ஒவ்வொரு ஹிந்துவுக்கும் பெரிதும் உதவும். அன்னை பராசக்தியின் அருளின்றி எதையும் அடைய முடியாது. எனவே, அவளது புகழ் பாடி அவளது பெயரையும் மந்திரத்தையும் உச்சரியுங்கள். அவளது உருவத்தைத் தியானியுங்கள். பூஜை செய்யுங்கள். பிரார்த்தனை செய்து அவளது அருளையும் ஆசியையும் பெறுங்கள். அன்னை பராசக்தி அனைத்து தெய்வ ஸம்பத்துகளையும் உங்களுக்கு அருள்வாளாக!

## 13. வஸந்த பஞ்சமி

இது ஒரு முக்கியமான ஸ்நான தினமாகும். எல்லா ஹிந்துக்களும் இதைக் கடைப்பிடிக்கின்றனர். இது (ஜனவரி - பிப்ரவரி) மார்கழி மாதத்தில் வருவதால் 'மாக சுக்ல பஞ்சமி' என்றும் அழைக்கப்படுகிறது. வஸந்த காலத்தின் முதல் நாளை இது குறிக்கிறது.

தீவிரமான யோக சாதனை செய்வதற்கு உறுதுணையாயமையும் மனதுக்கிசைந்த பருவத்தையே 'வஸந்தம்' என்ற சொல் குறிக்கிறது.

ஆண்கள், பெண்கள், சிறுமிகள் யாவரும் மஞ்சள் உடை அணிகின்றனர். மங்களத்தையும் ஆன்மீகத்தையும் மஞ்சள் நிறம் குறிக்கிறது. வஸந்த காலப் பயிர்கள் முற்றியதை அது எடுத்துக்காட்டுகிறது. குங்குமப் பூவைப் பயன்படுத்தி உணவும் மஞ்சள் நிறமாக ஆக்கப்படுகிறது. எல்லோரும் ஒன்றுகூடி வஸந்த காலம் பற்றிய பாடல்களைப் பாடி ஆடுகின்றனர்.

எல்லோரும் அதிகாலையில் எழுந்திருந்து ஸ்நானம் செய்து சூரியனையும், புனித கங்கை நதிக்குரிய தெய்வமான கங்காதேவியையும், பூமாதேவியையும் வழிபடுகின்றனர்.

இந்த முக்கிய நாளில் சிவன் காதல் தெய்வமான மன்மதனை எரித்தார். தாரகாசுரனை வதம் செய்வதற்காக ஆற்றல் மிகுந்த ஒரு மகனைப் பெற வேண்டி சிவபெருமான் சமாதியில் ஆழ்ந்திருந்த பொழுது மன்மதன் அவரைத் தூண்ட முயற்சித்தான். ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்திருந்து சிவன் மீது மன்மதன் அம்பை விட்டான். சிவன் மிகுந்த கோபத்திற்குள்ளா னார். அவர் தனது மூன்றாவது கண்ணைத் திறந்து மன்மதனைச் சாம்பலாக்கினார். ஸ்கந்த சஷ்டி

தலைப்பில் வரும் கட்டுரையில் இது பற்றிய விபரம் விரிவாகத் தரப்படுகிறது.

வங்காளிகள் இந்த உத்ஸவத்தை ஸரஸ்வதி பூஜை என்று அழைக்கின்றனர். இந்த தினத்தில் அவர்கள் ஸரஸ்வதி தேவியை வணங்குகின்றனர். தேவியின் உருவம் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டு கங்கையில் விடப்படுகிறது.

# 14. ஸ்ரீ அப்பைய ஜயந்தி

ப்ரமாதீச வர்ஷம் (1544 A.D.) கன்யா மாதம் கிருஷ்ண பக்ஷத்தில் அப்பைய தீக்ஷிதர் புண்ணியமான உத்தரப்ரோஷ்டபத நட்சத்திரத்தில் அவதரித்தார். அக்டோபர் இரண்டாம் நாளன்று அவரது ஜயந்தி கொண்டாடப்படுகிறது.

தென்னிந்தியாவின் 16ம் நூற்றாண்டு சரித்திரத்தில் மிகச் சிறந்து விளங்கிய ஸ்ரீ அப்பையர் சமஸ்கிருத இலக்கியத்தின் பல்வேறு பிரிவுகளிலுமாக மொத்தம் 104 நூல்களை இயற்றியிருக்கிறார். குறிப்பாக, வேதாந்த நூல்களுக்காகவே அவர் புகழ் பெற்றார். வேதாந்தத்தின் பல்வேறு பிரிவுகளும் அவரது பேனா முனை மூலம் ஆக்கமும் ஊக்கமும் பெற்றன.

அவரது வேதாந்த நூல்களில் சதுர்மத ஸாரஸங்க்ரஹம் என்ற நூல் மிகவும் பிரசித்தி பெற்றதாகும். ஏனெனில் நான்கு முக்கிய பிரிவுகளான த்வைதம், விசிஷ்டாத்வைதம், சிவாத்வைதம், அத்வைதம் என்பவற்றை எவ்விதப் பாகுபாட்டு உணர்வும் இன்றி மிக அற்புதமாக விளக்கியிருக்கிறார். இந்த விளக்கம் அவருடைய ந்யாய முக்தாவளி, ந்யாய மூகமாலிகா, ந்யாய மணிமாலா, ந்யாய மஞ்சரி என்ற படைப்புகளில் தரப்பட்டுள்ளன. இந்த நான்கும் சேர்ந்தது தான் "சதுர் மத ஸார ஸங்க்ரஹம்" ஆகும்.

கவிதை, தத்துவம், சொல்லலங்காரம் போன்ற சமஸ்கிருத இலக்கியத்தின் பல்வேறு பிரிவுகளிடையே அவரது காலத்தில் அவருக்கிணை வேறு யாருமில்லை. அது மட்டுமல்ல, இன்றுவரை அவருக்குப் பின் எவருமே இந்தத் துறையில் அவருக்கீடாகத் தோன்றியதில்லை. அவரது குவலயானந்தம் என்ற சொற்கலை நூலே இத்துறையில் முதல் நூலாகப் படிக்க எடுத்துக்

கொள்ளப்படுகிறது. இயற்கையாக எதிர்பார்ப்பது போல, அவரது காலத்திய அவருடைய போட்டியாளரான பண்டிட் ஜகன்னாதர் தமது ரஸகங்காதரம் என்ற நூலில் அதற்கு விமர்சனம் செய்துள்ளார்.

சிவ பக்தர்களிடையே அவரது சிவனைப் பற்றிய ஸ்தோத்திரங்கள் மிகவும் பிரபலமானவையாகும். பரிமளம் என்ற பெயர் கொண்ட வேதாந்தத்தைப் பற்றிய அவரது விளக்கவுரை மிகவும் சிலாக்கியமானது. அவரது சீரிய வேதாந்த ஞானத்திற்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும்.

அவரது அறிவு அபாரமானது. அவரது காலத்திலேயே பிறர் அவரைப் பெரிதும் போற்றி வணங்கினர். இன்றும் அத்தகைய மதிப்பு அவருக்கு உண்டு. ஒரு சமயம் அவர் தமது மனைவியின் பிறந்த ஊருக்குச் சென்றார். அவரைத் தங்கள் ஊர்க்காரர் என்று சொல்வதில் பெருமை கொண்ட அந்தக் கிராமவாசிகள் அவரை வரவேற்கப் பெரும் ஏற்பாடு செய்தனர். ஊரில் எங்கும் உற்சாகம் காணப்பட்டது. "புகழ் பெற்ற தீக்ஷிதர் இன்று எங்கள் ஊருக்கு வருகிறார்", என்று அவரைப் பெருமையுடன் அனைவரும் வரவேற்றனர். அந்த நிகழ்ச்சிக்கு முன் கிராமத்தாரிடையே வேறு எந்தப் பேச்சும் அவரைப் பற்றி இல்லை. அந்த நாளும் வந்தது. ஞான சிங்கமாக விளங்கிய அப்பைய தீக்ஷித ரைப் பார்க்கவேண்டி ஊரார் நெருக்கியடித்துக் கொண்டு வரவேற்றனர்.

ஒரு வயதான மூதாட்டி கையில் ஊன்றுகோலுடன் அந்தக் காட்சியைக் காண வந்தாள். அவள் வயோதிகத் தைக் கண்டு மற்றவர்களும் அவளை கூட்டத்தில் முன்னே சென்று பார்க்க அனுமதித்தனர். அவள் சில நிமிடங்கள் அவரையே உற்று நோக்கினாள்.

எப்பொழுதோ பார்த்த முகத்தின் நினைவு அவளது மனத்தில் எழுந்தது.

அவரை இன்னார் என்று அடையாளம் கண்டு கொண்ட அந்த மூதாட்டி, "இந்த முகத்தை நான் எங்கோ பார்த்திருக்கிறேன். ஆமாம், சரிதான்! நீ ஆச்சாளுவின் அகத்துக்காரர் இல்லையா?", என்று கேட்டாள்.

அந்தப் பெரும் பண்டிதர் ஒரு புன்னகையுடன் அவளது ஊகம் சரியானதே என்று ஆமோதித்தார்.

அதைக் கேட்ட அம்மூதாட்டியின் முகம் சுருங்கியது. அவளுக்கு ஒரே ஏமாற்றம். எந்தவித ஆர்வமும் இல்லாதவளாக அவள், "இந்த ஆச்சாளுவின் கணவனையா நான் பார்க்க வந்தேன்", என்று முணுமுணுத்துக் கொண்டே தன் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

இந்த நிகழ்ச்சியை அப்பைய தீக்ஷிதர், '*அஸ்மின் க்ராமே ஆச்சாளு ப்ரஸித்தா*". இந்த கிராமத்தில் ஆச்சாளுவுக்குத் தான் பெருமை அதிகம்', என்ற கவிதை வரியின் மூலம் குறிப்பிடுகிறார்.

அப்பைய தீக்ஷிதர் சிவபெருமானின் அவதாரமாகக் கருதப்படுகிறார். தென்னிந்தியாவில் உள்ள திருப்பதிக் கோவிலுக்கு அவர் சென்றபொழுது அங்கிருந்த வைஷ்ணவர்கள் அவரைக் கோவிலுக்குள் செல்ல அனுமதிக்கவில்லை. மறுநாள் காலையில் கோவில் கதவைத் திறந்த அர்ச்சகர்கள் விஷ்ணு விக்ரகம் சிவமூர்த்தியாக மாறியிருந்ததைக் கண்டு திடுக்கிட்டனர். கோவிலின் தலைமை அர்ச்சகர் அது கண்டு திடுக்கிட்டுப் போனார். உடனே அவர் அப்பைய தீக்ஷிதரிடம் மன்னிப்புக் கோரி மீண்டும் முன்போலவே விஷ்ணு மூர்த்தியாக மாற்றித் தர வேண்டும் என்று விண்ணப்பித்தார்.

பதினாறாம் நூற்றாண்டின் மத்தியில் அப்பைய தீக்ஷிதர் வாழ்ந்தார். கவிதையில் பண்டிட் ஜகன்னாதருக்கு பெரும் போட்டியாளராக அவர் விளங்கினார். சங்கர வேதாந்தத்திற்கு எந்த விதத்திலும் அப்பைய தீக்ஷிதர் மாறுபட்டவர் அல்ல. எனினும், ஜய்ப்பூர் போன்ற பல இடங்களில் வல்லபாச்சாரிய சித்தாந்திகளுடன் வாதம் புரிந்தார். அவர் தமது கொள்கைகளை சித்தாந்தலேசம் என்னும் நூலில் தொகுத்துத் தந்திருக்கிறார். சங்கர சீடர்களிடையே கொள்கை வேறுபாடுகளின் அற்புத கருத்துத் தொகுப்பாக இது விளங்குகிறது.

பாரதம் தந்துள்ள மிகச் சிறந்த ஆன்மீகவாதிகளில் இவரும் ஒருவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவரது வாழ்க்கைச் சரிதம் பற்றிய முழுத் தகவலும் நம்மிடம் இல்லாவிடினும், அவரது பெருமையைப் பறைசாற்ற அவரது படைப்புகளே போதும்.

அக்டோபர் இரண்டாம் தேதியன்று நீங்கள் அப்பைய தீக்ஷிதரின் ஜயந்தியைக் கொண்டாடுகையில், கடவுளையும் உங்கள் குருவையும் நீங்கள் வணங்குங்கள். அப்பைய தீக்ஷிதரின் நூல்களை, குறிப்பாக ஆத்மார்ப் பண ஸ்துதி என்ற அவரது சிறந்த பக்தி நூலைப் படியுங்கள்.

# 15. தத்தாத்ரேய ஜயந்தி

*ஓம் நமோ பகவதே தத்தாத்ரேயாய*

மார்கழி மாதத்தின் (டிசம்பர் - ஜனவரி) பௌர்ணமி தினத்தில் தத்தாத்ரேய ஜயந்தி வருகிறது. அவரது கதை பின்வருமாறு :

அனுசூயை கற்பிற்கு எடுத்துக்காட்டாகக் கருதப் படுகிறாள். பெரிய முனிவரும், முக்கிய துறவியரில் ஒருவருமான அத்ரி மகரிஷியின் மனைவி அவள் ஆவாள். கணவனுக்குப் பணிந்து நடப்பதும், கணவனையே கண்கண்ட கடவுளாகக் கருதுவதும்தான் பதி விரதா தர்மத்தின் இலக்கணமாகும். அனுசூயை அத்தகைய சிறந்த பதிவிரதையாக இருந்தாள். பிரம்மா, விஷ்ணு, சிவனுக்கு இணையான குழந்தைகளைப் பெற வேண்டி அவள் வெகு காலம் கடும் தவம் புரிந்தாள்.

ஒரு சமயம் ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகிய மூவரும் திரிமூர்த்திகளான தங்கள் கணவன்மாரிடம் அவர்கள் உடலில் உடை எதுவும் அணியாமல் அனசூயையிடம் சென்று அவளுடைய பதிவிரதா தர்மத்தைச் சோதிக்கும் விதத்தில் யாசகம் கேட்க வேண்டும் என்று வேண்டினர்.

பிரம்மா, விஷ்ணு, சிவன் அனுசூயையின் தவம் மற்றும் விருப்பத்தை அறிந்து கொண்டனர். எனவே தங்கள் மனைவிமாரின் வேண்டுகோளுக்கு அவர்கள் இணங்கினர். ஏனெனில் அதனால் அனுசூயையின் விருப்பத்தையும் பூர்த்தி செய்யலாம் என்பது அவர்களது கருத்து. அவர்கள் சன்யாசி வடிவில் அனுசூயை முன் சென்று அவர்களது மனைவிமார் கேட்டுக் கொண்டபடியே அவர்களுக்கு பிக்ஷை அளிக்கும்படி வேண்டினர். அனுசூயை இக்கட்டான நிலைமைக்குள்

ளானாள். சன்யாசிகளின் வேண்டுகோளை நிராகரிக்க அவளால் முடியவில்லை. அதே சமயத்தில் அவளது பதிவிரதா தர்மத்தையும் காப்பாற்றியாக வேண்டும். ஏனெனில் தனது கணவன் அல்லாத மற்ற ஆடவர் முன் நிர்வாணமாகத் தோன்றினால் அது அவளது பதிவிரதா தர்மத்தை மீறியதாகும். அவள் தன் கணவனைத் தியானித்து, அவரது பாதங்களில் சரண் புகுந்து, அவளது கணவனது பாதங்களைக் கழுவிய நீரில் சில துளிகளை அவர்கள் மீது தெளித்தாள். உடனேயே அவளது பதிவிரதா தர்மத்தின் மேன்மையினால் அந்த மும்மூர்த்திகளும் மூன்று பச்சிளம் பாலகர்களாக உருமாறினர். அதே சமயத்தில் அவளது ஸ்தனங்களில் பால் சுரந்தது. அவர்களைத் தன் குழந்தைகளாகவே பாவித்து அவள் நிர்வாண நிலையிலேயே அவற்றிற்குப் பால் ஊட்டினாள். அவர்களைத் தொட்டிலில் இட்டு ஆட்டினாள். ஸ்நானம் செய்யச் சென்றிருந்த தனது கணவனின் வரவை ஆவலுடன் அவள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

அத்ரி மஹரிஷி வீட்டிற்குத் திரும்பியதும் அவர் இல்லாத சமயத்தில் அங்கு நடந்தது அனைத்தையும் அவள் அவரிடம் கூறி அந்த மூன்று குழந்தைகளையும் அவர் பாதங்களில் வைத்து வணங்கினாள். ஆனால் இஃதனைத்தும் அத்ரி மஹரிஷிக்கு அவரது ஞான திருஷ்டியினால் தெரிந்திருந்தது. அவர் அந்த மூன்று குழந்தைகளையும் அன்புடன் அணைத்தார். உடனே அந்த மூன்று குழந்தைகளும் இரண்டு கால்கள், ஒரு உடல், மூன்று தலைகள் மற்றும் ஆறு கைகளுடன் கூடிய உருவமாக மாறின. அனுசூயையின் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய வேண்டி மும்மூர்த்திகளும் மூன்று குழந்தைகளாக அவள் முன் வந்தனர் என்று சொல்லி அத்ரி ரிஷி அனுசூயையை ஆசீர்வதித்தார்.

இதற்கிடையில் நாரதர், ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகிய மூவரிடமும் சென்று அவர்களது கணவன்மார் அனுசூயையின் பதிவிரதா சக்தியால் குழந்தைகளாக மாற்றப்பட்டுவிட்டார்கள் என்றும், அவர்கள் மூவரும் அத்ரி மஹரிஷியிடம் சென்று தங்கள் கணவன்மாரை பிக்ஷையாகத் தர வேண்டும் என்று வேண்டினால் ஒழிய அவர்களைத் திரும்பப் பெற முடியாது என்றும் கூறினார். அதற்கேற்ப அந்த மூன்று தேவியரும் சாதாரணப் பெண்களாக மாறி அத்ரியின் முன் சென்று, கூப்பிய கரங்களுடன் தங்கள் கணவன்மாரைப் பிச்சையாகத் தர வேண்டும் என்று வேண்டினர். அத்ரி ரிஷி அவர்களை முறைப்படி கௌரவித்து, கை கூப்பி வணங்கி அவருடையவும், அவரது மனைவியுடையவும் ஆசை நிறைவேற வேண்டும் என்று விண்ணப்பித்தார்.

பிறகு திரிமூர்த்திகளும் அவர்களது சுய உருவில் அவர் முன் தோன்றி, "இந்தக் குழந்தை உங்களது விருப்பத்திற்கேற்ப ஒரு பெரிய ரிஷியாக விளங்கும், உங்களது மனைவியின் விருப்பத்திற்கேற்ப எங்களுக்கிணையாக விளங்கும். இக்குழந்தை தத்தாத்ரேயன் என்று அழைக்கப்படட்டும்" என்று கூறி மறைந்து போயினர்.

குழந்தை தத்தாத்ரேயன் விரைவில் வாலிபத்தை எய்தினான். திரிமூர்த்திகளின் சுடர் அவனிடம் இருந்ததாலும், உயர் ஞானம் அவனிடம் மிளிர்ந்ததாலும் எல்லா முனிவர்களும் துறவிகளும் அவனை வணங்கினர். அவனிடம் அடக்கமும் அமைதியும் பண்பும் காணப்பட்டன. எப்பொழுதும் உடையின்றி இருந்த ஒரு அவதூதராக அவர் திகழ்ந்தார். வேதாந்த உண்மைகளை அவர் புகட்டினார். தமது அவதூத கீதையை தத்தாத்ரேயர் சுப்பிரமணியப் பெருமானுக்குப் புகட்டினார். இது வேதாந்த உண்மைகளையும்,



பகவான் தத்தாத்ரேயர்

ஆத்மபோதம் பற்றிய அவரது அனுபவங்களையும், கொண்டு விளங்கும் ஓர் அரிய நூலாகும்.

ஒரு சமயம் அவர் கானகத்தில் சுற்றிக் கொண்டிருந்த பொழுது யது மன்னனை சந்தித்தார். தத்தாத்ரேயர் மிகவும் மகிழ்ச்சியாக இருந்ததைக் கண்ட மன்னன் அவரது மகிழ்ச்சியின் காரணத்தைக் கேட்டார். அவரது குரு யார் எனவும் வினவினார்.

''ஆத்மா தான் எனது குரு. எனினும் நான் இருபத்து நான்கு பேரிடமிருந்து ஞானம் பெற்றேன். இவர்கள் மனிதர்கள் மட்டுமல்லாது பல்வேறு பொருள்களாகும். அவை அனைத்தும் எனது குருமாராவர்,'' என்றார் தத்தாத்ரேயர்.

பின்னர் தத்தாத்ரேயர் தமது 24 குருமார், யார் யார் என்று சொல்லி அவர்களிடமிருந்து தான் எத்தகைய ஞானத்தைப் பெற்றார் என்பதை கீழ்வருமாறு விளக்கினார் :

''பூமி, தண்ணீர், காற்று, தீ, ஆகாயம், சந்திரன், புறா, மலைப்பாம்பு, கடல், வீட்டில் பூச்சி, வண்டு, தேனீ, யானை, மான், மீன், நடனமாது பிங்களா, பருந்து, குழந்தை, பணிப்பெண், பாம்பு, அம்பு செய்வோன், சிலந்தி, குளவி, சூரியன் ஆகியவையே எனது 24 குருமார்கள்.

1. பொறுமையையும் பிறருக்கு நன்மை செய்வதையும் பூமியிலிருந்து கற்றேன்.

2. தூய்மையை நான் தண்ணீரிடமிருந்து கற்றேன்.

3. உலகில் பலருடன் நான் பழகினாலும் எவ்வாறு பற்றற்று இருக்க வேண்டும் என்பதை காற்றிடமிருந்து கற்றேன்.

4. ஆத்மஞானம் மற்றும் தவத்துடன் கூடிய ஒளியுடன் நான் எப்படி பிரகாசிக்க வேண்டும் என்பதை தீயிடமிருந்து கற்றேன்.

5. ஆத்மா எங்கும் நிறைந்தது, அதே வேளையில் எதனுடனும் தொடர்பு இல்லாதது என்பதை நான் ஆகாயத்திடமிருந்து கற்றேன்.

6. ஆத்மா எப்பொழுதும் பூரணமானது, மாற்றமில்லாதது, தவிர உபாதிகள் தான் அதன்மீது நிழல்களை ஏற்படுத்துகின்றன என்பதை சந்திரனிடமிருந்து நான் கற்றேன்.

7. பல குடங்களில் உள்ள தண்ணீரில் பிரதிபலிக்கும் சூரியன் பல்வேறு பிம்பங்களாகத் தெரிவது போல, மனதின் துணையுடன் சரீரங்கள் மூலம் பிரதிபலிப்பதால் பிரம்மன் பலவாறாகத் தோன்றுகிறது. இதைத்தான் நான் சூரியனிடமிருந்து கற்றேன்.

8. தனது குஞ்சுகளுடன் கூடிய ஒரு புறா ஜோடியைப் பார்த்தேன். ஒரு வேடன் வலையை விரித்து குஞ்சுகளைப் பிடித்தான். தாய்ப்புறா தன் குஞ்சுகளை மிகவும் நேசித்தது. அதுவும் வலையில் விழுந்து பிடிபட்டது. இதிலிருந்து பாசமே பந்தத்திற்குக் காரணம் என்பதை நான் கற்றுக் கொண்டேன்.

9. மலைப்பாம்பு தனது உணவிற்காக அலைவதில்லை. அது ஓரிடத்தில் இருந்து கொண்டு, தனக்கு எது கிடைக்கிறதோ அதில் திருப்தி அடைகிறது. இதிலிருந்து உணவிற்காக நாம் பரபரக்கக் கூடாது, கிடைத்ததில் திருப்தி அடைய வேண்டும் என்பதையும் நான் கற்றுக் கொண்டேன்.

10. நூற்றுக்கணக்கான நதிகள் தன்னுள் பாய்ந்தாலும், கடல் நிலை குலையாமல் இருக்கிறது. அதைப்போல பல்வேறு கஷ்டங்கள், தொல்லைகள்

மற்றும் தூண்டுதல்களுக்கிடையில் அறிஞன் நிலை குலையாமல் இருக்க வேண்டும்.

11. பார்வைப் புலனைக் கட்டுப்படுத்தி ஆத்மாவில் மனதை லயிப்பது எப்படி என்பதை விட்டில் பூச்சியிடமிருந்து நான் கற்றேன்.

12. ஒரு வீட்டிலிருந்து சிறிது உணவும், இன்னொரு வீட்டிலிருந்து சிறிது உணவும் பெற்று நான் என் பசியைப் போக்கிக் கொள்கிறேன். குடும்பத்தாருக்கு நான் பாரமாக இருப்பதில்லை. பல பூக்களிலிருந்து தேனைச் சேகரிக்கும் கருவண்டினிடமிருந்து நான் இந்தப் பாடத்தைக் கற்றேன்.

13. தேனீக்கள் மிகுந்த சிரமத்துடன் தேனைச் சேகரிக்கின்றன. ஆனால் ஒரு வேடன் வெகு எளிதில் அந்தத் தேனை அபகரித்துவிடுகிறான். இதிலிருந்து பொருள்களைச் சேர்த்துவைப்பது பயனற்றது என்பதை நான் கற்றுக் கொண்டேன்.

14. ஒரு பெண் யானையைப் பார்த்த மாத்திரத்திலேயே ஆண் யானை காமத்தால் அறிவிழந்து புற்களால் மூடப்பட்ட குழியில் விழுகிறது. எனவே ஒருவன் காமத்தை விட்டுவிட வேண்டும்.

15. இசையில் மயங்கியதால் மான் வேடனிடம் பிடிபடுகிறது. எனவே ஒருவன் மயக்கும் இசையை ஒரு போதும் கேட்கக் கூடாது.

16. உணவினை நாடும் மீன் தூண்டிலில் எளிதில் அகப்படுவது போல், உணவில் பேராசை கொண்ட மனிதன் தனது சுதந்திரத்தை இழந்து பாழடைகிறான்.

17. பிங்களா என்று ஒரு நடன மாது இருந்தாள். வாடிக்கையாளர்களை எதிர்பார்த்துக் காத்திருந்து ஒரு நாள் அவள் கண்பூத்துப் போனாள். அவள் நம்பிக்கை இழந்தாள். அன்று கிடைத்தது போதும் என்பதில் திருப்தி கொண்டு அவள் உறக்கத்தில் ஆழ்ந்தாள். ஆசையை

விட்டாலே திருப்தி ஏற்படும் என்ற உண்மையை இந்த தாசிப் பெண்ணிடமிருந்து நான் கற்றுக் கொண்டேன்.

18. பருந்து ஒன்று மீன்துண்டு ஒன்றைக் கவ்விக் கொண்டது. அதனால் மற்ற பறவைகள் அதைப் பின்தொடர்ந்து துன்புறுத்தின. அது தன் வாயிலிருந்த் மீன் துண்டை கீழே போட்டுவிட்டு அமைதியை அடைந்தது. உலகப் பொருள்களின் பின்னால் ஓடும் வரை ஒருவன் சகலவிதத் துன்பங்களைப் பெறுகிறான் என்பதையும், அந்தப் பறவையைப் போல அவற்றை விட்டால் ஆனந்தத்தை அடைகிறான் என்பதையும் நான் இதிலிருந்து கற்றேன்.

19. தாயிடம் பாலைக் குடிக்கும் குழந்தை எல்லா வித கவலைகள், ஏக்கங்கள் மற்றும் தொல்லைகளி லிருந்து விடுபட்டு எப்பொழுதும் மகிழ்ச்சியாயிருக்கிறது. அந்தக் குழந்தையிடமிருந்து நான் மகிழ்ச்சியா யிருப்பதைக் கற்றுக் கொண்டேன்.

20. தாதிப்பெண் அரிசியிலிருந்து உமியைப் புடைத்து நீக்கிக் கொண்டிருந்தாள். அவளது கைவளைகள் பெருத்த ஒலி எழுப்பிக் கொண்டிருந்தன. வளைகளின் ஓசையை இல்லாதாக்க அவற்றை அவள் ஒவ்வொன்றாகக் கழற்றினாள். இரண்டு எஞ்சிய போதும் அவை கொஞ்சம் ஒலியை எழுப்பின. ஒன்றே ஒன்று இருந்தபொழுது ஒலி எதுவும் எழவில்லை. அவள் மகிழ்ச்சி அடைந்தாள். பலவற்றிடையே இருக்கையில் வேற்றுமை, தொல்லை, சண்டை, தகராறு ஆகியவை ஏற்படும் என்பதை அதிலிருந்து நான் கற்றுக் கொண்டேன். இரண்டு பேர் இருந்தாலும் தேவையற்ற வார்த்தைகளும் விவாதங்களும் இருக்கும். துறவி அல்லது சன்யாசி தனிமையில் ஏகாந்தமாக இருக்க வேண்டும்.

21. பாம்பு தனது வளையைத் தானே கட்டுவதில்லை. மற்றவை தோண்டிய வளையினுள் அவை வசிக்கின்றன. அதுபோல துறவி ஒருவன்

தனக்கென தானே வீடு எதுவும் கட்டிக் கொள்ளலாகாது. பிறர் கட்டிய குகை அல்லது கோயிலிலே அவன் வசிக்க வேண்டும்.

22. அம்பு செய்வோனிடமிருந்து ஆழ்ந்த மன ஒருமைப்பாட்டை நான் கற்றுக் கொண்டேன்.

23. சிலந்தி தன் வாயிலிருந்து நீண்ட இழைகளை உமிழ்ந்து அதிலிருந்து கூட்டைக் கட்டுகிறது. பிறகு தான் உருவாக்கிய அந்தக் கூட்டில் தானே அகப்பட்டுக் கொள்கிறது. அதைப் போல தனது எண்ணங்களின் வலையில் ஒரு மனிதன் தானே சிக்கிக் கொள்கிறான். எனவே அறிஞன் ஒருவன் எல்லா உலகாயத எண்ணங்களையும் விடுத்து பிரம்மனை மட்டுமே சிந்திக்க வேண்டும்.

24. குளவி, பூச்சி ஒன்றினைப் பிடித்து தன் கூட்டில் வைத்து அதைக் கொட்டுகிறது. பாவம் அந்தப் பூச்சி எப்பொழுது அந்தக் குளவி மீண்டும் வந்து தன்னைக் கொட்டுமோ என்று எண்ணி எண்ணி இறுதியில் அந்தக் குளவியாகவே மாறிவிடுகிறது. அந்தக் குளவி மற்றும் பூச்சியின் வாயிலாக ஆத்மாவில் தியானித்து ஆத்மனாகவே ஆக வேண்டும் என்பதை நான் கற்றுக் கொண்டேன். இவ்விதம் நான் உடலிடம் அனைத்துப் பற்றுதலையும் விடுத்து, முக்தி அடைந்தேன்.

தத்தாத்ரேயரின் இந்த உயர்ந்த ஞான வார்த்தை களைக் கேட்டு அரசன் பெரிதும் மகிழ்ந்தான். உலகை உதறித் தள்ளி ஆத்ம தியானத்தில் அவன் ஆழ்ந்தான்.

தத்தாத்ரேயர் எந்தவிதமான விருப்பு வெறுப்பு மின்றி, பொறுமையுடன் திகழ்ந்தார். எந்த இடத்திலிருந்து வந்தாலும் அவர் ஞானத்தைப் பெற்றார். ஞான வேட்கையுடையவர்கள் அனைவரும் தத்தாத்ரேயரைப் பின்பற்ற வேண்டும்.

தத்தாத்ரேய ஜயந்தியன்று பிரம்மமுகூர்த்தத்தில் எழுந்திருந்து தியானம் செய்யுங்கள். அன்று முழுவதும் உபவாசம் இருந்து பிரார்த்தனையில் ஈடுபடுங்கள். எவருடனும் உறவாடாதீர்கள். முழுக்க தனிமையில் இருங்கள். உடலை மறவுங்கள். ஆனந்தமயமான ஆன்மாவுடன் உங்களை ஒன்றுபடுத்திக் கொள்ளுங்கள். தத்தாத்ரேயரின் அற்புதப் படைப்புகளான அவதூத கீதை மற்றும் ஜீவன் முக்த கீதையைப் படியுங்கள். தத்தாத்ரேயர் அல்லது உங்கள் குருவின் உருவத்தை வழிபடுங்கள். தத்தாத்ரேயரின் போதனைகளை உங்கள் வாழ்வில் பின்பற்றுவதற்காக உறுதிமொழி ஏற்றுக் கொள்ளுங்கள். ஆத்மானுபூதியை நீங்கள் எளிதில் அடைவீர்கள்.

ரிஷிகேசம் சிவானந்த ஆசிரமத்தில், ஆசிரமத்திற்கு அருகில் இருக்கும் தத்தாத்ரேயர் ஆலயத்தில் இந்த நாள் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

1. தத்தாத்ரேயப் பெருமானின் உருவம் நீராட்டுவிக்கப்பட்டு பூக்களால் அலங்கரிக்கப்பட்டு வழிபடப் படுகிறது.

2. எல்லா ஆன்ம சாதகர்களும் அங்கே ஒன்று கூடி இறைவன் புகழைப் பாடுகிறார்கள்.

3. தத்தாத்ரேயப் பெருமானின் வாழ்வும் வாக்கும் பற்றி யோகிகளும் சன்யாசிகளும், இரவு சத்சங்கத்தில் சொற்பொழிவாற்றுகின்றனர். அவதூத கீதை, ஜீவன் முக்த கீதை படித்து விளக்கப்படுகின்றன.

4. அது ஒரு பெரும் மகிழ்ச்சிக்குரிய நாளாகும்.

தத்தாத்ரேய பெருமானின் அருள் உங்கள் அனைவர் மீதும் மலர்வதாகுக. இப்பிறவியிலேயே நீங்கள் ஆத்மானுபூதியான மிக உயர்ந்த இலட்சியத்தை அடைவீர்களாக.

# 16. கணேச சதுர்த்தி

ஸாக்ஷாத் பிரம்மமானவரும், பரம்பொருளானவரும், சிவனின் சக்தியாக அமைபவரும், அனைத்து ஆனந்தத்தின் காரணமானவரும், எல்லா நலன்களையும் காரியங்களில் வெற்றியையும் அளித்தருள்பவருமாகிய கணேசப் பெருமானுக்கு நமஸ்காரம்.

மூஷிகவாஹன மோதகஹஸ்த
சாமரகர்ண விளம்பிதஸூத்ர!
வாமனரூப மஹேஸ்வர புத்ர
விக்ன விநாயக பாத நமஸ்தே ||

பொருள் : "விநாயகப் பெருமானே! எலியை உமது வாகனமாகக் கொண்டு, கையில் கொழுக்கட்டையுடன், நீண்ட தும்பிக்கை மற்றும் அகன்ற காதுகளுடன் குறுகிய உருவத்தில் சிவனார் மைந்தனாக எல்லா விக்னங்களையும் நீக்கும் உமது திருப்பாதங்களை நான் வணங்குகிறேன்."

கணேச சதுர்த்தி ஹிந்து விழாக்களில் மிகவும் பிரபலமானதொன்றாகும். இது விநாயகரின் ஜன்ம தினமாகும். விநாயகப் பெருமானுக்கு மிகவும் உகந்த நாள் இது. (ஆகஸ்டு - செப்டம்பர்) பாத்ரபத மாதத்தின் வளர்பிறை நான்காம் நாளில் இது வருகிறது. பாரதம் மட்டுமல்லாது உலகில் எங்கெல்லாம் ஹிந்துக்கள் வாழ்கின்றார்களோ அங்கெல்லாம் விநாயக சதுர்த்தி சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

களிமண்ணில் விநாயகரின் உருவங்கள் உருவாக்கப்பட்டு, இரண்டு நாட்கள் வழிபடப்பட்டு (சில சமயங்களில் பத்து நாட்கள் கொண்டாடப்படுகிறது) அவை நீரில் கரைக்கப்படுகின்றன.

கணேசப் பெருமான் யானை முகம் கொண்டவர், எந்த பிரார்த்தனையிலும் அவர்தான் முதலில் வணங்கப்படுகிறார். எந்த மங்களகரமான நிகழ்ச்சியை ஆரம்பிப்பதற்கு முன்னும் அவரது நாமங்கள் உச்சரிக்கப்படுகின்றன.

ஆற்றல் மற்றும் அறிவின் தெய்வம் அவர். சிவபெருமானின் மூத்தமகன். ஸ்கந்தனாம் கார்த்தி கேயனின் அண்ணன் அவர். சிவனின் சக்தி அவர். எனவே சங்கர் - உமாதேவியின் மைந்தன் என அழைக் கப்படுகிறார். தாய்மார்கள் கணேசப் பெருமானை வழிபடுவதன் மூலம் அவரது அருங்குணங்கள் தங்கள் குழந்தைகளுக்கும் அமைய வேண்டும் என எதிர் பார்க்கின்றனர்.

அவரது பிறப்பைப் பற்றியும், யானை முகம் அவருக்கு எப்படி வந்தது என்பதைப் பற்றியும் கீழ்க்காணும் கதை சொல்லப்படுகிறது.

ஒரு சமயம் சிவபெருமானின் தேவியான கௌரி மாதா குளித்துக் கொண்டிருக்கையில் தனது உடலிலிருந்தே தூய வெள்ளை நிறத்தில் கணேசப் பெருமானை செய்து, வீட்டு வாயிலில் அவரை வைத்தார். உள்ளே தான் குளித்துக் கொண்டிருக்கையில் எவரையும் அனுமதிக்கக் கூடாது என்று அவள் கணேசரிடம் கூறினாள். மிகுந்த தாகத்துடன் வீட்டிற்குத் திரும்பிவந்த சிவபெருமானை கணேசர் வாசலிலேயே தடுத்து நிறுத்திவிட்டார். கோபம் கொண்ட சிவன், கணேசரை யாரோ அயலார் என நினைத்து அவரது கழுத்தை வெட்டிவிட்டார்.

இதை அறிந்த கௌரி மிகவும் வருத்தப்பட்டாள். அவளை சமாதானப்படுத்தும் விதத்தில், வடக்கு நோக்கித் தலைவைத்துக் தூங்கிக் கொண்டிருக்கும்

உயிரினத்தின் தலையைக் கொய்து கொணருமாறு தனது சேவகர்களுக்கு சிவன் உத்தரவிட்டார். சேவகர்களும் தங்களுக்கு இட்ட பணியை நிறைவேற்றச் சென்ற பொழுது, ஒரு யானை வடக்கு நோக்கித் தலைவைத்துக் தூங்கிக் கொண்டிருப்பதைக் கண்டனர். உடனே அதன் தலையைக் கொய்து சிவனிடம் சமர்ப்பித்தனர். சிவபெருமான் கணேசரது உடலுடன் யானைத் தலையைப் பொருத்தினார்.

திருமணங்கள், பயணங்கள், வித்யாப்யாசம் போன்ற அனைத்து நிகழ்ச்சிகளின் ஆரம்பத்திலும் தமது மகன் வழிபடப்பட வேண்டும் என அவர் ஏற்பாடு செய்தார். பாத்ரபத மாதத்தின் வளர்பிறை நான்காம் நாளன்று வருடாந்திர விநாயகர் வழிபாடு நடத்தப்பட வேண்டும் என்ற முறையை அவர் ஏற்படுத்தினார்.

ஸ்ரீகணேசப் பெருமானின் அருள் மற்றும் ஆசி இன்றி எதையும் அடைய முடியாது. அவரது துணை, அருள் மற்றும் அனுக்கிரகம் இல்லாமல் எந்தச் செயலையும் தொடங்க முடியாது.

ஒரு மகாராஷ்டிரக் குழந்தை 'ஓம் ஸ்ரீகணேசாய நம:' என்று சொல்லியே தனது அரிச்சுவடிப் பாடத்தைத் தொடங்குகிறது. அதன் பிறகுதான் எழுத்து கற்பிக் கப்படுகிறது.

ஸ்ரீவிநாயகப் பெருமானின் பிரபலமான சில பெயர்கள் பின்வருமாறு: தூம்ரகேது, ஏகதந்த, கஜகர்ணக, லம்போதர, விக்னராஜா, கணாத்யக்ஷ, பலசந்த்ர, கஜானன, விநாயகர், வக்ரதுண்ட, ஸித்தி விநாயக, சூர்ப்பகர்ண, ஹேரம்ப, ஸ்கந்த பூர்வஜ, கபில, விக்னேஸ்வர. மகாகணபதி என்றும் அவருக்கு மற்றொரு பெயர் உண்டு.

*'ஓம் கம் கணபதயே நம:'* என்பது அவருக்குரிய மந்திரம். தங்கள் இஷ்ட தெய்வமாக கணேசரை வணங்கும் சாதகர்கள் இந்த மந்திரத்தையோ அல்லது *ஓம் ஸ்ரீகணேசாய நம:* என்ற மந்திரத்தையோ உச்சரிக்கிறார்கள்.

கணேச பக்தர்கள் கணேச காயத்ரி மந்திரத்தையும் ஜபிக்கிறார்கள். அது பின்வருமாறு:-

*தத்புருஷாய வித்மஹே*
*வக்ரதுண்டாய தீமஹி*
*தன்னோ தந்தி: ப்ரசோதயாத்।*

ஞானம் மற்றும் ஆனந்தத்தின் உருவகம் கணேசப் பெருமான். பிரம்மச்சாரிகளில் அவரே முதல்வர்.

ஒரு சிறிய எலியே அவரது வாகனம். மூலாதார சக்கரத்தின் தெய்வம் அவரே. உடலில் குண்டலினி சக்தி உறையும் மானஸீக கேந்திரம் இது.

ஆன்மீக சாதகனின் பாதையில் எதிர்ப்படும் அனைத்து விக்கினங்களையும் அகற்றி, உலகாயத மற்றும் ஆன்மீக வெற்றியை அருளும் அருட்தெய்வம் அவர். எனவே அவர் விக்கின விநாயகர் என்று அழைக்கப்படுகிறார். அவரது பீஜாக்ஷரம் 'கம்' என்பதாகும். ஆங்கிலத்தில் 'Sung' என்ற ஒலிக்கு நிகர் இது. ஒற்றுமை, அமைதியின் தெய்வம் அவர்.

ஹிந்துக்களின் பிரதான மந்திரமான ஓம் அல்லது பிரணவத்தை கணேசப் பெருமான் குறிக்கிறார். அதை உச்சரிக்காமல் எதையுமே செய்ய முடியாது. எந்த சடங்கையோ அல்லது காரியத்தையோ ஆரம்பிக்கும் முன்னர் கணேசரைத் துதிக்கும் பழக்கத்தை இது குறிக்கிறது. அவரது இரண்டு பாதங்களும் அறிவு, செயல் ஆகியவற்றின் ஆற்றலைக் குறிக்கிறது. இயற்கையில்

'ஓம்' வடிவத்தில் உள்ள ஒரே உயிர் யானை என்பதைத் தான் அவரது யானை முகம் குறிக்கிறது.

எலியின் மீது சவாரி செய்வது ஆணவத்தை முழுக்கவும் அடக்குவதைக் குறிக்கிறது. அங்குசத்தை வைத்திருப்பது அவர் உலகத்தை அடக்கி ஆள்வதைக் குறிக்கிறது. அது தெய்வீக சாம்ராஜ்யத்தின் சின்னமாகும்.

கணேசரே முதற் கடவுள். இயற்கையில் காணப்படும் மிகச் சிறிய படைப்பான எலியை வாகனமாகக் கொண்டு மிகப் பெரிய படைப்பான யானைத் தலையுடன் அவர் விளங்குவது கணேசப் பெருமானே அனைத்துயிர்களையும் படைக்கிறார் என்பதைக் குறிக்கிறது. யானை ஒரு புத்திசாலியான பிராணி. இது கணேசப் பெருமான் ஞானத்தின் உருவகம் என்பதைக் காட்டுகிறது. அது வளர்ச்சியின் முறையையும் குறிக்கிறது. எலி படிப்படியாக வளர்ந்து யானையாகிறது. கடைசியில் மனிதனாகிறது. இதனால் தான் விநாயகருக்கு மனித உடல், யானை முகம், எலி வாகனம் இருக்கிறது. அவரது உருவத்தின் தத்துவம் இதுவே.

அவர் கணங்களின் நாயகர். உதாரணமாக புலன்களின் கூட்டம் அல்லது கணம், தத்துவங்களின் கணம் என்றும் கொள்ளலாம். சிவபெருமானின் சேவகர்கள் அல்லது சிவகணங்களின் தலைவர் அவரே.

வைஷ்ணவர்களும் கணேசரை வழிபடுகின்றனர். அவர்கள் அவரை தும்பிக்கை ஆழ்வார் என்று வணங்குகின்றனர். யானையின் தும்பிக்கை கொண்ட ஆழ்வார் என்பது இதன் பொருள்.

குண்டலினி, வல்லபை (அன்பு, சக்தி) ஆகிய இரண்டும் கணேசரின் இரண்டு சக்திகளாகும்.

உள்ளே இனிப்பைக் கொண்ட அரிசிமாவினால் செய்த கொழுக்கட்டை அவருக்கு மிகவும் பிடிக்கும். அவரது பிறந்த நாள் ஒன்றின்போது அவர் வீடு வீடாகச் சென்று கொழுக்கட்டைகளைப் பெற்றுக் கொண்டிருந்தார். நிறைய அவற்றைச் சாப்பிட்டுவிட்டு இரவில் அவர் எலியின் மீதமர்ந்து பவனி வந்து கொண்டிருந்தார். திடீரென்று எலி நடுங்கியது. அது ஒரு பாம்பைப் பார்த்து பயந்துவிட்டது. அதனால் கணேசர் கீழே விழுந்துவிட்டார். அவரது வயிறு கிழிந்து அத்தனை கொழுக்கட்டைகளும் வெளியே தெறித்தன. ஆனால் அவற்றை மீண்டும் கணேசர் தன் வயிற்றினுள் திணித்து அந்தப் பாம்பைத் தன் வயிற்றைச் சுற்றிக் கட்டிக் கொண்டார்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த ஆகாயத்திலிருந்த சந்திரன் கடகடவென்று சிரித்தான். அவனது இந்த அநாகரிகச் செயலைப் பார்த்து சினந்த விநாயகப் பெருமான் தனது கொம்புகளில் ஒன்றை ஒடித்து அதை சந்திரனை நோக்கி எறிந்து, கணேச சதுர்த்தி தினத்தன்று சந்திரனை எவரும் பார்க்கலாகாது என்று சபித்தார். அவ்விதம் எவராவது பார்த்தால் அவர்கள் இகழ்ச்சியையும், பாவத்தையும் அடைவர். தவறுதலாக எவராவது அந்த நாளன்று சந்திரனைப் பார்க்க நேரிட்டால், அதற்குப் பிராயசித்தமாக ச்யமந்தக மணியை பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் திரும்பப் பெற்றார் என்ற கதையை அவர்கள் கேட்க வேண்டும், அல்லது பாராயணம் செய்ய வேண்டும். ஸ்ரீமத்பாகவதத்தில் இந்தக் கதை வருகிறது. கணேச பெருமான் இதைச் சொன்னார். ஜயகணேச! தனது பக்தர்களிடம் அவருக்குள்ள அன்புதான் என்னே!

கணேசப் பெருமானுக்கும் அவரது சகோதரரான சுப்ரமண்யப் பெருமானுக்கும் இடையில் ஒரு முறை யார்

பெரியவர் என்ற தர்க்கம் எழுந்தது. இந்த விஷயம் சிவபெருமானிடம் ஒரு முடிவு வேண்டி தெரிவிக்கப் பட்டது. யார் முதலில் உலகை வலம் வந்து திரும்பு கிறார்களோ அவனே பெரியவன் என்று சிவபெருமான் கூறினார். உடனே சுப்ரமண்யர் தமது மயில் வாகனத் தில் ஏறி உலகை வலம் வரக் கிளம்பிவிட்டார். ஆனால் அறிவிற் சிறந்த கணபதி தமது பெற்றோரை வலம்வந்து தமது வெற்றிக்கான பரிசைக் கேட்டார்.

"அன்புக் கணேசா! நான் உனக்கு எப்படிப் பரிசைக் கொடுப்பேன்? நீ உலகத்தைச் சுற்ற வில்லையே!", என்றார் சிவபெருமான்.

"இல்லை. நான் என் பெற்றோரை வலம் வந்தேன். அகில உலகமும் என் பெற்றோருள் அடக்கம்", என்று கணேசர் பதிலளித்தார். இவ்விதமாக இந்தப் பிரச்சினை இருவருள் கணேசரே மூத்தவர் என்ற முடிவுடன் முற்றுப் பெற்றது. அவரது வெற்றியின் அடையாளமாக அன்னை பார்வதி தேவி அவருக்கு ஒரு பழத்தைக் கொடுத்தாள்.

கணபதி உபநிஷதத்தில், கணேசரே பரமாத்மன் என்று கூறப்படுகிறது. பிரம்ம வைவர்த்த புராணத்தின் கணேச காண்டத்தில் கணேசரைப் பற்றிய கதைகள் சொல்லப்படுகின்றன.

கணேச சதுர்த்தியன்று அதிகாலை பிரம்ம முகூர்த்தத்தில் கணேசருடன் தொடர்பு கொண்ட கதைகளை தியானியுங்கள். பிறகு ஸ்நானம் செய்துவிட்டு, விநாயகர் கோவிலுக்குச் சென்று, கணேசரைப் பூஜை செய்யுங்கள். அவருக்கு தேங்காய், மோதகம் அளியுங்கள். ஆன்மீக மார்க்கத்தில் நீங்கள் அனுபவிக்கும் அனைத்து விக்கினங்களையும் அவர் போக்கி அருளட்டும் என்று சிரத்தா பக்தியுடன்

வேண்டிக் கொள்ளுங்கள். வீட்டிலும் அவரை வழிபடுங்கள். இதற்கு ஒரு புரோகிதரின் உதவியைப் பெறுங்கள். உங்கள் வீட்டில் கணேசரின் விக்கிரகத்தை வைத்துக் கொண்டு அதில் அவரது சான்னித்தியத்தை உணருங்கள்.

அந்த கணேச சதுர்த்தி நாளன்று விநாயகருக்குப் பிடிக்கவில்லை என்பதால் சந்திரனைப் பார்க்காதீர்கள். இதனது தாத்பர்யம் என்னவெனில், கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள், கடவுள், குரு, மற்றும் உங்கள் சமயத்தைப் பழிப்பவர்கள் எவரோ அவர்களுடன் சகவாசம் வைத்துக் கொள்ளாதீர்கள் என்பதாகும்.

புதிய ஆன்மீகப் பிரதிக்ஞைகளை மேற்கொண்டு உங்களது அனைத்து முயற்சிகளிலும் வெற்றி வேண்டு மென்றும் உள் ஆன்மீக பலம் வேண்டுமென்றும் கணேசப் பெருமானைப் பிரார்த்தனை செய்யுங்கள்.

உங்கள் அனைவர் மீதும் கணேசப் பெருமானின் அருள் மலர்வதாகுக! உங்கள் ஆன்மீக மார்க்கத்தில் நேரிடும் அத்தனை தடைகளையும் அவர் நீக்கி அருள்வாராக! எல்லா லௌகிக செழிப்பு மற்றும் முக்தியையும் அவர் உங்களுக்கு நல்குவாராக!

# 17. கீதா ஜயந்தி

ஸ்ரீமத் பகவத்கீதை பிறந்த நாளே கீதா ஜயந்தியாகும். மார்கழி (டிசம்பர் - ஜனவரி) மாதத்தின் வளர்பிறை பதினோறாம் நாளன்று கீதையைப் போற்றிப் பாராட்டும் அனைத்து பக்தர்களாலும் பாரதம் முழுவதும் இது கொண்டாடப்படுகிறது. இந்த நாளில் தான் ஸ்ரீகிருஷ்ணருக்கும் அர்ஜுனனுக்கும் இடையில் நிகழ்ந்த சம்பாஷணையை திருதராஷ்டிர மன்னனுக்கு ஸஞ்ஜயன் எடுத்துக் கூறி, அதன் மூலம் பகவானின் அரிய போதனைகளை உலகோர் அனைவருக்கும் எக்காலத்திற்கும் அவற்றைப் பெற வகை செய்த புண்ணிய தினம் இது.

மனித குல வரலாற்றில் கீதா ஜயந்தி ஒரு மிக முக்கிய நாளாகும். சுமார் ஆறாயிரம் வருடங்கட்கு முன் இதே நாளில் மானிட நாகரிகமெனும் வானத்தில் பேரொளி வீசும் மின்னல் ஒன்று மின்னியது. குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் பகவானால் அளிக்கப் பட்ட பகவத்கீதை போதனையே அந்த ஆன்மீகப் பேரொளியாகும். வினாடிப் போதில் தோன்றி மறையும் ஏனைய சாதாரண மின்னலைப் போலல்லாமல், இந்தப் புனித நாளில் அன்று தோன்றிய இப்பேரொளி பல நூற்றாண்டுகள் தொடர்ந்து ஒளிர்ந்து பூரணத்தை நோக்கிய மனிதகுலத்தின் பாதையை இன்றும் ஒளிர்வித்துக் கொண்டிருக்கிறது.

மிகவும் அழகிய, அதேவேளையில் ஒரே உண்மையான தத்துவ கீதம் பகவத்கீதையாகும். தத்துவம் மற்றும் ஞானத்தின் மேலான பாடங்கள் அதன் பாலுள்ளன. அது 'அமரகீதம்', 'தேவ கீதம்'. அது ஒரு பொதுமறை. ஜாதி, மத, வயது மற்றும் சமய

வேறுபாடின்றி அனைவருக்கும் பொருந்தும் ஒரு வாழ்க்கைத் தத்துவம் அதில் அடங்கியுள்ளது.

ஆறாயிரம் வருடங்களுக்கு முன்னர் பகவானான ஸ்ரீ கிருஷ்ணரால் இந்திய அரச குமாரனான அர்ஜுனன் மூலம் அருளப்பட்ட செய்தியே பகவத்கீதை. பாரதத்தின் புராதனமான தத்துவச் சுரங்கமாக விளங்கும் உபநிடதங் களின் அடிப்படையில் கீதையின் போதனைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இருமை நிறைந்த உலகத் திலிருந்தும், எதிரிடை இரட்டைகளிலிருந்தும் விடுபட்டு அழியாத ஆனந்தம் மற்றும் அமரத்துவத்தை அடைவதற் கான வழியை கீதை காண்பிக்கிறது. அது ஒரு செயல் தத்துவம். வெளிச் சூழ்நிலையினால் ஒருவரது அந்தராத்மா சிறிதும் பாதிக்கப்படாமல், அனைத்துச் செயல்களின் பலனையும் பகவானிடம் அர்ப்பணித்து, போராட்டமயமான உலகில் ஒருவன் ஆற்ற வேண்டிய அன்றாடக் கடமைகளை அது போதிக்கிறது.

ஆற்றல் மற்றும் அறிவின் கேந்திரமே கீதை. நீங்கள் தளர்ந்திருக்கும்போது அது உங்களை சக்தி சாலியாக்குகிறது. நீங்கள் அயர்ந்திருக்கும்போது அது உங்களுக்கு உற்சாகம் அளிக்கிறது. அதர்மத்தை அகற்றி தர்மத்தைக் கடைப்பிடிக்க அது உங்களைக் கேட்டுக் கொள்கிறது.

கீதை ஒரு வெறும் புத்தகமல்ல; அது ஒரு வெறும் மறை நூல் அல்ல. மனித குலத்திற்கு என்றென்றும் தேவைப்படும் ஓர் உயிர்த் துடிப்புள்ள செய்தியைச் சொல்லுவதே அது. ஞானக் கடலான பரமாத்மனிட மிருந்து பெருகும் அமுதமொழிகளே அதில் அடங்கி யுள்ளன.

கீதையின் குரல் பரமாத்மனின் அழைப்பாகும். அது தேவநாதத்தின் விளக்கமாகும். அனைத்து உயிர் மற்றும்

ஆற்றலின் இருப்பிடம் 'ஓம்' ஆகும். இது தேவவாக்கு "நீங்கள் அனைவரும் பேருண்மையின் தொடர்ந்த இடையறாத உணர்வில் ஆழ்ந்திருப்பீர்களாக" என்று யாண்டும் அழைக்கும் நாதப் பிரம்மம் அதுவாகும். இந்த உயர்ந்த செய்தியைத் தான் கீதை விவரித்து தெளிவாக உலகோர் அனைவரும் ஏற்றுக் கொள்ளும் விதத்தில் எடுத்தியம்புகிறது. கீதையின் இதே செய்தியைத்தான் நானும் உங்களுக்கு அழுத்தமாக நினைவுபடுத்த விரும்புகிறேன்.

எப்பொழுதும் தெய்வீகத்தை உணர்ந்திருத்தல், யாண்டும் தெய்வீக சான்னித்தியத்தை உணர்தல், உங்கள் இதயத்திலும் உங்களைச் சுற்றிலும் எப்பொழுதும் பரமாத்மனின் நினைவுடன் வாழ்தல் என்பதானது பூமியில் பூரண தெய்வீக வாழ்க்கை வாழ்வதாகும். இத்தகைய பகவத் தியானம் மற்றும் மனநிலை உங்களை மாயையின் பிடியிலிருந்தும், எல்லாவித பயத்திலிருந்தும் நிரந்தரமாக விடுவிக்கிறது. பரமாத்மனை மறப்பதானது மாயையில் விழுவதாகிறது. பேருண்மையின் இடையறா நினைவில் வாழ்வதானது மாயையிடமிருந்து வெகுதூரம் விலகி, அருள் ஒளியில் யாண்டும் இருப்பதாகும்.

இந்த உயர் செய்தியை திரும்பத் திரும்ப கீதை எவ்வாறு வலியுறுத்துகிறது என்பதை கவனியுங்கள். "உங்கள் மனத்தை என்பால் வையுங்கள், உங்கள் அறிவை என்னிடம் செலுத்துங்கள்" என்று பகவான் கூறுகிறார்.

"ஆகையால் எல்லாக் காலத்திலும் என்னையே நினைந்து, யுத்தம் செய்வாயாக. உன்னை எனக்கு அர்ப்பணித்தால், என்னை நீ நிச்சயம் அடைவாய்", என்று பகவான் மற்றொரு சுலோகத்தில் கூறுகிறார்.

"இதயத்தில் என்னோடு கலந்தவனாக செயலைச் செய்வாயாக", என்று மீண்டும் கூறுகிறார்.

"உனது இலட்சியமாக என்னை ஏற்று நீ தெய்வீக மனத்தவனாக இருப்பாயாக. உனது அடிமனம் தெய்வீகமாக இருத்தல் வேண்டும்," என்ற வார்த்தைகளுடன் கீதை உங்களை நல்வாழ்விற்கு இட்டுச் செல்கிறது.

"என்னிடம் எப்பொழுதும் மனத்தை வைத்தவர்களை நான் இந்த மரண உலகத்திலிருந்து காத்தருள்கிறேன்," என்று பகவான் உறுதி மொழியையும் அளிக்கிறார்.

கீதையின் உணர்ச்சியூட்டும் போதனை இத்தகையது. அது உலகில் மனிதன் தனது கடமையைச் செய்வதற்கிடையிலேயே பூரண வாழ்க்கை வாழும் வழியைக் காட்டுகிறது. மனிதன் இந்த போதனையை வெகுகாலமாக மறந்துவிட்டான். இறைவனை மறந்து பணத்திற்கும் புலனின்பத்திற்கும் உலகம் அடிமையாகி விட்டது. இதற்கான ஒரு பயங்கர விளைவையும் அனுபவித்தாகிவிட்டது. மனிதா! இந்த மறதி போதும்! "ஆணவத்தின் காரணமாக கேட்காவிட்டால் நீ அழிந்து போவாய்", என்று பகவான் மனிதனை எச்சரித்திருக்கிறார்.

இந்தப் புண்ணிய நூலினைப் பற்றி பாரதத்தின் பல இளைஞர்களும் யுவதிகளும் மிகவும் கொஞ்சமே அறிந்திருப்பது பெரும் வருத்தத்தினை அளிக்கிறது. ஸ்ரீமத் பகவத்கீதையைப் பற்றிய நல்லதொரு அறிவு உங்களிடம் இல்லாவிட்டால் நீங்கள் தரமான கல்வி கற்றவர்களாகக் கருதப்படமாட்டீர்கள். கீதையின் உயர் ஞானத்திற்கு முன்னர் எல்லா பட்டமேற்படிப்பு அறிவும்,

எல்லாப் பல்கலைக்கழக ஆராய்ச்சி அறிவும் தூசிக்கு நிகர்.

கீதையின் போதனைகளுக்கேற்ப வாழுங்கள். வெறும் சொற்பொழிவுகளும், பேச்சும் உங்களுக்கு எந்த நன்மையையும் தராது. ஒரு நடைமுறை 'கீதாவாதி'யாகுங்கள்.

கீழ்க்காணும் ஏழு சுலோகங்களில் கீதையைச் சுருக்கமாகக் கூறலாம்.

1. பிரம்மமாகிய ஏகாக்ஷர 'ஓம்'காரத்தை என்னை நினைந்து எவன் இறுதிக் காலத்தில் உச்சரிக்கிறானோ அவன் மேலாம் இலட்சியத்தை அடைகிறான்.

2. பகவானே! உம்மைப் புகழ்வதில் உலகமே இன்புறுகிறது. அசுரர்கள் அஞ்சி நாற்புறமும் ஓடுகிறார்கள். சித்த புருஷர்கள் அனைவரும் உம்மை வணங்குகின்றனர்.

3. எங்கும் கை, கால்களுடன், எங்கும் கண்கள், தலைகள், வாய்களுடன், எங்கும் செவிகளுடன் அனைத்தையும் சூழ்ந்து இறைவன் இயங்குகிறான்.

4. அணுவிலும் அணுவாய், அனைத்தையும் தாங்கி, சிந்தனைக்கெட்டாத உருவத்துடன், சூரியனைப் போன்ற ஒளியுடன் கூடிய அனைத்துமறிந்த, அகில உலகையும் தாங்கும் தொல்லோனை எவன் தியானிக்கிறானோ அவன் அறியாமை இருளுக்கு அப்பால் செல்கிறான்.

5. மேலே வேர்கள், கீழே கிளைகளுடன் கூடியதும், எதனது இலைகள் சந்தங்களாக அமைகிறதோ அந்த அழியாத அச்வத்தத்தை எவன் அறிகின்றானோ அவனே வேதங்களை அறிந்தவன்.

6. அனைத்தின் இதயத்திலும் அமர்ந்திருப்பவன் நான். என்னிடமிருந்தே நினைவும், அறிவும், மறதியும்

எழுகின்றன. அனைத்து வேதங்களாலும் உணரப் படுபவன் நானே. வேதாந்தத்தை ஆக்கியோனும் வேதங்களை உணர்ந்தோனும் நானே.

7. உன் மனத்தை என்பால் வை. என்னிடம் பக்தி செய். எனக்காக தியாகம் செய். என்னையே பரம்பொருளாகக் கருதி உன்னை என்னில் லயித்தால், நிச்சயம் நீ என்னை அடையலாம்.

ஞாயிற்றுக்கிழமை மற்றும் விடுமுறை நாட்களில் கீதை முழுவதையும் பாராயணம் செய்யுங்கள். ஸ்திதப்ரக் ஞனைப் பற்றி பேசும் இரண்டாவது அத்யாயத்தைத் திரும்பத் திரும்பப் படியுங்கள். 12ம் அத்தியாயத்தின் எட்டு அமிருதமயமான சுலோகங்களையும் படியுங்கள்.

மறைநூல்களைப் படிப்பதற்கு கீதையை மட்டும் படித்தாலே போதும். உங்கள் பிரச்சினைகள் அனைத்திற்கும் அதில் தீர்வு இருக்கக் காண்பீர்கள். பக்தி சிரத்தையுடன் நீங்கள் அதைப் படிக்குந்தோறும், உங்கள் அறிவு ஆழமாகும். உங்கள் அகப்பார்வை சூக்ஷ்மமாகும். உங்கள் சிந்தனை தெளிவடையும். கீதையின் ஒரு சுலோகத்திற்கேற்ப நீங்கள் வாழ்ந்தால்கூட உங்களது அனைத்துத் துன்பங்களும் முடிவுக்கு வரும். அழியாத அமைதி, அமரத்வம் எனும் வாழ்வின் இலட்சியத்தை அடைவீர்கள்.

வாசகர்களுக்கு அமைதி அளிப்பதும், அவர்களுக்கு பரமானந்தத்தை அடைவதில் பேருதவியாக அமைவதும் இந்த நாள் வரை நிலைத்து நிற்பதுமான ஓர் உத்தமமான உன்னதப் படைப்பை இறைவனாலன்றி வேறு எவரால் செய்ய முடியும்?

கீதையின் போதனைகள் மேலானவை, பரந்தவை, பொதுவானவை. எந்த ஒரு குறிப்பிட்ட சமூகம், இனம், வயது, இடம் அல்லது தேசத்தாருக்கு அது உரியது அல்ல.

அதனது போதனைகள் அனைவருக்கும் உரியவை. அனைவராலும் கடைப்பிடிக்கக் கூடிய மார்க்கத்தையே அது காட்டுகிறது. மனிதர் அனைவருக்கும் அமைதி, சுதந்திரம், மோட்சம் மற்றும் பூரணத்துவத்தை அளிக்கவல்ல செய்தி அதன்பால் உள்ளது.

சிவானந்த ஆசிரமத்தில் ஒவ்வொரு வருடமும் கீதா ஜயந்தி கீழ்க்கண்டவாறு விமரிசையாகக் கொண்டாடப் படுகிறது.

1. அனைத்து சாதகர்களும் அதிகாலை 4 மணிக்கு எழுந்திருந்து இறைவனை தியானம் செய்கின்றனர்.

2. சூரியோதயம் முதல் சூரிய அஸ்தமனம் வரை இடைவிடாமல் அகண்ட கீதா பாராயணம் செய்யப்படுகிறது. ஸம்புட முறை பின்பற்றப்படுகிறது. அதாவது ஒவ்வொரு கீதை சுலோகத்தின் முன்னும் பின்னும் கீழ்க்காணும் ஸம்புட ஸ்லோகம் சொல்லப் படுகிறது.

*ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ।*
*அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி*
*மா சுச:॥*

இவ்வாறு இரண்டு கீதா சுலோகங்களுக்கிடையில் இந்த சுலோகம் இருமுறை பாராயணம் செய்யப்படுகிறது. பகவானுடையவும், கீதாமாதாவினுடையவும் அருளைப் பெறுவதற்கு இது மிகவும் பலனளிக்கும் ஒரு முறையாகும்.

3. அன்றைய தினம் எல்லா ஆன்மீக சாதகர்களும் உபவாசம் இருக்கின்றனர். (அன்று ஏகாதசியும் கூட)

4. கீதா பாராயணத்தில் தத்தம் திறமையை வெளிப் படுத்தும் வகையில் சிறுவர்களுக்கிடையே பல்வேறு போட்டிகள் நடத்தப்படுகின்றன. சிறிது மூத்த மாணவர்களுக்கிடையே கீதையில் பேச்சுப் போட்டி

நடத்தப்படுகிறது. இப்புனித நூலை கற்பதில் குழந்தைகளுக்கு ஆர்வமூட்டுவதில் இது சிறந்த முறையாகும்.

5. மாலையில் நிகழும் சத்சங்கத்தில் யோகிகள், அறிஞர் பெருமக்கள் மற்றும் சன்யாசிகள் இப்புனித மறைநூலைப் பற்றி உபன்யாசம் செய்கின்றனர்.

6. கீதையின் போதனைகள் மற்றும் அதன் மொழி பெயர்ப்புகளுடன் கூடிய வெளியீடுகள் விநியோகிக்கப் படுகின்றன.

அன்றாடம் கீதையின் ஓர் அத்யாயத்தை பாராயணம் செய்வேன் என்று கீதா ஜயந்தியன்று உறுதி மேற்கொள்ளுங்கள். உணவு உட்கொள்ளும் முன் கீதையின் பதினைந்தாம் அத்யாயத்தைப் பாராயணம் செய்யுங்கள். சிவானந்தாசிரமத்தில் இது கடைப்பிடிக்கப் படுகிறது.

எப்பொழுதும் உங்களுடன் கீதையின் பாக்கெட் அளவு பிரதி ஒன்றை வைத்திருங்கள். உங்களுக்கு ஊக்கம் அளிக்கும் ஒருசில சுலோகங்களைக் குறியுங்கள். தினமும் பஸ்ஸுக்காகக் காத்திருக்கும் பொழுதோ அல்லது எப்பொழுது ஓய்வு கிடைக்கிறதோ அப்பொழுது கீதையைக் கையிலெடுத்து இந்த சுலோகங்களைப் படியுங்கள். உங்களிடம் புத்துணர்ச்சி பிறக்கும்.

கீதை காட்டும் வாழ்க்கையில் நீங்கள் அனைவரும் வாழ்வீர்களாக! வேதங்களின் தாயான கீதை உங்களுக்கு வழிகாட்டட்டும்! புராதன உபநிடதங்களின் ஞானமாம் பாலினால் அது உங்களைப் போஷிக்கட்டும்!

தெய்வீக குருவான ஸ்ரீகிருஷ்ணருக்கு நமஸ்காரம்! கீதையைத் தொகுத்த கவிசிரேஷ்டரான வியாஸருக்கு நமஸ்காரம்! அவரது அருள் உங்கள் அனைவர் மீதும் மலர்வதாகுக!

# 18. ஹனுமான் ஜயந்தி

*யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்*
*தத்ர தத்ர க்ருத மஸ்தகாஞ்சலிம்*
*பாஷ்பவாரி பரிபூர்ண லோசனம்*
*மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் ||*

பொருள் : தலைக்கு மேல் கூப்பிய கரங்களுடன், தாரை தாரையாய்க் கண்ணீர் பெருகும் கண்களுடன் ஸ்ரீராமனின் புகழ் பாடப்படும் இடங்களில் நிற்கும் ஸ்ரீஹனுமானாகிய மாருதியை நாங்கள் வணங்குகிறோம்.

தனியாகவோ அல்லது ஸ்ரீராமருடன் கூடவோ பாரதம் முழுவதும் ஸ்ரீஹனுமான் வணங்கப்படுகிறார். ஒவ்வொரு ராமர் கோவிலிலும் ஸ்ரீஹனுமானின் விக்கிரகமும் இருக்கும். ஹனுமான் சிவபெருமானின் அவதாரம். வாயுதேவனுக்கும், அஞ்சனா தேவிக்கும் பிறந்தவரே ஹனுமான். பவனஸூதன், மருத்ஸூதன், பவனகுமார், பஜ்ரங்கபலி, மஹாவீரர் என்ற பல பெயர்கள் ஹனுமாருக்கு உண்டு.

ராமநாமத்தின் உயிருருவம் அவர். ஆசையற்று மிகத் திறமையாகவும் உண்மையான கர்மயோகியாகவும் பணிபுரிந்த ஓர் இலட்சிய தன்னலமற்ற தொண்டர் அவர். அவர் ஒரு சீரிய பக்தர். தன்னிகரற்ற பிரம்மச் சாரி. எந்தவிதப் பிரதிபலனையும் கருதாமல் தூய அன்புடனும் பக்தியுடனும் அவர் ஸ்ரீராமனுக்குத் தொண்டு செய்தார். ராமனுக்குப் பணிவிடை செய்வதற் காகவே, அவர் வாழ்ந்தார். அவர் அடக்கம், தைரியம் மற்றும் அறிவுக் கூர்மையுடன் திகழ்ந்தார். எல்லா தெய்வீக குணங்களும் அவரிடம் இருந்தன. ராமநாமத்தை உச்சரித்துக் கொண்டு கடலைக் கடத்தல், இலங்காபுரியை எரித்தல், ஸஞ்ஜீவினி மூலிகையைக் கொணர்ந்து

இலக்ஷ்மணனை உயிர்ப்பித்தல் போன்ற பிறரால் செய்யமுடியாத செயல்களை அவர் செய்தார். அஹி ராவணனை பாதாளலோகத்தில் ஸம்ஹாரம் செய்து ராமலக்ஷ்மணர்களை அவர் மீட்டு வந்தார்.

பக்தி, ஆற்றல், அறிவு, தன்னலமற்ற தொண்டு உணர்வு, பிரம்மச்சர்ய சக்தி மற்றும் அவாவின்மை அவரிடம் இருந்தன. தமது அறிவையும் ஆற்றலையும் குறித்து அவர் ஒருபொழுதும் தற்பெருமை பாராட்டியதே இல்லை.

"நான் ஸ்ரீராமனின் ஒரு சாதாரண தூதன். ஸ்ரீராமனின் பணியைச் செய்வதற்காக நான் இங்கே வந்துள்ளேன். ஸ்ரீராமனின் ஆணையின்படி நான் இங்கே வந்திருக்கிறேன். ஸ்ரீராமனின் கிருபையால் எனக்கு அச்சமே கிடையாது. எனக்கு மரணபயம் கிடையாது. நான் ஸ்ரீராமனுக்குத் தொண்டு செய்கையில் மரணமடைய நேர்ந்தால் அதை வரவேற்கிறேன்", என்று ராவணனிடம் அவர் சொன்னார்.

ஹனுமானிடம் உள்ள பணிவைப் பாருங்கள்! ஸ்ரீராமரிடம் அவர் எவ்வளவு பணிவு கொண்டிருந்தார்! "நான்தான் ஆற்றல்மிக்க ஹனுமான். என்னால் எதையும் செய்ய முடியும்', என்று அவர் ஒருபோதும் சொன்னதே கிடையாது.

"வீரனே! நான் உனக்குப் பெரிதும் கடமைப் பட்டவன். செய்ற்கரிய செயல்கள் பலவற்றைச் செய்தவன் நீ. கைம்மாறாக நீ எதையுமே எதிர்பார்த்தது கிடையாது. ஸுக்ரீவனுக்குத் திரும்ப அவனது ராஜ்ஜியம் கிட்டியது. அங்கதன் ராஜகுமாரனாக முடிசூட்டப்பட்டான். விபீஷணன் லங்காபுரி மன்னனாக முடிசூட்டப்பட்டான். ஆனால் நீயோ எந்த வேளையிலும் எதையும் என்னிடம் கேட்டதேயில்லை. ஸீதை உனக்குக் கொடுத்த அரிய



பகவான் ஆஞ்சநேயர்

பரிசான முத்துமாலையை துச்சமாக வீசி எறிந்தாய். உனது கடனை நான் எப்படித் திரும்பச் செலுத்துவேன்? நான் எப்பொழுதும் உனக்குக் கடன்பட்டவனாக இருப்பேன். நீ சிரஞ்சீவியாக வாழ்வாய் என்று உன்னை நான் ஆசீர்வதிக்கிறேன். என்னைப் போன்றே உன்னையும் எல்லோரும் போற்றி வணங்குவர். எனது கோயிலின் வாசலில் உனது மூர்த்தி வைக்கப்பட்டு முதலில் வணங்கப்பட்டு வழிபடப்படும். எனது புகழ் பேசப்படும் இடத்திலெல்லாம், அதற்கு முன்னர் உனது புகழ் பாடப்படும். என்னால் செய்ய முடியாததைக் கூட உன்னால் செய்ய முடியும்'', என்று ஸ்ரீராமபிரானே ஹனுமானிடம் கூறினார்.

லங்கையில் சீதையை சந்தித்துவிட்டு திரும்பிய ஹனுமாரிடம் ஸ்ரீராமர் இவ்வாறு தெரிவித்தார். அதைக் கேட்ட ஹனுமான் சிறிதும் கர்வமடையவில்லை. ஸ்ரீராமரின் கமலப் பாதங்களில் அவர் பணிவுடன் வீழ்ந்தார்.

''வீராதி வீரனே! கடலை நீ எப்படித் தாண்டினாய்?'', என்று ஸ்ரீராமபிரான் அவரைக் கேட்டார்.

ஹனுமார் மிகவும் அடக்கமாக, ''எம்பெருமானே! எல்லாம் உமது நாம மகிமையால்,'' என்று பதில் சொன்னார்.

என்னே ஹனுமாரின் பணிவு!

தங்களது தொண்டிற்கு கைம்மாறாக நிறையச் செல்வத்தை விரும்பும் பலர் உண்டு. சிலர் பணத்தை விரும்பமாட்டார்கள். ஆனால் பெயரையும் புகழையும் அவர்களால் விட்டுவிட இயலாது. மற்றும் சிலருக்கு வேறு எதுவும் வேண்டாம். ஆனால் தங்கள் செயலைத் தாங்களே புகழ்ந்துப் பேசிக் கொண்டிருப்பர். ஹனுமார்

இத்தனைக்கும் அப்பாற்பட்டவர். அதனால்தான் சிறந்த கர்மயோகியாகவும், உன்னதமான பக்தராகவும் கருதப்படுகிறார். ஆனால் அவரது வாழ்வு புகட்டும் பாடங்கள் பல. ஒவ்வொருவரும் ஹனுமாரது உன்னத உதாரணத்தைப் பின்பற்ற முயல வேண்டும்.

சைத்ர சுக்ல பூர்ணிமையன்று (மார்ச் - ஏப்ரல் பௌர்ணமி) அவரது பிறந்த நாள் வருகிறது.

இந்தப் புனித தினத்தில் ஸ்ரீஹனுமானை வழிபடுங்கள். உபவாசமிருங்கள், ஹனுமான் சாலீஸா வைப் பாராயணம் செய்யுங்கள். ராமநாம ஜபத்தில் நாள் முழுவதையும் கழியுங்கள். இதனால் ஹனுமார் மிகவும் மகிழ்ந்து உங்களது காரியங்கள் அனைத்திலும் வெற்றியை நல்குவார்.

ஹனுமன் புகழ் ஓங்குக! அவரது தெய்வம் ஸ்ரீராமனின் புகழ் ஓங்குக!

# 19. கிருஷ்ண ஜன்மாஷ்டமி

எட்டாவது அவதாரமாகிய ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் ஜயந்தி தினம் இது. (ஆகஸ்ட்-செப்டம்பர்) பாத்ரபத மாதத்தின் தேய்பிறை எட்டாம் நாளில் இது வருகிறது. ஹிந்து விழாக்களில் முக்கியமானவற்றுள் இதுவும் ஒன்று. பகவான் ஸ்ரீகிருஷ்ணர் நடு இரவில் அவதரித்தார். இந்த தினத்தில் அனுசரிக்கப்படும் இருபத்து நான்கு மணி நேர உபவாசம் நடுஇரவில் பூர்த்தி செய்யப்படுகிறது.

இத்தருணத்தில் கோயில்கள் அலங்கரிக்கப் படுகின்றன. கீர்த்தனைகள் பாடப்படுகின்றன. மணிகள் ஒலிக்கப்படுகின்றன. சங்கு ஊதப்படுகிறது. ஸ்ரீகிருஷ்ணரைப் புகழ்ந்து ஸமஸ்கிருத ஸ்தோத்திரங்கள் பாராயணம் செய்யப்படுகின்றன. ஸ்ரீகிருஷ்ணர் அவதரித்த புண்ணிய பூமியான மதுராவில் இந்த வேளையில் விசேஷ ஆன்மீகக் கூட்டங்கள் நடத்தப்படுகின்றன. இந்தத் திருவிழாவில் பாரதத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து பக்தர்கள் பெருமளவில் பங்கேற்கின்றனர்.

கிறிஸ்து பிறப்பதற்கு 3227 வருடங்களுக்கு முன் (அதாவது 1945லிருந்து 5172 ஆண்டுகளுக்கு முன்பாக) பார்ஹஸ்பத்யமானத்தின் பிரகாரம் விஸ்வவசு வருடம் பாத்ரபத கிருஷ்ண பக்ஷத்தில் ச்ராவண மாதத்தின் இரண்டாம் பட்சத்தின் எட்டாம் நாளான புதன்கிழமையன்று ரோகிணி நட்சத்திரத்தில் விருஷப லக்னத்தில் சந்திரன் புகுந்தபொழுது பகவான் அவதரித்தார்.

உபநிஷதங்களுக்கு சமமான பாஞ்சராத்திரங்கள் மற்றும் பாகவதத்தைப் படியுங்கள். பகவான் ஸ்ரீகிருஷ்ணரது மகிமை, அவரது லீலைகள் மற்றும்

அமானுஷ்யச் செயல்கள் யாவற்றையும் பற்றி நீங்கள் அறிந்து கொள்வீர்கள். பாரதம் மற்றும் உலகம் அனைத்துக்குமே ஒப்பற்ற பொக்கிஷமாகிய எட்டாவது அவதாரமாகிய ஸ்ரீகிருஷ்ணரது தோற்றத்திற்கு மூன்று அடிப்படைக் காரணங்கள் உண்டு : கொடிய அரக்கர்களை அழிப்பது, குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் நிகழ்ந்த பெரும் போரில் முக்கிய பங்கு வகிப்பது (அங்கு தான் அற்புதமான பகவத்கீதையை உபதேசம் செய்தார்), இந்தியாவில் ஓர் அற்புதமான பக்தி இயக்கத்தின் மையமாக விளங்குவது.

பகவான் ஸ்ரீகிருஷ்ணரிடம் பக்தி செலுத்துவது அன்றி வேறு உண்மையான விஞ்ஞானம் எதுவும் கிடையாது. ராதாவையும் கிருஷ்ணரையும் நேசிப்பவனே உண்மையில் தனவந்தன் ஆவான். கிருஷ்ணரிடம் பக்தி இன்றேல் அதைவிடத் துன்பம் தருவது வேறு கிடையாது. ஸ்ரீகிருஷ்ணரை நேசிப்பவனே ஞானிகளில் சிறந்தவன். ஸ்ரீகிருஷ்ண பக்தர்களின் சகவாசமே உண்மையான மார்க்கமாகும். ஸ்ரீகிருஷ்ணரது பெயர், அவரது பண்புகள், அவரது லீலைகள் ஆகியவையே மீண்டும் மீண்டும் நினைக்கப்பட வேண்டும். தியானத்திற்குகந்தவை ராதாகிருஷ்ணரின் திருமலரடிகளேயாகும்.

ஸ்ரீகிருஷ்ணர் ஆனந்தசாகரம் ஆவார். அற்புதங்களில் தலைசிறந்தவையான அவரது லீலைகளே அந்த சாகரத்தின் அலைகளாகும். அவரது தேனினும் இனிய புல்லாங்குழல் இசை மூவுலகிலிருந்தும் அவரது பக்தர்களை ஈர்க்கிறது. அவரது ஒப்பற்ற அழகுச் செல்வம் சர, அசர உயிர்கள் அனைத்தையும் அதிசயத்திலாழ்த்துகிறது. தனது ஒப்பற்ற அன்பினால் அவர் தமது நண்பர்களை ஆட்கொள்கிறார்.

அவரது உள்ளங்கையில் தாமரையும், சக்கரமும் காணப்படுகின்றன. கொடி, தாமரை, இடி, தார்குச்சி,



பகவான் ஸ்ரீ கிருஷ்ணர்

பார்லி விதை, ஸ்வஸ்திகா போன்றவை அவரது வலது பாதத்தில் காணப்படுகின்றன. அவரது இடது பாதத்தில் வானவில், முக்கோணம், நீர்க்குடம், பிறை, வானம், மீன், பசுவின் பாதம் போன்றவை காணப்படுகின்றன. பிரபஞ்சத்தின் உணர்வும், ஆனந்தமும் அவரது திருஉருவத்தில் அடங்கும். அவரது ரூபம் அகிலப் பிரபஞ்சத்தையே தன்னுள் அடக்குகிறது.

பக்தி ஒன்றே ஸ்ரீகிருஷ்ணரை அடைவதற்கான ஒரே வழியாகும். பக்தி பகவான்பால் அன்பைத் தூண்டு கிறது. ஸ்ரீகிருஷ்ணர்பால் அன்பு செலுத்தப்படுகையில், உலக பந்தங்களிலிருந்து மனிதன் விடுபடுகிறான்.

ஸ்ரீகிருஷ்ணர் மனித உருவில் தோன்றினாலும், பஞ்ச பூதங்களினால் உரு ஆகாத ஒரு தெய்வீக உருவும் அவருக்கு இருந்தது. சாதாரண முறையில் அவர் இங்கே பிறவியை எடுக்கவில்லை. அவர் மரணமடையவில்லை. கீதையில் அவர் தெரிவிப்பது போல தமது யோக மாயையால் அவர் தோன்றி மறைந்தார். இது யோகிகளுக்கும், முனிவர்களுக்கும், அவரது பக்தர்களுக்கும் மட்டுமே தெரிந்த ஓர் இரகசியமாகும்.

கையில் புல்லாங்குழலுடன் கூடிய அவரது மனோகரமான உருவம் பாரதத்தின் இல்லங்களில் வணங்கப்படுகிறது. பாரதத்தில் மட்டுமல்லாது மேனாடு களிலும்கூட எண்ணற்ற பக்தர்கள் இந்த உருவத்தின்பால் தங்கள் மனதைப் பறிகொடுத்திருக் கின்றனர். லட்சக்கணக்கான ஆன்ம சாதகர்கள் அவரை வணங்கி *ஓம் நமோ பகவதே வாசுதேவாய* என்ற அவரது மந்திரத்தை ஜபிக்கின்றனர்.

பகவான் ஸ்ரீகிருஷ்ணர் அறிவிலும், செயலிலும், உணர்ச்சியிலும் ஒன்றுசேர சிறந்து விளங்கினார். ஸ்ரீகிருஷ்ணரது வாழ்வினைப் போல வேறெதையும்

மறைநூல்கள் இவ்வளவு ஆழமாக, பூரணமாக, புனிதமாக, பெருமைமிக்கதாக எடுத்துரைத்ததில்லை.

இந்தப் புவி வாழ்க்கையில் ஸ்ரீகிருஷ்ணர் பல விதங்களில் லீலைகள் புரிந்திருக்கிறார். அவர் அர்ஜுனனுடைய தேரோட்டியாகத் திகழ்ந்தார். அவர் ஒரு மிகச்சிறந்த ராஜதந்திரி. ஒரு சிறந்த இசை வல்லுநர். வீணையை வாசிப்பதில் நாரதருக்கே பாடம் சொன்னார் அவர். அவரது புல்லாங்குழலிசை கோபியருள்ளத்தை மட்டுமல்லாது அனைவரது உள்ளத்தையும் கொள்ளை கொண்டது. பிருந்தாவனத்திலும் கோகுலத்திலும் அவர் ஒரு மாடு மேய்க்கும் பாலகனாக விளங்கினார். குழந்தையாயிருக்கும்போதே அவர் பல அற்புதங்களை நிகழ்த்திக் காட்டினார். பல அசுரர்களை அவர் கொன்றார். தனது தாயாரான யசோதைக்கு அவர் தமது விசுவரூபத்தைக் காட்டினார். நாரதர், கௌராங்கர், ராதை மற்றும் கோபியர் போன்ற பக்தர்களால் மட்டுமே புரிந்துகொள்ளக் கூடிய ராசலீலையை அவர் செய்து காட்டினார். யோகம், பக்தி மற்றும் வேதாந்தத்தின் மேலான உண்மையை அவர் அர்ஜுனனுக்கும் உத்தவருக்கும் எடுத்துரைத்தார். அறுபத்து நான்கு கலைகள் ஒவ்வொன்றிலும் அவர் தேர்ச்சி பெற்று விளங்கினார். இத்தனை காரணங்களுக்காக அவர் பகவானின் ஒரு பூர்ண அவதாரமாக கருதப்படுகிறார்.

விசேஷ காரணங்களுக்காக பிரத்யேகமான சூழ்நிலைகளில் இறைவனது அவதாரங்கள் தோன்று கின்றன. எப்பொழுதெல்லாம் அதர்மம் மேலோங்கு கிறதோ, எப்பொழுதெல்லாம் அதர்மத்தின் காரணமாக குழப்பமும் ஒழுங்கின்மையும் ஓங்கி மனித குலத்தின் முன்னேற்றத்திற்கு ஊறுவிளைவிக்கிறதோ, சுயநலமிக்க அசுர சக்திகளால் மனித சமுதாயத்தின் சமநிலை பாதிக் கப்படுகிறதோ, நாத்திகமும் அதர்மமும் மேலோங்கும்

பொழுது, சமூக ஸ்தாபனங்களின் அடிப்படை ஆட்டம் காணும்பொழுது தர்மத்தை நிலைநாட்டி அமைதியை ஏற்படுத்த இறைவனின் பேரவதாரம் தோன்றுகிறது.

மனிதனின் உய்விற்காக இறைவன் தோன்றுவதே அவதாரமாகும். பரம்பொருளின் அடிப்படைப் பிரகிருதி யானது பிரபஞ்சத்தின் சீர்நிலையைக் காப்பதற்காக தனது பேராற்றலுடன் பூமியில் தோன்றுகிறது. இறைவனின் அவதாரம் மற்றும் அவரது போதனைகள் மனித குலத்தின் மீது ஒரு பெரும் பதிவை ஏற்படுத்தி தன்னை உணர்வதற்கான அவர்களது மேல் நோக்கிய பயணத்தில் பெரிதும் உதவுகிறது.

அவதாரம் மனிதனது தெய்வீகத் தன்மையை அவனுக்கு உணர்த்தி, காமம் மற்றும் ஆணவத்துடன் கூடிய கீழான லௌகிக நிலையிலிருந்து மேலே செல்ல அவனுக்கு உதவுகிறது.

மிகப் பெரிய தெய்வீகத் தோற்றங்கள் உயரிய அவதாரங்களாகக் கருதப்படுகின்றன. ரிஷிகள், முனிவர்கள், துறவிகள், இறைத் தூ ;ர்கள், இறை மைந்தர்கள் போன்றோர் சிற்றவதாரங்களாகக் கருதப்படுகின்றனர்.

அவதாரங்கள் பொதுவாக, தங்களது தோழர்கள் அல்லது துணைக் குழுக்களோடுதான் தோன்றுகின்றனர். பகவான் ஸ்ரீராமர் லக்ஷ்மணன், பரதன் மற்றும் சத்துருக் கனனுடன் தோன்றினார். பகவான் ஸ்ரீகிருஷ்ணர் பலராமன், தேவர்கள் மற்றும் ரிஷிகளுடன் தோன்றினார். சனந்தனர், சனத்குமாரர், சனத்சுஜாத ருடன் சனகர் வந்தார். ஸ்ரீசங்கரர், ராமானுஜர் போன்றோர் ஆச்சாரியர்களாகவும், ஆன்மீகத் தலைவர் களாகவும் அவதரித்தனர். சைதன்யரைப் போன்றோர் மக்கள் மனதில் பக்தியை வளர்த்து கடவுள்பால்

அவர்களது மனதைத் திருப்புவதற்காக அவதரித்தனர். உலகில் பெருமளவில் ஆபத்து நிகழும்போது ஸ்ரீகிருஷ்ணரைப் போன்ற பேரவதாரங்கள் வருகின்றனர்.

கிருஷ்ண ஜன்மாஷ்டமியின்போது தென்னிந்தியாவில் பெண்கள் பகவானை வரவேற்பதற்காக தங்கள் வீடுகளில் கோலமிட்டு அழகுபடுத்துகின்றனர். பல வகையான தின்பண்டங்களைத் தயாரித்து அவற்றைப் பகவானுக்குப் படைக்கின்றனர். கிருஷ்ணருக்குப் பிடித்த வெண்ணெயும் அவருக்கு அளிக்கப்படுகிறது. மாவைத் தண்ணீருடன் சேர்த்து வீட்டு வாசலிலிருந்து பூஜை அறை வரை சின்னஞ்சிறு கண்ணனின் காலடிகள் மாக்கோலமாகப் போடப்படுகிறது. பகவானே குழந்தையாக வந்துள்ளார் என்ற எண்ணத்தை இது ஏற்படுத்துகிறது. அந்த நாளை அவர்கள் ஒரு நன்னாளாகக் கொண்டாடுகின்றனர். பாகவதம் வாசித்தலும், பஜனை, கீர்த்தனை செய்தலும் எங்கும் நிகழ்கின்றன.

சிவானந்தாசிரமத்தில் ஜன்மாஷ்டமியானது கீழ்க் காணும் தீவிர ஆன்மீக செயல்முறையுடன் பின்பற்றப் படுகிறது.

1. முந்தைய எட்டு நாட்களிலும் *'ஓம் நமோ பகவதே வாஸுதேவாய'* என்ற மந்திரம் பக்தியுடன் ஜபிக்கப் படுகிறது.

2. முடிந்தவர்கள் இந்த பருவத்தில் பாகவத பாராயணம் செய்கிறார்கள். மற்றவர்கள் அதைப் பக்தியுடன் கேட்பார்கள்.

3. ஜன்ம தினத்தன்று ஒவ்வொருவரும் உபவாசமிருந்து நாள் முழுவதையும் இறைச் சிந்தனையில் கழிக்கின்றனர்.

4. அனைவரும் ஒருவரை ஒருவர் 'ஓம் நமோ பகவதே வாஸுதேவாய' என்று சொல்லியே வாழ்த்துகின்றனர்.

5. அந்த நாளில் ஒரு பெரிய ஹோமம் செய்யப்படுகிறது.

6. அதிகாலை நான்கு மணி முதல் இரவு வரை தொடர்ந்து சத்சங்கம் நடக்கிறது. பகவானின் பெருமையையும் சரிதத்தையும் பற்றி யோகியர், சன்யாசியர் மற்றும் அறிஞர் பெருமக்கள் உபன்யாசம் செய்கின்றனர்.

7. சூரியன் அஸ்தமித்ததும் நன்கு அலங்கரிக்கப்பட்ட கோவிலில் பக்தர்கள் கூடி பகவானது அருமை, பெருமைகளைப் பற்றிப் பாடுகின்றனர்.

8. பாகவதத்தின் முக்கிய பகுதிகள், குறிப்பாக கோபிகாகீதம் மற்றும் பல ஸ்தோத்திரங்கள் பாடப்படுகின்றன.

9. நடு இரவின் போது பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் விசேஷ வழிபாடு நிகழ்கிறது. அஷ்டோத்திர பூஜையுடன் பகவானின் விக்கிரகத்திற்குப் பாலாபிஷேகம் நிகழ்கிறது.

10. மலர் தூவி, ஆரத்தி எடுத்து, பாகவதத்தில் ஸ்ரீகிருஷ்ண ஜனனப் பகுதி பாராயணத்துடன் இந்த வழிபாடு பூர்த்தி அடைகிறது. இது பகவான் அவதரித்த வேளையான நடு இரவுடன் ஒன்றிக்கிறது. அப்பொழுது பகவானின் விக்கிரகம் தொட்டிலில் கிடத்தப்பட்டு ஆட்டப்படுகிறது. இது முடிந்ததும் எல்லா பக்தர்களும் பிரசாதத்தைப் பெற்றுக்கொண்டு பகவான் ஸ்ரீகிருஷ்ணரது அருளைப் பெற்றவர்களாக வீடு திரும்புகின்றனர்.

இந்த நாட்களில் உங்களால் பாகவதம் முழுவதையும் படிக்க முடியாவிட்டாலும், குறைந்தபட்சம் அதில் காணப்படும் கீழ்க்காணும் நான்கு மிக முக்கிய சுலோகங்களையாவது படிக்க வேண்டும். முதல் இரண்டு மற்றும் கடைசி சுலோகங்கள் முன்னுரையாகவும் பின்னுரையாகவும் அமைகின்றன.

என்னிடமிருந்து மிகவும் ரகசியமான ஞானம் மற்றும் அடிப்படை அனுபவம், அதன் அம்சங்களைப் பற்றி கேட்பாயாக:

என்னைப் பற்றிய அறிவு, மற்றும் எனது ரூபம், தன்மைகள் மற்றும் செயல்பாடுகளைப் பற்றி எனது அருளாலேயே நீ தெரிந்து கொள்வாயாக.

1. சிருஷ்டிக்கு முன் நான் மட்டுமே இருந்தேன். இருப்பு, இன்மை இரண்டுமே அப்பொழுது இல்லை. பிரளயத்திற்குப் பின் எஞ்சுவதும் நானே.

2. எதனிடம் எவ்வித நோக்கமும் இல்லையோ, ஆத்மனில் எது காணப்படுவதில்லையோ, ஒளி, இருளைப் போன்று எது உண்மையாக இருப்பதில்லையோ அதை மாயை அல்லது தோற்றம் என்று தெரிந்து கொள்வாயாக.

3. அடிப்படைத் தத்துவங்கள் எவ்வாறு ஒன்றோடொன்று சேர்ந்தும், பிரிந்தும் காணப் படுகின்றனவோ, அதைப் போல நானும் இப்பிரபஞ்சம் முழுவதிலும் வியாபித்திருக்கிறேன். அதேவேளையில் அதிலிருந்து பிரிந்தும் இருக்கிறேன்.

4. எப்பொழுதும் எங்கும் திகழும் அந்தப் பரம்பொருளை நேரிடை எதிரிடை முறைகளின் மூலம் சாதகன் அறிய வேண்டும்.

மிகவும் மேலான பேருணர்வு நிலையின் மூலம் இந்த உண்மையை நீங்கள் உணர்ந்து மாயப் பொருள்களினால் தாக்கப்படாத நிலையை அடையுங்கள்.

பாகவதத்தில் நீங்கள் தினமும் பாராயணம் செய்யத்தக்க மற்றோர் அரிய சுலோகமும் உள்ளது. "முன்பு தேவகிக்குப் பிறந்து, யசோதையின் வீட்டில் வளர்க்கப்பட்டு, கொடிய தோற்றம் கொண்ட தீயவளான பூதனாவை பகவான் அழித்தார். கோவர்தன மலையைக் குடையாகப் பிடித்தார். கொடிய கம்சனையும், கௌரவர் களையும் கொன்று குந்தியின் புதல்வர்களை பகவான் காத்தார். பகவான் ஸ்ரீகிருஷ்ணரது திவ்விய சரிதத்துடன் கூடிய ஸ்ரீமத் பாகவதம் இவ்வாறு சுருக்கமாகச் சொல்லப்படுகிறது".

ஸ்ரீராதை மற்றும் பகவான் ஸ்ரீகிருஷ்ணரது அருள் உங்கள் அனைவர் மீதும் மலர்வதாகுக!

# 20. சங்கர ஜயந்தி

*குரு சரணம், பஜ சரணம்,*
*ஸத்குரு சரணம், பவ ஹரணம்*
*மானஸ பஜரே, குரு சரணம்,*
*துஸ்தர பவ ஸாகர தரணம்*
*குரு மஹாராஜ் குரு ஜய ஜய*
*பர ப்ரம்ம ஸத்குரு ஜய ஜய.*

சமயம் என்பது உணர்வதாகும்; அது வெறும் படிப்பு அல்ல. ஒவ்வொரு ஹிந்துவின் மனத்திலும் ஆழமாகப் பதிந்துள்ள தெய்வீகச் செய்தி இதுவேயாகும். இது ஒரு வெறும் மாயம் அல்ல. இது ஒரு வெறும் மனோ கற்பிதம் அல்ல. இது ஒரு வெறும் கற்பனை அல்ல. இது மூளையின் சிருஷ்டி அல்ல. அல்லது வெறும் வாதத்தினாலோ அல்லது சாதாரண ஒரு மானிட மேதாவியின் புரிதற்கரிய தர்க்கத்தினாலோ அடையப்பட்டதொரு முடிவு அல்ல.

சிவபெருமானின் அவதாரம், பாரதத்தின் மிகப் பெரும் தத்துவ ஞானியாம் ஸ்ரீமத் ஆதி சங்கராச்சாரியாரின் ஆணித்தரமான கூற்று இது.

"அனைத்தின் ஆத்மன் நானே. அனைத்தும் நானே. நான் அனைத்திற்கும் அப்பாற்பட்டவன்; இரண்டற்ற ஒன்று நான்; நானே பூரணன். நானே எல்லையற்ற பேருணர்வு. நானே அகண்ட ஆனந்தம்", என்று சிறிதும் அச்சமின்றி உறுதியாகக் கூறுபவரை பகவானன்றி வேறு எவ்விதமாக நாம் உணர முடியும்?

சங்கரர் நமது வேதாந்த குரு. அவர் கடவுளின் அவதாரம். பாரதத் தத்துவமும் பண்பாடும் திசைமாறி சிதிலமடைந்து கொண்டிருந்ததொரு வேளையில் அவர் அவதரித்தார். ஒழுக்கமும், புத்த மத தாக்கமும்.

படிப்படியாக மறைந்து கொண்டிருந்த வேளையில், பூரண குழப்பம் நிலவியபொழுது, எண்ணற்ற பிரிவுகள் தோன்றி தத்தம் கொள்கைகளுடன் மக்களின் மனதை குழப்பிக் கொண்டிருந்த வேளையில், தீய சமூகப் பழக்க வழக்கங்களும் மூட நம்பிக்கைகளும் மக்களை ஈர்த்து, பரம்பொருளை உணரவொட்டாது அவர்களைப் பூரண மாகத் தடுத்ததொரு வேளையில் அவர் இப்புவியில் தோன்றினார். வேறுபட்ட எழுபத்திரண்டு பிரிவுகள் அப்பொழுது இருந்தன. அவை மக்களை நன்னெறியிலிருந்து திசை திருப்பின.

பகவான் ஸ்ரீகிருஷ்ணரது தோற்றம் ஹிந்து மதத்திற்குப் புத்துயிரூட்டி, பூரண அழிவிலிருந்து பலரைக் காத்தருளியது. இல்லையெனில் வேதங்கள் மற்றும் உபநிடதங்களின் தவறான விளக்கத்திற்கு உட்பட்டு செயலின்மைக்கு அவர்கள் பலியாகியிருப்பர். அதைப் போலவே ஸ்ரீசங்கரரும் தத்தளித்த பல ஜீவர்களைக் காப்பாற்றுவதற்காக பூமியில் அவதரித்தார். அவர், அவர்களை விடுவித்து, அன்பான அரவணைப்பினால் அறிவுரை கூறி அவர்கள் வாழ்வில் ஒளியூட்டினார். மறுக்கமுடியாத தர்க்கத்தினால், மற்ற அனைத்துத் தத்துவங்களையும் வென்று, அறிவு வெற்றிக் கொடியை நாட்டினார். அவர் முன்னிலையில் மற்ற எல்லாக் கொள்கைகளும் மாயத் தோற்றங்களாகவும், தவறானவையாகவும் தென்பட்டன.

ஹிந்து மதத்திற்கு அசைக்க முடியாததொரு அடித்தளத்தை அமைத்தவர் ஸ்ரீசங்கரர் ஆவார். ஹிந்து சிந்தனையையும் பண்பாட்டையும் சீர்திருத்தி அதைத் தூய்மைப்படுத்தி ஒற்றுமைப்படுத்தியதும் அவரே. தீய வழக்கங்களும் மூடக் கொள்கைகளும் சடுதியில் மறைந்து போயின.

சங்கரரின் திட்டமிட்ட முயற்சிகளால்தான் மாற்றாரால் ஒடுக்கப்பட்டிருந்த பழைமையான ஷண்மதங்கள் மீண்டும் புனருத்தாரணம் செய்யப்பட்டன.

வேற்றுத் தத்துவங்களை அவர் வென்றதானது மற்றவரது கொள்கைகளைக் கொஞ்சமும் மதியாது தமது கொள்கையில் முரட்டுத்தனமாக அவர் இருந்தார் என்பதனால் அல்ல. மாற்றார் தத்துவங்களின் மிக நுட்பமான பகுதிகளையும் அவர் தெரிந்து வைத்திருந்தார். அவரது சிந்தனைகளின் நீரோட்டம் தான் ஏனைய தத்துவங்களின் அடித்தளமாக அமைந்தன. இதனால்தான் வெளிப்படையாக வேறுபட்டாலும், மற்ற எல்லா தத்துவவாதிகளாலும் அவரது தத்துவம் பெரிதும் மதித்துப் போற்றப்பட்டது.

அவரது வெற்றியின் ரகசியம் மற்றும் அதிலுள்ள நயம் ஆகியவை ஒவ்வொரு விஷயத்திலும் அவர் தரும் பொருத்தமான உவமானங்களாலேயாகும். ஒருபொழுதும் அவர் தமது வாதங்களை வெறும் கொள்கையளவு தத்துவங்களிலோ, அல்லது நிரூபிக்கப்படாத கொள்கை களிலோ நிலைநிறுத்தாமல், முழுக்கமுழுக்க ஒட்டு மொத்த அனுபவத்திலேயே உறுதிப்படுத்தினார். மேலும் அவரது வாதங்கள் அனைத்தும், உண்மையானவையும், ஆதாரபூர்வமானவையுமான வேதங்களின் அடிப்படை யில் அமைந்திருந்தன.

தமது கொள்கையை உறுதிப்படுத்தவும், பிறரது கொள்கைகளை பொய்ப்பிப்பதற்கும் அவர் ஒருபொழுதும் சூடான வாதங்களில் ஈடுபட்டது கிடையாது. கீதை, உபநிஷதங்கள், பிரம்ம சூத்திரங்கள் போன்ற சுருதிப் பிரமாணங்கள் ஆணித்தரமாகக் கூறுவது போல, அவர் தமது வியக்கத்தக்க அறிவுக் கூர்மையினால் தத்துவங்களை மிகவும் எளிய, தெளிவான முறையில் எடுத்துரைத்தார்.

எல்லாவற்றிற்கும் மேலாக, சங்கர சித்தாந்தம் பெரும் அறிவுக் கூர்மையுள்ளவர்களுக்கு மட்டுமே பொருந்தும் ஒரு தத்துவம் அல்ல. சாதாரண மனிதனுக்கும் அது புரியும் ஒன்றாகும். அவர் தமது பேரறிவாலும், பூரண ஞானத்தாலும், ஆழ்ந்த உள்ளுணர்வாலும், பொருத்தமான விளக்கங்களாலும், கற்றவருக்கும் கல்லாதவருக்கும் ஒரே பாங்கில் புரியுமளவு அவர் வேதாந்தத்தின் அடித்தளத்தை உறுதி செய்தார். பல சாஸ்திரங்களை நெட்டுருப் போட்டு மண்டையை உடைத்துக் கொள்ளும் ஓர் அறிஞருக்கு அவர் எவ்வளவு எளிதாக 'பஜ கோவிந்த'த்தை படிக்கச் சொல்கிறார்.

அவர் உலகிற்கு வேதாந்தத்தை மட்டுமே போதித்தார் என்று சொல்லிவிட முடியாது. உண்மையை நாடும் ஒவ்வொரு சாதகனின் இதயத்திலும் அவர் ஊடுருவியிருக்கிறார். இறைவனைப் பல வடிவங்களில் வழிபடும் முறைகளை அவர் போற்றிப் பாராட்டி பக்தியைப் பெரிதும் ஆதரிக்கிறார். எந்த ஒரு குறிப்பிட்ட வடிவத்தின்பாலும் விருப்போ வெறுப்போ இன்றி அவர் பல்வேறு தோத்திரங்களை இயற்றியிருக்கிறார். ஒவ்வொன்றும் பக்தியினாலும் தத்துவ உண்மையினாலும் மிளிர்கிறது. ஒவ்வொன்றும் பக்குவப்படாத இளம் மனதிற்குக் கூட தெய்வீக இன்பத்தையும், நிலையான மகிழ்ச்சியையும் அளிக்கிறது. மனித குலத்தின் நன்மைக்காக அவர் ஆற்றியிருக்கும் சோம்பலற்ற தொண்டு அவரை ஒரு சீரிய கர்மயோகியாக்குகிறது.

இஃதனைத்திற்கும் பின் ஒளிரும் அவரது குருபக்தி அனைத்திலும் சிறந்தது ஆகும். "ஸத்குருவின் கருணையினாலும் கடாக்ஷத்தினாலும் 'நானே அந்த பிரம்மன்' (அஹம் பிரம்மாஸ்மி) என்று எவர் உணருகிறாரோ, அவர் அனைத்து ஐயங்களும் அகன்று

இந்த உடலில் வாழும் போதே ஜீவன் முக்தியை அடைகிறார்'', என்ற அவரது வார்த்தைகளைக் கவனியுங்கள். குருவிடம் பக்தி செலுத்துவதால் கிடைக்கும் பெருமையும் புகழும்தான் என்னே!

மே-ஜூன் பகுதியில் வைகாசி வளர்பிறையின் போது ஐந்தாவது நாளில் சங்கர ஜயந்தி வருகிறது. அவரது ஆசிகள் உங்கள் மீது மலர்வதாகுக!

# 21. ஸ்கந்த சஷ்டி

பரம்பொருள், பிரபஞ்ச இயக்குநர், நம் இதயங்களில் இருப்பவர், சிவபெருமானின் இரண்டாவது மகன், வள்ளி தேவானை மணாளன், தம் பக்தர்கள்பால் எளிதில் அருளைப் பொழிபவர், ஆற்றல், ஞானம், அன்பு மற்றும் ஆனந்தத்தின் இருப்பிடமாக உள்ள சுப்ரமண்யப் பெருமானுக்கு பணிவான நமஸ்காரம்.

ஆற்றல்மிக்க தாரகாசுரன் தேவர்களைப் பெரிதும் கொடுமைப்படுத்தினான். அவன் அவர்களை சொர்க்கத்திலிருந்து விரட்டிவிட்டான். உதவி வேண்டி எல்லா தேவர்களும் பிரம்மாவிடம் சென்றனர்.

''தேவர்களே! கடும் தவங்களால் என்னிடமிருந்து அருளைப் பெற்றுள்ள தாரகனை என்னால் அழிக்க முடியாது. ஆனால் ஒரு குறிப்பை உங்களுக்குச் சொல்லுகிறேன். மன்மதனின் உதவியை நாடுங்கள். யோக சமாதியில் ஆழ்ந்துள்ள சிவபெருமானைத் தூண்டுமாறு அவனிடம் கூறுங்கள். சிவபெருமான் பார்வதியுடன் சேரட்டும். அவர்களுக்கு ஆற்றல்மிக்க சுப்ரமண்யன் என்ற மகன் பிறப்பான். உங்களைத் துன்புறுத்தும் அரக்கனை அவன் அழிப்பான்,'' என்று தேவர்களிடம் பிரம்மா சொன்னார்.

தேவர்களின் தலைவனான இந்திரன், மன்மதனை அவனது மனைவியான ரதி மற்றும் துணை வசந்தத்துடன் (வசந்த காலம்) சிவபெருமான் உறையும் கயிலையங்கிரிக்குச் செல்லுமாறு கேட்டுக் கொண்டான். அப்பொழுது வசந்த காலமானதால் மன்மதன் உடனே அவன் சொன்னபடி செய்தான். சிவபெருமான் கையில் பார்வதி சில புஷ்பங்களை வைத்துக் கொண்டிருந்த சமயத்தில் மறைந்திருந்து மன்மதன் அவர் மீது காமக் கணையை எய்தான். அவர்களது கைகள் ஸ்பர்சித்த

பொழுது சிவபெருமான் ஒருவிதமான புளகாங்கிதத்தை உணர்ந்தார். தமது யோகத்தைக் குலைத்தது எது என்பதை அறிய சிவபெருமான் விழைந்தார். சுற்று முற்றும் பார்த்த அவர் மரத்தின் பின்னால் மன்மதன் ஒளிந்திருந்ததைக் கண்டார்.

தமது ஞானக் கண்ணாகிய மூன்றாவது கண்ணை சிவபெருமான் திறந்தார். அதிலிருந்து கிளம்பிய தீப்பொறியால் மன்மதன் எரிந்து சாம்பலானான். இதனால்தான் மன்மதன் 'அனங்கன்' அதாவது 'சரீரமற்றவன்' என அழைக்கப்படுகிறான்.

மன்மதனை எரித்த பின் தமது யோக திருஷ்டியால் சிவபெருமான் சக்தி வாய்ந்த தாரகனை அழிப்பதற்கு சுப்ரமண்ய ஜனனம் மிகவும் அவசியம் என்பதனை உணர்ந்தார். இவருடைய விந்து தீயினில் எறியப்பட்டது. அதைப் பொறுக்கமுடியாத தீ அதைக் கங்கையில் எறிய, அது மீண்டும் நாணல் காட்டில் எறியப்பட்டது. இங்குதான் சுப்ரமண்யப் பெருமான் தோன்றினார். எனவேதான் அவர் சரவணபவன் (நாணல்காட்டில் உதித்தவர்) என அழைக்கப்படுகிறார். அவர் தேவ கணங்களுக்குத் தலைவனாகவும், பிரம்மாவின் ஆணையின்படி தாரக சம்ஹாரனாகவும் ஆனார்.

சிவபெருமானின் அவதாரமே சுப்ரமண்யர் ஆவார். ஒரே பரப்பிரம்மனின் பல்வேறு தோற்றங்களே எல்லா அவதாரங்களுமாகும். ஸ்கந்தனும், கண்ணனும் ஒருவரே.

"சேனைத் தலைவர்களுள் நான் ஸ்கந்தன்" என்கிறார் கீதையில் கண்ண பெருமான்.

அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்ட பல பெயர்களுடன் பல வடிவங்களில் பகவான் அவ்வப்பொழுது அவதாரம் செய்கிறார்.

சிவபெருமானுடைய உணர்விலிருந்து உதித்த ஒரு கதிரே சுப்ரமண்யப் பெருமான். வள்ளியும் தெய்வானையும் அவரது இரு துணைவியர். அவர்கள் இருவரும் முறையே கிரியா சக்தியையும் ஞான சக்தியையும் குறிக்கின்றனர். அறியாமையும் நாத்திகமும் தாண்டவமாடும் இக்கலியுகத்தில் எளிதில் நெருங்கவல்ல தெய்வம் அவர். இதில் அவர் ஹனுமாரிடமிருந்து எவ்விதத்திலும் வேறுபட்டவர் அல்லர். அவர்பால் சிறிதளவு பக்தியைக் காண்பித்தால் கூட அவரது பக்தர்கள்பால் அவர்கள் மேற்கொள்ளும் ஒவ்வொரு காரியத்திலும் வெற்றியையும், பொருள் மற்றும் ஆன்மீக சுபிட்சத்தையும் அவர் அருளுகிறார். தென்னிந்தியாவில் அவர் பெரிதும் வணங்கப்படுகிறார். குஹன், முருகன், குமரேசன், கார்த்திகேயன், ஷண்முகன், சுப்பிரமணியன், வேலாயுதன் என்பதெல்லாம் அவருக்குரிய வேறு பெயர்களாகும்.

சிவபெருமான் தன்கரத்தில் திரிசூலத்தைத் தாங்கி யிருப்பது போல படத்தில் சுப்ரமண்யர் வேலுடன் காட்சி தருகிறார். இது ஆற்றலின் சின்னம். பிரபஞ்சத்தில் ஆளுநர் அவர் என்பதை இது காட்டுகிறது. மயில் அவரது வாகனம். அவர் அதில் சவாரி செய்கிறார். ஆணவம், அஹங்காரம், டம்பம் ஆகியவற்றை அவர் வென்றுவிட்டார் என்பதை இது காட்டுகிறது. அவரது பாதத்தினடியில் ஒரு நல்ல பாம்பு உள்ளது. இது அவர் முற்றிலும் அச்சமற்று அழியாத ஞானவானாகத் திகழ்கிறார் என்பதைக் காட்டுகிறது. அவருக்கு ஒருபுறம் வள்ளியும், மறுபுறம் தெய்வயானையும் காட்சி தருகின்றனர். சில சமயங்களில் அவர் தமது வேலுடன் தனித்துக் காட்சி தருகிறார். இந்தத் தோற்றத்தில் அவர் வேலாயுதன் எனப்படுகிறார். இயற்கையின்

மாயாசக்தியிடமிருந்து அவர் தனித்திருக்கும் நிர்குணத் தோற்றம் இது.

ஆறுமுகங்கள் ஞானம், வைராக்யம், பலம், புகழ், செல்வம் மற்றும் தெய்வீக சக்திகள் எனும் ஆறு குணங்களைக் குறிக்கின்றன. அவரே நான்கு வேதங்கள், வேதாங்கங்கள் மற்றும் ஷண்மதத் தத்துவத்தை அவை குறிக்கின்றன. ஐம்புலன்கள் மற்றும் மனத்திற்கு அவர் தலைவன் என்பதையும் அவை எடுத்துக் காட்டுகின்றன. ஆயிரமாயிரம் தலைகள் மற்றும் கரங்களுடன் கூடிய பரம்பொருள் அவர் என்பதை அவை உணர்த்துகின்றன. எல்லாத் திசைகளிலும் அவரது தலை திரும்பியிருப்பதானது அவர் ஸர்வ வியாபி என்பதை உணர்த்துகிறது. தனது விருப்பப்படி அவர் பல்வகையில் உருவம் தரிக்கலாம் என்பதை இது காட்டுகிறது.

திருச்செந்தூர், உடுப்பி, பழனிமலை, இலங்கை, திருப்பரங்குன்றம் போன்ற இடங்களில் முருகனுக்குப் பெரிய கோவில்கள் அமைந்துள்ளன. சுப்பிரமணியப் பெருமான் தமது இளமையை திருச்செந்தூரில் கழித்து கதிர்காமத்தில் மகாசமாதி எய்தினார். யாரொருவர் பயபக்திடன் கதிர்காமம் ஆலயத்தில் இரண்டு அல்லது மூன்று தினங்கள் விரதம் அனுஷ்டிக்கிறாரோ அந்த பக்தருக்கு பெருமான் காட்சி அளிக்கிறார். அரிய ஆன்மீக அனுபவங்களை பக்தன் பெறுகிறான். ஆயிரக்கணக்கானோர் இந்த இடத்தை தரிசிக்கின்றனர். இத்தருணத்தில் கற்பூரம் மலையளவில் ஆரத்தியாக எரிக்கப்படுகிறது.

நவம்பரில் ஸ்கந்த சஷ்டி வருகிறது. தாரகனை சுப்ரமண்யப் பெருமான் தோற்கடித்த தினம் அது. இந்த நாளில் வெகுவிமரிசையாக பெரும் விழாக்கள் கொண்டாடப்படுகின்றன. பெருமளவில் பக்தர்கள் பஜனை, கீர்த்தனையை சிறப்பான முறையில்

செய்கின்றனர். ஆயிரக்கணக்கானோருக்கு அன்ன தானம் செய்யப்படுகிறது. பழனிக்குச் சென்று முருகப் பெருமானை தரிசித்தால் தீராத வியாதிகளெல்லாம் தீருகின்றன. தென்னிந்தியாவில் முருகனின் லீலைகள் நாடகமாக நடித்துக் காட்டப்படுகின்றன.

ஸ்கந்த சஷ்டி தவிர முருக பக்தர்கள் அவரை நினைந்து மாத, வார விரதங்களை அனுஷ்டிக்கின்றனர். பிரதி வெள்ளிக்கிழமை, மாதாந்திர கார்த்திகை நட்சத்திரம், வளர் பிறையின் ஆறாம் நாள் இவையெல்லாம் பக்தர்களால் புனிதமானவையாகக் கருதப்படுகின்றன. (அக்டோபர் - நவம்பர்) ஐப்பசி மாதத்தில் வரும் ஆறாம் நாள் இவற்றில் மிகவும் சிரேஷ்டமானது. இது தான் ஸ்கந்த சஷ்டித் திருநாள். பல இடங்களில் சஷ்டிக்கு ஆறு நாட்களுக்கு முன்னதாக இவ்விழா தொடங்கி சஷ்டியோடு பூர்த்தியாகிறது. இந்த நாட்களில் பக்தர்கள் முருகனது தோத்திரங்களையும் பாடல்களையும் பாராயணம் செய்கின்றனர். அவர்கள் பெருமானை வணங்கி காவடி எடுக்கின்றனர். பல்வேறு முருக தலங்களுக்கு அவர்கள் யாத்திரை செல்கின்றனர்.

புகழ்பெற்ற நக்கீரர், முருகனைப் புகழ்ந்து திருமுருகாற்றுப்படை என்னும் நூலை இயற்றியிருக்கிறார். இந்த நூலை யார் தினமும் சிரத்தா பக்தியுடன் படிக்கிறார்களோ அவர்கள் வாழ்வில் வெற்றியையும், அமைதி மற்றும் சுபிட்சத்தையும் அடைகின்றனர். சுப்பிரமணிய சுவாமியைப் புகழ்ந்து அருணகிரிநாதர் இயற்றிய அரிய நூல்தான் திருப்புகழ். காவடிச்சிந்து பாடல்களும் முருகனைப் புகழ்ந்துரைக் கின்றன. சுப்பிரமணியப் பெருமானைப் போற்றும் மற்றொரு புகழ்பெற்ற நூலான ஸ்கந்த சஷ்டி கவசம் விசேஷ நாட்களில் பாராயணம் செய்யப்படுகிறது.

**காவடி விழா :**

சண்முக பக்தர் ஒருவர் விசேஷமாகச் செய்யும் ஒரு வழிபாட்டுச் சடங்கு காவடி எடுப்பதாகும். இறைவனுக்குக் காவடி எடுப்பதால் பக்தன் பெறும் நன்மைகள், அவன் காவடி எடுப்பதன் மூலம் தன் உடலை வருத்திக் கொள்ளும் துன்பத்தைவிட இலட்சக்கணக்கான மடங்கு அதிகமாகும்.

பொதுவாக பெரும் துன்பத்திலிருந்து விடுபட வேண்டியே ஜனங்கள் காவடி எடுப்பதாக வேண்டிக் கொள்கின்றனர். வெளிப்படையாக இது ஏதோ வர்த்தக பேரம் போலத் தென்பட்டாலும், ஒரு சிறிது சிந்தித்தால் பகவானிடம் பரமபக்தி அம்சம் இதில் இருப்பது புலனாகும். உலக லாபம் கிட்டுகிறது என்பது உண்மை தான். பக்தன் காவடி எடுக்கிறான். ஆனால் சடங்கிற்குப் பிறகு அவன் கடவுள் பரவசமாகி விடுகிறான். அவனது அகமுக ஆன்மீக பகுதி விழித்துக் கொள்கிறது. பக்தியின் உச்சநிலைக்கு இட்டுச் செல்வதற்கு இதுவும் ஒரு முறையாகும்.

**காவடி:** காவடி உருவத்திலும், அளவிலும் பலவாறாக மாறுபடுகிறது. தோளில் ஒரு கம்பைக் கிடத்தி அதன் இருமுனைகளில் இரு கூடைகளைத் தொங்க விடுதல் மிக எளிய காவடியாகும். பூக்களாலும் மயில் பீலிகளாலும் அழகாக அலங்கரிக்கப்பட்ட விலையுயர்ந்த பல்லக்கு இன்னொரு வகை. எல்லா வகைகளிலும் காவடியில் நிறைய பித்தளை மணிகள் தொங்குகின்றன. காவடி எடுப்பவன் வருவதை அந்த மணிகள் அறிவிக்கின்றன. காவடி எடுப்பவன் பேசுவதில்லை. காவடி ஊர்வலத்தில் மணிகள் தான் ஊர்வலம் வருவதை அறிவிக்கின்றன.



முருகன்

காவடியின் இருபுறமும் தொங்கும் கூடைகளில் பக்தன் சுப்பிரமணியப் பெருமானுக்கு சமர்ப்பிப்பதற் காக வேண்டிக் கொண்டிருக்கும் அரிசி, பால் போன்ற பொருள்கள் இருக்கும். பக்தர்களில் அதிக பக்தி கொண்டு சாதனையாகச் செய்பவர்கள், இந்தப் பொருள்களை பிச்சையெடுத்துப் பெறுகிறார்கள். கிராமம் கிராமமாக அவர்கள் நடந்து சென்று வீடு வீடாகப் பிச்சை ஏற்கின்றனர். கிராம மக்கள் நேரடியாக அந்தப் பொருள்களை கூடையில் போடுகின்றனர். கூடைகள் நிரம்பும் வரை அல்லது பகவானுக்கு எவ்வளவு சமர்ப்பிப்பதாக அவன் வேண்டிக் கொண்டிருக்கிறானோ அந்த அளவு கிட்டும் வரை பிக்ஷையேற்றுவிட்டு அதன்பின் காவடியை பகவானுக்கு சமர்ப்பிக்கிறான். சில பக்தர்கள் தங்கள் வீடுகளிலிருந்து ஏதாவது ஒரு முருக ஸ்தலத்திற்கு பாதயாத்திரை மேற்கொள்கின்றனர். வழியெல்லாம் அவர்கள் காவடியைச் சுமந்து சென்று பொருள்களைப் பிச்சையாக ஏற்கின்றனர். சில சமயங்களில் அவன் நூறு மைல்கள் கூட நடக்க வேண்டி நேரிடுகிறது. கூடைகளில் பொருள் களைப் போடும் ஜனங்களும் அருளைப் பெறுகின்றனர்.

**காவடி எடுப்பவர் :** காவடி எடுக்கும் பக்தர் காவடி எடுத்த நாள் முதல், அதை இறைவனுக்கு சமர்ப்பிக்கும் வரை உள்ள நாட்களில் பல்வேறு விதிகளைக் கடைப்பிடிக்கிறார். காவடியை எடுக்கும் சமயத்திலும், அவர் விரிவான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியிருக்கிறது. சிவபக்தன் வேடம் தரித்து பண்டாரம் போல உடை உடுக்கிறார். காவி உடை, முக்கோண குல்லாய், வெள்ளிப்பூண் இருமுனையிலும் கொண்ட ஒரு கம்பு இவையே அந்த சிறப்பு உடையாகும். சிவபெருமானே இந்த உடையை அணிய விரும்புகிறார். அவரே மேலான பண்டாரம். பண்டாரம் பிச்சை

எடுத்துத்தான் உண்கிறார். காவடி எடுப்பவரின் திறந்த மார்பை ருத்திராக்ஷமாலைகள் அலங்கரிக்கின்றன.

காவடி எடுப்பவர் பிரம்மச்சர்யத்தைக் கடைப் பிடிக்கிறார். தூய சாத்வீக உணவை மட்டுமே அவர் உண்கிறார். போதை தரும் பானங்கள் மற்றும் பொருட்களை அவர் முற்றிலும் தவிர்க்கிறார். யாண்டும் இறைச் சிந்தனையிலேயே அவர் இருக்கிறார். ஆன்ம சாதனையாக காவடி எடுக்கும் பலர் பலவிதமான துன்பங்களை தங்களுக்குத் தாங்களே உண்டாக்கிக் கொள்கின்றனர். வாயில் கன்னங்கள் வழியாக இரும்பு வேலைக் குத்தி அதை நாக்கினூடே சிலர் செலுத்துகின்றனர். இது போன்ற வேல் குத்துதல் உடலின் பல பாகங்களிலும் செய்யப்படுகிறது. காவடி எடுப்பவர் முக க்ஷவரம் செய்வதில்லை. நீண்டதாடியை அவர் வளர்க்கிறார். தினமும் ஒருவேளை தான் அவர் உணவு உட்கொள்கிறார். நாக்கு அல்லது கன்னம் வழியாக செலுத்தப்பட்ட ஊசி சுப்பிரமணியப் பெருமானை அவருக்கு எப்பொழுதும் நினைவூட்டிக் கொண்டே இருக்கிறது. பேசாமலும் அது அவரைத் தடுக்கிறது. பொறுமைக் குணத்தை அது அவரிடம் பெரிதும் வளர்க்கிறது.

காவடி எடுப்பவர் உயரிய சமய உணர்ச்சியுடன் உள்ளார். தன்னை மறந்து அவர் ஆடுகிறார். அவரது தோற்றமே அச்சத்தை உண்டு பண்ணுகிறது. ஒரு தெய்வீகப் பிரகாசம் அவரிடம் காணப்படுகிறது. பக்தர்கள் அடிக்கடி இறைவனுடன் தாங்கள் ஒன்றிய நிலையை உணருகின்றனர். சில சமயங்களில் தெய்வம் அவர்களது உடலில் புகுந்து அவர்களைச் சிறிது நேரம் ஆட்கொள்கிறது.

**அக்னிக்காவடி** : இது மிகவும் கடினமானதொரு காவடியாகும். தனது தோள்களில் காவடி இருபுறமும்

தாங்க, பக்தர் தீக்கங்குகள் உள்ள ஒரு குழியில் நடந்து செல்கிறார். தீக்குழியைச் சுற்றி உள்ள பக்தர்கள் 'முருகா, முருகா' என்று இறைவன் நாமத்தை பக்தியுடன் உரத்த குரலில் எழுப்புகின்றனர். கொட்டுமேளம் முழங்குகிறது. சாம்பிராணி, ஊதுபத்தி புகைகிறது. சூழ்நிலையே அச்சம் ஊட்டுவதாக இருக்கிறது. உண்மையான பக்தன் தன்னை மறந்து உன்மத்த நிலையில் உள்ளான். தீயின் மீது நடந்து செல்கிறான்.

சஷ்டிக்கு முன்னும் பின்னுமாக சிவானந்த ஆசிரமத்தில் ஆறுநாட்கள் ஸ்கந்த சஷ்டி கொண்டாடப்படுகிறது.

1. முருக பக்தர்கள் வெறும் பால் பழத்தை உட்கொண்டு கடும் சாதனையில் ஈடுபடுகின்றனர்.

2. பிரம்ம முகூர்த்தத்தில் எல்லா சாதகர்களும் எழுந்திருந்து இறைவனைத் தியானிக்கின்றனர்.

3. இந்த ஆறு நாட்களிலும் அனைத்து பக்தர்களும் *ஓம் சரவணபவாய நம* என்ற மந்திரத்தை எத்தனை தடவை முடியுமோ அத்தனை முறை மாலையாக ஜபிக்கின்றனர். இந்த மந்திரத்தைச் சொல்லியே அவர்கள் ஒருவரை ஒருவர் வரவேற்கின்றனர்.

4. சுப்ரமண்ய தத்துவம் மற்றும் அவரது லீலைகள் குறித்து யோகியரும், அறிஞர் பெருமக்களும் சொற்பொழிவாற்றுகின்றனர். இரவு சத்சங்கத்தில் முருகனைப் பற்றிய பாடல்கள் பாடப்படுகின்றன. எனது 'பகவான் சண்முகரும், அவரது வழிபாடும்' என்ற நூலிலிருந்து சில பகுதிகள் படிக்கப்படுகின்றன. பக்தர்கள் இனிய பஜனை செய்கின்றனர்.

5. பஜனை அறையில் உள்ள சுப்ரமண்யப் பிரானின் விக்கிரகத்திற்கு ஒவ்வொரு நாளும் சிறப்பான முறையில் பூஜை செய்யப்படுகிறது.

6. கடைசி நாளில் ஒரு பெரிய ஹோமம் செய்யப்படுகிறது. பகவான் சண்முகரை வழிபட என்றே சத்சங்கம் அமைகிறது.

"பகவான் சுப்பிரமணியரே! கருணைக் கடலே! எங்களிடம் நம்பிக்கையோ அல்லது பக்தியோ கிடையாது. உரிய முறையில் உம்மை எப்படி வழிபடுவது என்றோ, தியானிப்பது என்றோ எங்களுக்குத் தெரியாது. வழிதவறி, இலட்சியத்தையும் உமது திருநாமத்தையும் மறந்த உமது குழந்தைகள் நாங்கள். இரக்கமுள்ள தந்தையே ! எங்களைத் திரும்பி ஏற்றுக் கொள்வது உமது கடமை இல்லையா! அம்மையே! பெருமானிடம் எங்களை அறிமுகப்படுத்த மாட்டாயா! இந்த உலகில் வேறு எதைக் காட்டிலும் தன் குழந்தைகள்பால் தாய்க்கு உள்ள அன்பு ஆழமானது, உண்மையானது. அன்பு வள்ளி அம்மையே! எங்களை மன்னித்துவிடு. எங்களை கடமை வீரர்களாகவும், நம்பிக்கை உள்ளவர்களாகவும் ஆக்குவாயாக. இந்த வினாடி முதல் நாங்கள் உன்னுடையவர்கள். எப்பொழுதும் உன்னுடையவர்களே. எல்லாம் உன்னுடையதே. தவறான வழியில் குறியிலாது தன் குழந்தைகள் செல்லும்போதெல்லாம் அவர்களைத் திருத்தி, அறிவூட்டி, நெறிப்படுத்துவது அன்னையின் கடமை அல்லவா! உன்னிடமிருந்து எங்களைப் பிரிக்கும் தடையை அகற்றி அருள்வாயாக. எங்களை ஆசீர்வதிப்பாயாக. எங்களுக்கு அறிவூட்டு. உன் பாதாரவிந்தங்களில் எங்களை அழைத்துக் கொள். சொல்ல வேண்டியது வேறு எதுவும் இல்லை. ஆதி தாய் தந்தையராகிய உனக்கும், எங்கள் பிரானுக்கும் எங்களது உளம் கனிந்த பிரார்த்தனை இதுவேதான். பகவான் சுப்ரமண்யர் உங்கள் மீது அவரது அருளைப் பொழியட்டும்!

# ௨௨. ராம நவமி

*ஓம் ஸ்ரீராம் ஜய்ராம் ஜய் ஜய்ராம்*

பகவான் விஷ்ணுவின் அவதாரமும், அளக்க முடியாதவரும், தூய சிதானந்த சொரூபமானவரும், சீதை மணாளரும், ஹனுமானின் தலைவரும், மூவுலக நாயகரும், தர்மத்தை நிலைநாட்டி, அதர்மத்தை அழித்து, நல்லாரைக் காக்க வேண்டி தமது இச்சைப்படி தோற்றம் எடுத்தவருமான ஸ்ரீராமச்சந்திரமூர்த்திக்கு நமஸ்காரங்கள்.

(மார்ச் - ஏப்ரல்) சித்திரை மாதத்தில் வளர்பிறை ஒன்பதாம் நாளில் ஸ்ரீராமனின் ஜயந்தி நன்னாள் வருகிறது.

ராவணனை அழிப்பதற்காக புவியில் தோன்றிய ஹரியின் அவதாரமே ஸ்ரீராமனாகும். அழகும், நல்ல தோற்றமும், அரச அம்சங்களுடனும் அவர் பிறந்தார். அவரது புகழும் ஆற்றலும் அளப்பரியவை. பூமியில் அவருக்கு நிகர் எவருமில்லை. எந்தவித தீயகுணமும் அவரிடம் இல்லை. மிகவும் பண்பானவர் அவர். தம் பிரஜைகளின் ரட்சகர் அவர். தமது குடிமக்களை அவர் எப்பொழுதும் அன்புடனேயே அழைத்தார். அவரை எவராவது தூண்டினால்கூட அவர் ஒருபோதும் கடும் சொற்களைப் பயன்படுத்தியதே கிடையாது. அகில உலகமும் அவரது கட்டுப்பாட்டில் இருந்தது.

ஸ்ரீராமர் உங்களது இலட்சியமாக இருக்கட்டும். உங்கள் வாழ்வில் நீங்கள் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்காகவே இலட்சியங்கள் நினைவு கூரப்படுகின்றன. ராமநவமி அல்லது வஸந்த நவராத்திரி ஒவ்வொரு வருடமும் கொண்டாடப்படுவது பகவான் ஸ்ரீராமரின் நற்குணங்கள் நம்மிடம் நிரம்பியிருக்க வேண்டும் என்பதற்காகவேயாகும். நமது இலட்சிய

தெய்வங்களை நாம் நேசிப்பதும் வழிபடுவதும் அவர்களுடன் நாம் ஒன்றிவிட வேண்டும் என்ற நமது விருப்பத்தை வெளியிடுவதற்காகவேயாகும். கடவுளை நாம் வழிபடுவதானது நாமும் கடவுளைப் போல நன்மை, தூய்மை, பூரணம் நிறைந்தவர்களாக இருக்க வேண்டும் என்பதற்காகவேயாகும். எனவேதான் "இறைவனை வழிபடுவதற்கு ஒருவன் தெய்வீகமயமாக வேண்டும்", என்று கற்றவர் கூறுகின்றனர். கடவுளிடம் காணப்படும் உயர் பண்புகளை ஒருவன் வளர்த்துக் கொள்ளாத வரையில் ஒருவன் பகவான் ஸ்ரீராமரின் உண்மையான பக்தனாக இருக்க முடியாது. மாறாக ஸ்ரீராமரை வழிபடுவதே இத்தகைய குணங்களை வளர்ப்பதற்கான சாதனமாகும்.

அன்புடனும் பணிவுடனும் ஸ்ரீராமரை வணங்குகிறவன் உள்ளத்தில் தூய்மையும், நல்ல சுபாவமும், சிந்தனை, சொல், செயலில் பற்றற்றும், பரந்த மனம் உடையவனாகவும் ஆகிறான். ஸ்ரீராமரின் உண்மையான பக்தன் அவரது ஆற்றல் மற்றும் அறிவின் பிரதிநிதியாகிறான்.

ஸ்ரீராமர் இக்ஷ்வாகு குலத்தில் தோன்றிய அரசகுமாரர். ஆண்மையும் நல்ல குணங்களும் வாய்க்கப் பெற்றவராக அவர் திகழ்ந்தார். மனம் மற்றும் புலன்களை அடக்கி ஆண்டவர் அவர். வலிமையும் வீரமும் பெற்றிருந்தாலும் அவர் பணிவும், மென்மையும் பெற்று விளங்கினார். அறிவுரையில் துறவியாகவும், பேச்சில் இனிமையும் பண்பும் நிறைந்தவராகவும், தோற்றத்தில் அழகும் கனிவும் நிறைந்தவராகவும் விளங்கினார். தெய்வீக அஸ்திரங்களில் நன்கு தேர்ச்சி பெற்றவராகவும், தலைசிறந்த வீரராகவும் அவர் திகழ்ந்தார். தமது மக்களின் நலத்தில் யாண்டும் சிரத்தை கொண்டவரான அவர், எளியோரின் காவலராகவும்



பகவான் ஸ்ரீ ராமர்

நல்லவர்களின் ரக்ஷகராகவும் திகழ்ந்தார். மனத்தின் அற்புத ஆற்றல்களில் தேர்ச்சி பெற்று விளங்கிய அவர் போர் ஞானம் மற்றும் ஆத்மஞானம் இரண்டிலும் ஒருங்கே வல்லுனராகத் திகழ்ந்தார்.

கடலைப் போல ஆழமும், இமயத்தைப் போல் உறுதியும், விஷ்ணுவைப் போல் வீரமும் பெற்றுத் திகழ்ந்த அவர், கௌசல்யையின் இன்ப மகனாகத் திகழ்ந்தார். போர்க்களத்தில் நெருப்பைப் போல பயங்கரமாக ஜொலித்தாலும், அவர் மந்தமாருதம் போல குளிர்ந்து அமைதியாகவும், பூமா தேவியைப் போல பொறுமைசாலியாகவும், குபேரனைப் போல தான சீலனாகவும், எமதருமனைப் போல நீதிமானாகவும் திகழ்ந்தார். மக்களது துன்பத்திலும் துயரத்திலும் அவரது மனம் பாகாய் உருகியது. விழாக் காலங்களில் தந்தையைப் போல அவர் அவர்களது மகிழ்ச்சியில் பங்கு கொண்டார். அவரது வீரத்தாலும், பிரஜைகள்பால் அன்பினாலும் அவர் அவரது குடிமக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டார். இத்தகைய ஒரு சிரேஷ்ட புருஷரே ஸ்ரீராமர்!

அப்பழுக்கற்ற ஒழுக்கத்துடன் கூடிய புருஷோத்தமன் ஸ்ரீராமர். அன்பின் வடிவமாக அவர் திகழ்ந்தார். அவர் ஓர் இலட்சிய மகன், இலட்சிய சகோதரன், இலட்சிய கணவன், இலட்சிய நண்பன், இலட்சிய அரசன். மனிதனின் அனைத்து இலட்சிய குணங்களும் நிறைந்த ஒருவராக அவர் திகழ்ந்தார். மனித குலத்திற்கு தர்மத்தின் தத்துவங்களை எடுத்துப் புகட்ட அவர் ஓர் இலட்சிய கிருஹஸ்தனாக வாழ்ந்தார். அவர் தமது குடிமக்களை மிக நன்றாக பரிபாலனம் செய்தார். அது தான் ராமராஜ்யம் எனப்படுகிறது. அனைவருக்கும் ஆனந்தத்தையும் சுபிட்சத்தையும் அளிக்கவல்ல அறத்தின் ஆட்சியே அது.

ஒவ்வொரு மனிதனின் வாழ்விலும் தர்மத்தின் முக்கியத்துவத்தை வலியுறுத்துவதே ராமாயணத்தில் காணப்படும் மிக முக்கியமான பாடமாகும். அறமே வாழ்வின் ஆன்மீக ஜோதி. மனிதனுள் மறைந்து கிடக்கும் தெய்வீகத்தை வெளிப்படுத்துவதே அறத்தை வளர்ப்பதாகும். பரம்பொருள் ஸ்ரீராமனின் வடிவில் தர்மத்தை வலியுறுத்துவதற்காகவே அவதாரம் செய்தது. மனிதகுலம் அவர் காட்டிய வழியில் நின்று அறத்தைக் கடைப்பிடிக்கட்டும். அப்படிச் செய்தால்தான் உலகில் நிரந்தரமான அமைதியும் நலமும், சுபிட்சமும் இருக்கும்.

தர்மவானால்தான் உண்மையில் ஆனந்தமாக இருக்க முடியும். கடமையைப் பற்றிய சரியான உணர்வும், அதைச் செயல்படுத்த வேண்டுமென்ற நாட்டமும் உள்ளவன்தான் உண்மையில் வாழ்பவனாகக் கருத முடியும். நீதிமுறைகள், ஒழுக்க நியதிகள் மற்றும் ஆன்மீக இலட்சியங்கள் ஆகியவற்றின் மேன்மை குறித்து ஒருவன் உறுதியான கொள்கையுடன் விளங்க வேண்டும். ஒருவனது அன்றாட வாழ்வின் வழிகாட்டியாகவும்; மனித குல மேம்பாட்டிற்காகவும் இவை வழிகாட்ட வேண்டும். வாழ்வின் குறிக்கோள் இதுதான். ஆன்ம ஞானத்திற்கும் இதுவே வழி. புவியில் ஸ்ரீராமரின் வாழ்வு புகட்டும் பாடமும் நோக்கமும் இதுதான்.

பக்தனுக்கு ஸ்ரீராமர் வெறும் ஒரு நல்ல, மேலான மனிதன் மட்டுமல்ல, ஸாக்ஷாத் கடவுளேயாவார். ராமர் அயோத்தி மன்னன் தசரதனின் மைந்தன் எனினும், எங்கும் நிறைந்த, சர்வ வல்லமை வாய்ந்த, ஸர்வக்ஞனான கடவுள் ஆவார். பத்துத் தலை ராவணசம்ஹாரம், மனம் அல்லது பத்து புலன்களை அழிப்பதைக் குறிக்கிறது. ராமரை வழிபடுவதானது எங்கும் நிறைந்த இறைவனை வழிபடுவதாகிறது. ராமாயணத்தின் யுத்த காண்டத்தில் மண்டோதரி மற்றும்

பிரம்மாவின் பிரார்த்தனைகளைப் படியுங்கள். பிரபஞ்சத்தின் ஒரே படைப்பவர், அனைத்தின் இறைவன், இயற்கையின் ஆளுநர் ஸ்ரீராமர் என்பதை அவை சுட்டிக் காட்டுகின்றன.

கடவுள் பக்தி என்பது வெறும் ஓர் உணர்ச்சி அல்ல. தீவிர வைராக்யம், மனத் தூய்மையின் விளைவே அது. ராமாயணத்தில் ஸ்ரீராமரது வாழ்வில் விளக்கப்பெறும் உயர் குணங்களைப் பெற்று விளங்க நீங்கள் பெரிதும் முயல வேண்டும். இல்லையெனில் தாற்காலிகமாக ஏதோ ஓர் உத்வேகம் போல உணர்ச்சி உங்களிடம் மேலெழுமே தவிர, தெய்வீக உணர்வை நீங்கள் அனுபவிக்கமாட்டீர்கள். தன்னடக்கம் மற்றும் நற்பண்புகளால் படிப்படியாகப் பழுக்கும் ஒரு கனியே பக்தியாகும். தீவிர வைராக்யம் இன்றி ஆத்ம ஞானத்திற்கான உண்மையான சாதனை எதுவும் இருக்க முடியாது. உலகப் பொருள்களை விட்டால்தான் மேலான இறைநிலையை அடைய முடியும். இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

பக்தி என்பது வயது, குலம், கோத்திரம், நிலைமை அல்லது ஆண் பெண் என்பவற்றைப் பொருத்து அமைவதில்லை. ''எங்கள் வேலையிலிருந்து நாங்கள் ஓய்வு பெற்ற பின்னர், நாங்கள் தியானம் மற்றும் பக்தியைப் பயிலுவோம்'', என்று உலகியல் மக்கள் பொதுவாக சொல்லுகிறார்கள். இது ஒரு பெரும் தவறாகும். வேலையில் உங்கள் சக்தியையெல்லாம் செலவழித்த பின்னர் எப்படி உங்களால் தீவிர சாதனையில் ஈடுபட முடியும்? உங்கள் வயதான காலத்தில் கடினமான யோகக் கட்டுப்பாட்டை எவ்விதம் உங்களால் கடைப்பிடிக்க முடியும்? நீங்கள் இளைஞராயிருக்கும் பொழுதே, உங்களது இதயம் மாசற்று மிருதுவாயிருக்கும் பொழுதே பக்திச்

கட்டுப்பாட்டின் ஆன்மீக விதைகள் ஊன்றப்பட வேண்டும். அப்பொழுது அவை ஆழமாக வேரூன்றி பூத்துக் காய்த்து உங்களுக்கு வயதாகி ஓய்வு பெறும் காலத்தில் பழுக்கும். அப்பொழுது தான் மரண காலத்தில் முகத்தில் புன்முறுவலுடன் நீங்கள் எமதர்மனை தைரியமாக எதிர்கொள்ள முடியும்.

பிறப்பிறப்பிலிருந்து இறுதி விடுதலை பெறும் வழியை நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். ராம பக்தி மனத் தூய்மைக்கான ஒரு பெரும் மார்க்கமாகும். பக்தியிலிருந்து ஞானம் பிறக்கிறது. இதைப் பூரணமாக உணர்ந்து ஒருவன் மேலாம் நிலைக்குச் சென்று பரமாத்மனுடன் ஒன்றிக்கிறான்.

அனைத்துயிரிலும் விளங்குபவரும், இணையற்றவரும், ஆனந்த சொரூபமாக விளங்குபவருமான ஸ்ரீராமரிடம் பக்தியை வளர்க்காமல் மனிதன் எவ்வாறு துன்பம், துக்கம், கவலை நிறைந்த சம்சாரக் கடலைக் கடக்க முடியும்? லக்ஷ்மிதேவியாம் சீதையின் நாயகனான விஷ்ணுவான ஸ்ரீராமரை நீங்கள் வணங்குகின்றீர்களா?. எல்லா முட்டாள்தனத்தையும் பகைமையையும் விடுங்கள். ராம சேவையில் ஈடுபடுங்கள்.

அவனிடம் அடைக்கலம் அடைந்தவர்களிடம் பகவான் மிகவும் பிரியம் கொண்டு விளங்குகிறார். "என்னை அடைக்கலம் அடைந்து, 'நான் உன்னுடையவன்' என்று எவன் சொல்லுகிறானோ அவனுக்கு நான் அனைத்துயிரிலிருந்தும் அஞ்சாமையை அளிக்கிறேன். இது எனது வாக்குறுதி", என்று அவர் இராமாயணத்தில் உறுதி அளித்திருக்கிறார்.

பிறர் பொருளை விரும்பும் தீய குணங்கள் நிறைந்த ஒருவன்கூட யாண்டும் பகவானை நினைந்தால்

உலகியல் தீமைகள் அனைத்திலிருந்தும் விடுபட்டவன் ஆகிறான். அவன் தூய்மை அடைந்து இறைவனின் பெருநிலையை எட்டுகிறான்.

பகவன் நாமம் இதயத்தைத் தூய்மைப்படுத்துவதில் தலையாயது ஆகும். அது ஒருவனுடைய அனைத்துப் பாபங்களையும் போக்குகிறது. இது மட்டுமல்ல, அது தீய சுபாவங்களையும் இல்லாதாக்குகிறது. இனிப்பிலும் இனிப்பான பொருள் பகவன் நாமமே. அது அமைதியின் உறைவிடம். தூய ஆன்மாக்களின் உயிர் நாடி அது. தூய்மைப்படுத்தும் பொருள்களை அது தூய்மைப்படுத்துகிறது. உலக ஆசைகள் எனும் தீயை அது அணைக்கிறது. அது இறை ஞானத்தைத் தூண்டுகிறது. தேவானந்தக் கடலில் அது சாதகரை குளிப்பாட்டுகிறது. ஸ்ரீராமருக்கும் அவரது பெயருக்கும் புகழுண்டாகுக!

பக்தனே! அவன் பெயரைச் சொல். அவன் புகழைப் பாடு. அவனது பாதங்களைத் தொழு. சிவபிரானது இதயத்தில் பிரதிபலிக்கும் கார் முகில் வண்ணனான ஸ்ரீராமரை உங்கள் இதய கமலத்தில் அமர்த்துங்கள். வேதங்கள் எனும் கடலைக் கடைந்து எடுக்கப்பட்டதும், கலியுக கச்மலங்களைப் போக்குவதும், சிவபெருமான் நாவில் யாண்டும் இருப்பதும், உலகாயதம் எனும் வியாதியைப் போக்கவல்ல அருமருந்தும், சீதாதேவியின் உயிராயமைவதுமான ஸ்ரீராமநாமம் எனும் அமிருதத்தை இடைவிடாது அருந்தும் பக்தன் பாக்கியவானாவான்.

ராமநாமம் அறியாமையையும், காமத்தையும், பாபத்தையும் பொசுக்குகிறது. சரியாகவோ, தவறாகவோ, பொருள் உணர்ந்தோ உணராமலோ, 'ராமா' என்ற வார்த்தை உச்சரிக்கப்படுமானால் அது பக்தன் மீது நல்லது அனைத்தையும் மழையாகப் பொழிகிறது.

உலகியல் அல்லது சம்சார சாகரத்தைக் கடக்க உதவும் பிரம்மமே ஸ்ரீராமர். யோகிகள் ரமிக்கும் ஆத்மனே ராமன்.

"பகவானின் ஆயிரம் நாமங்களுக்கு இணை யானது இந்த ராமநாமம்" என்று பார்வதியிடம் சிவபெருமான் சொல்கிறார்.

இதை நான் வெட்டிப் பேச்சுக்கான மாற்று மருந்து என்று அழைக்கிறேன். வீண்பேச்சில் நீங்கள் நேரத்தை வீணடிப்பதாக உணர்ந்தால் உடனே ராமநாமத்தை ஜபிக்கத் தொடங்குங்கள். கழிந்த நேர இழப்பை நீங்கள் ஈடுசெய்ய முடியும். மனமும் வீண் பேச்சில் ஈடுபடுவதிலிருந்து படிப்படியாகத் திரும்பும்.

ஸ்ரீராமர் கேட்டதைக் கொடுக்கும் ஒரு கற்பக விருட்சம் ஆவார். நீங்கள் விரும்புவது அனைத்தையும் அவர் தந்து அருள்வார்.

"நல்லது அனைத்தின் இருப்பிடமும், இக்கலியுகத் தின் தோஷங்கள் அனைத்தையும் போக்குவதும் தூய்மையைக் காட்டிலும் தூய்மையானதும் மோட்சமார்க் கத்தில் சாதகர்களின் வழித்துணையும் சான்றோரின் உயிர் நாடியுமாகவும் விளங்குவது 'ஸ்ரீராம்' எனும் தெய்வீக நாமம். இவ்வாறு முனிவர்கள் சொல்லு கிறார்கள்", என்று சிவன் மேலும் கூறுகிறார்.

ராம நவமி நன்னாளன்று உங்கள் ஒவ்வொரு சுவாசத்திலும் நீங்கள் ராமநாமத்தை உச்சரிப்பீர்கள் என்றும், அறவாழ்க்கை வாழ முயல்வீர்கள் என்றும் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளுங்கள்.

ஹிந்துக்களில் வைஷ்ணவர்களுக்கு ராமநவமி ஒரு மிக முக்கியமான விழாவாகும். இருப்பினும் சிவனை வழிபடுபவர்களும் இதைக் கொண்டாடுகின்றனர். சிலர் அன்று முழு உபவாசம் இருக்கின்றனர். கோவில்கள்

அலங்கரிக்கப்பட்டு ஸ்ரீராம விக்ரகம் நன்கு விலையுயர்ந்த ஆபரணங்களால் அழகூட்டப்படுகிறது. ஆலயங்களில் புனித இராமாயணம் வாசிக்கப்படுகிறது. ராமர் பிறந்த அயோத்தியில் ஒரு பெரிய மேளா அன்று கொண்டாடப்படுகிறது.

தென்னிந்தியாவில் ஸ்ரீராமநவமி ஒன்பது நாட்களுக்கு வெகு விமரிசையாக பக்தி சிரத்தையுடன் கொண்டாடப்படுகிறது. கதாகாலக்ஷேபம் செய்வதில் வல்லுநர்கள் ராமாயணக் கதையை பக்திரசம் சொட்ட எடுத்துரைக்கின்றனர். ஸ்ரீராமனின் புனித நாமத்தை உச்சரித்து பாடகர்கள் ராமநவமியன்று சீதாராம கலியாணத்தை விமரிசையாக நடத்துகின்றனர். மிகவும் விறுவிறுப்பான, பாடம் புகட்டும் ஒரு விழா அதுவாகும்.

சிவானந்தாசிரமத்தில் ஒன்பது நாட்களுக்கு ஸ்ரீராமநவமி கீழ்க்காணும் விதத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

1. ஆன்ம சாதகர்கள் எவ்வளவு முடியுமோ அவ்வளவு ஜபம் செய்கிறார்கள். புனித மந்திரங்களான '*ஓம் ஸ்ரீராமாயநம:*' *ஸ்ரீ ஓம் ஸ்ரீராம் ஜய் ராம் ஜய் ஜய் ராம்* என்பவை பாராயணம் செய்யப்படுகின்றன.

2. இந்த ஒன்பது நாட்களிலும் பக்தர்கள் வால்மீகியின் 'சமஸ்கிருத ராமாயணத்தையோ அல்லது துளசிதாசரின் ஹிந்தி ராமசரிதமானஸையோ பக்தியுடன் வாசிக்கின்றனர்.

ராமாயணம் முழுவதையும் படிக்க முடியாதவர்கள் ராமாயணம் முழுவதையும் அடக்கியுள்ள கீழ்க்காணும் சுலோகத்தை (அதன் பொருள் தரப்படுகிறது) மட்டும் படித்தாலே போதும். ''ஆரம்பத்தில் ரிஷிகள் தவம் செய்த காட்டிற்கு ஸ்ரீராமர் சென்றார். மாய மானைக் கொன்றார். சீதை அபகரிக்கப்பட்டாள். ஜடாயு

கொல்லப்பட்டார். ராமர் சுக்ரீவனை சந்தித்தார். வாலியைக் கொன்றார். சமுத்திரத்தைக் கடந்தார். இலங்கை மாநகர் அனுமனால் எரிக்கப்பட்டது. அரக்கர்களான ராவணனும் கும்பகர்ணனும் பிறகு வதம் செய்யப்பட்டார்கள். இதுதான் புனித ராமாயணம்''.

3. பக்தர்கள் ஒருவரை ஒருவர் 'ஸ்ரீராம்', 'ஜய் ராம் ஜீகி' என்று வரவேற்கின்றனர்.

4. ஸ்ரீராமரை தங்கள் இஷ்ட தெய்வமாக ஏற்றுக் கொண்டிருப்பவர்கள் உபவாசம் இருந்து ஒன்பது நாட்களிலும் வெறும் பாலும் பழமும் மட்டுமே உட்கொள்ளுகிறார்கள். சிலர் ஸ்ரீராமநவமி அன்று மட்டும் உபவாசம் இருப்பார்கள்.

5. இறுதி நாளான ஸ்ரீராம நவமி அன்று நன்கு அலங்கரிக்கப்பட்ட ஆலயத்தில் வெகு விமரிசையாக பூஜை நடக்கும். லக்ஷார்ச்சனை உட்பட அனைத்து வேதச் சடங்குகளும் நடத்தப்படுகின்றன.

6. ஒரு ஹோமம் நடத்தப்படுகிறது.

7. காலை நான்கு மணி முதல் இரவு வெகு நேரம் வரை எங்கும் 'ராம், ராம்' என்றே கேட்கிறது.

8. ஸ்ரீராமருடன் தொடர்புடைய துண்டுப் பிரசுரங்கள், புத்தகங்கள் விநியோகிக்கப்படுகின்றன.

9. மாலையில் விசேஷ சத்சங்கம் நடக்கும். ஸ்ரீராமரின் சரிதம் மற்றும் தத்துவம் குறித்து சொற்பொழிவுகள் நிகழ்கின்றன.

10. தீவிர சாதகர்கள் தங்களது ஆன்மீக முன்னேற்றத்தைத் துரிதப்படுத்த புது முயற்சிகளை மேற்கொள்கின்றனர்.

அன்புச் சாதகர்களே! நேரம் ஓடுகிறது. காலத்தின் அருமையை உணருங்கள். காலம் பொன் போன்றது.

ஒவ்வொரு வினாடியையும் லாபகரமாகச் செலவிடுங்கள். வீண் கற்பனையில் நேரத்தை வீணாக்காதீர்கள். வெட்டிப் பேச்சு அனைத்தையும் தவிருங்கள். தெய்வீக இலட்சியத்தையும் குறிக்கோளையும் அடைய வாழ்வின் ஒவ்வொரு வினாடியையும் பயன்படுத்துங்கள். உங்களுள் மறைந்து கிடக்கும். சக்திகளை வெளிப்படுத்துங்கள். விரிவடையுங்கள். முன்னேறுங்கள். அதிமானுஷ்யமான ஓர் ஆற்றல்மிக்க யோகியாகுங்கள். நன்கு முயன்று வாழ்வின் இலட்சியத்தை அடையுங்கள்.

பகவான் ஸ்ரீராமரிடம் பக்தி கொண்டு பேரானந்தத்தை நீங்கள் அனைவரும் அடைவீர்களாக. தெய்வீக அன்பின் ஆனந்தத்தில் நீங்கள் திளைப்பீர்களாக. கோடி சூர்யப் பிரகாசம் உள்ளவரும், தேவர்களாலும் பக்தர்களாலும் வணங்கப்படுபவருமான ஸ்ரீராமர் உங்களைக் காப்பாராக! ஸ்ரீராமரின் அருள் உங்கள் அனைவர் மீதும் மலர்வதாக!

# 23. பிரதோஷ விரதம்

இந்தப் பரந்த பிரபஞ்சம் முழுவதும் குறிப்பிட்ட நியதிகளின் அடிப்படையில் இயங்குகிறது. லௌகிகமாகட்டும், அருளியல் ஆகட்டும் ஒவ்வொரு செயல் மற்றும் நிகழ்ச்சியின் பின்னும் ஓர் அற்புதமான திட்ட அமைப்பு இருக்கிறது. பல்வேறு நிலைகள், சூழ்நிலைகளுக்கேற்ப ஸ்தூலப் பொருள்களும், பௌதிக சக்திகளும் பலவிதமாக இயங்குவது போல, பிரார்த்தனை, வழிபாடு, தியானம் போன்ற ஆன்மீக முறைகளிலும் உள்முக தத்துவ நிலைகளிலும் சூக்ஷ்மமான மேலாம் சக்திகள் செயல்படுகின்றன. எனவே காலையில் குறிப்பான சில பிரார்த்தனை முறைகளைச் செய்வது பற்றியும், மதியம் செய்யும் சிலவற்றைப் பற்றியும், வேறு சிலவற்றை இரவில் செய்வது பற்றியும் உள்ள குறிப்புகளை நீங்கள் காண்பீர்கள். சில சடங்குகள் சந்திரனின் சில குறிப்பிட்ட நிலைகளில் செய்யப்படுவது பற்றியும், குறிப்பிட்டதொரு நட்சத்திரம் உச்சத்தில் இருக்கையிலோ அல்லது சில கிரகங்கள் சேரும் பொழுதோ சிலவற்றைச் செய்ய வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு சாந்திராயன பகுதியின் பதிமூன்றாம் நாளன்று மாலை அஸ்தமன வேளையில் பிரதோஷ வழிபாடு செய்யப்படுகிறது. எல்லாக் காரியங்களில் வெற்றிக்கும், நீங்கள் நினைத்தது அனைத்தும் நல்லபடியாக நடக்க வேண்டும் என்பதற்காகவும் சிவபெருமானைக் குறித்த வழிபாடு அது. உங்கள் மேலதிகாரி ஒருவரிடம் உங்களுக்கு ஒரு காரியம் நடக்க வேண்டிய சூழ்நிலையில், அவர் சுமுகமான மனநிலையில் உள்ள சமயம் பார்த்து நீங்கள் அவரை அணுகுவீர்கள் இல்லையா! அவர் சாப்பாடு எல்லாம்

முடித்து, நல்ல மனநிலையில் தம் நண்பருடன் உரையாடிக் கொண்டிருக்கும் போது நீங்கள் அவரைக் காண்பீர்கள் அல்லவா! அதைப் போலவே சில குறிப்பிட்ட ஆசைகளைப் பூர்த்தி செய்ய வேண்டி இறைவனை வழிபடும் ஒரு ஹிந்து தனது வழிபாட்டிற்காக இறைவனுக்குகந்த வேளையைத் தேர்ந்தெடுக்கிறான். முற்கால ரிஷிகள் தெய்வத்தை வணங்க எந்த முகூர்த்த வேளையைத் தெரிந்தெடுத்தனரோ அந்த வேளையில், அவன் வழிபாடு செய்கிறான்.

மிகவும் மங்களகரமான வேளையில் சிவனையும் பார்வதியையும் வழிபடுவதே பிரதோஷ பூஜையாகும். அசுரர்களால் மீண்டும் மீண்டும் ஒடுக்கப்பட்ட தேவர்கள் தங்களுக்குள் ஒரு தலைவனை வேண்டி சிவபெருமானை அணுகினர். சாந்திராயனப் பகுதி 13ம் நாள் அஸ்தமன வேளையில் அவர்கள் சிவபெருமானை அணுகின சமயத்தில் அவர் பார்வதியுடன் மகிழ்ச்சியாக இருப்பதைக் கண்டனர். அவர்களால் போற்றிப் புகழப்பட்ட சிவபெருமான் அவர்களது வேண்டு கோளைப் பூர்த்தி செய்து அருளினார். எனவே தான் அது மிகவும் சுபமுகூர்த்தமாகும்.

சாண்டில்ய முனிவர் ஓர் அந்தண ஸ்திரீக்கு இந்த விரதத்தை எப்படி எடுத்துரைத்தார் என்பதை ஸ்கந்த புராணம் கூறுகிறது. தனது மகன் ஸுசிவ்ரதன் மற்றும் தர்மகுப்தன் என்ற இளவரசனுடன் அவள் அந்த முனிவரைப் பார்க்க வந்தாள். அந்த இளவரசனின் தந்தை சண்டையில் கொல்லப்பட்டு, அவரது நாடு எதிரிகள் வசமாயிற்று.

முனிவரின் அறிவுரைப்படி, அந்தப் பெண்மணியும், சிறுவர்களும் மிகுந்த பக்தியுடன் அந்த விரதத்தைச் செய்தனர். நான்கு மாதங்களுக்குப் பிறகு,

அதாவது எட்டாவது பிரதோஷத்தின் போது, ஸுசிவ்ரதன் அமிருத கலசத்தைப் பெற்று, அமிருதத்தைப் பருகினான். இளவரசன் தர்மகுப்தன் ஒரு தேவ கன்னிகையை மணந்து, அந்த தேவ மன்னனின் துணையுடன் தனது எதிரிகளைத் தோற்கடித்து, தனது ஆட்சியைத் திரும்பப் பெற்றான். பிறகு தர்மகுப்தன் மேலான இறைபதத்தை அடைந்தான். இவ்வளவு எளிதாக, இத்தனை விரைவில் சிவபெருமான் இந்த விரதத்தினால் திருப்தி அடைந்தார்.

இந்த விரதத்தை மேற்கொள்ளும் பக்தர் அன்று உபவாசம் இருந்து, உபவாசத்திற்குப் பின் இரவு கண் விழித்திருக்கிறார். சூரிய அஸ்தமனத்திற்கு ஒரு மணி நேரத்திற்கு முன்பாக பக்தர் ஸ்நானம் செய்து பார்வதி, கணேசர், ஸ்கந்தன், நந்தி முதலானோருடன்கூட சிவபெருமானை ஓர் ஆரம்ப வழிபாடு செய்கிறார். கணேச பூஜை முடிந்ததும் தர்பப் புல்லின் மீது விரித்த தாமரைப் பூவுடன் சதுரமான மண்டலத்தில் வைக்கப்பட்ட ஒரு விசேஷ கலசத்தில் சிவபெருமான் ஆவாஹனம் செய்யப்படுகிறார். முறைப்படியான வழிபாடு முடிந்ததும் பிரதோஷ மகிமை வாசிக்கப்பட்டு கூடியுள்ளோரால் கேட்கப்படுகிறது. இதை அடுத்து 108 முறை மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரம் ஜபிக்கப்படுகிறது. முடிவில் புனித விபூதி நெற்றியில் இடப்படுகிறது. சிவபெருமானை அபிஷேகம் செய்யப் பயன் படுத்தப்பட்ட புனித நீர் அருந்தப்படுகிறது. வழிபாட்டை முடிக்கும் விதத்தில் ஒரு பிராம்மணருக்கு ஒரு செம்பு, உடை மற்றும் பகவானின் விக்கிரகம் தானம் செய்யப்படுகிறது.

இங்கே குறிப்பிட வேண்டிய ஒரு முக்கிய அம்சம் என்னவெனில், இந்தப் பிரதோஷ பூஜையின் போது எல்லா தேவர்களும் தேவதைகளும் சூக்ஷ்மரூபத்தில்

சொர்க்கத்திலிருந்து கீழிறங்கி வந்து இதில் கலந்து கொள்வதாக ஐதிகம். இது இந்த வழிபாட்டின் புனிதத்தை அதிகரிக்கிறது.

மறை நூல்களால் இவ்வழிபாடு மிகவும் சிலாக்கியமாகப் பேசப்படுகிறது. சிவபக்தர்களுக்கு இது மிகவும் புனிதமானது, முக்கியமானது. இந்தப் புனித வேளையில் ஆலயத்தில் தெய்வத்தை தரிசிப்பதானது பக்தனின் அனைத்துப் பாபங்களையும் போக்கி அவனுக்கு சகல நன்மைகளையும் அருள்கிறது. இந்தப் புனித வேளையில் ஒரு வில்வ இலையை பகவானுக்கு அர்ச்சித்தாலே போதும், நூறு மஹா பூஜைகள் செய்ததற்கு நிகர். பிரதோஷத்தின் பொழுது கோவில்களில் கூடுதலாக விளக்குகள் போடுவது வழக்கம். இந்த வேளையில் ஒரு சிறிய திரியைக்கூட ஏற்றுவதானது மிகவும் புண்ணியமானதாகவும், சொல்லொணா பொருள் மற்றும் அருள் நலன்களைச் செய்வதாகவும் கருதப்படுகிறது. பிரதோஷ விரத பூஜையைச் செய்பவன் மிகுந்த பாக்கியவான். ஏனெனில் அவன் மீது சிவபெருமான் மிகக் குறுகிய காலத்தில் அளப்பரும் ஆசீர்வாதத்தையும் கருணையையும் பொழிகிறார்.

பிரதோஷ விரதத்தின் யோக விளக்கம் கீழே தரப்படுகிறது. சிவராஜயோகத்தின்படி தனது பார்வையை அகமுகமாக்கும் யோகி தனது இரு புருவங்களுக்கு இடையில் உள்ள பகுதியில் மனத்தை ஒருமைப்படுத்துகையில் ஆன்மீக ஒளியைத் தரிசிக்கிறான். யோகி பல்வேறு நிலைகளைக் கடந்து செல்கிறான். அனைத்துமே ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி, துரீயம் எனும் நான்கின் உட்பிரிவுகளேயாகும். இந்த ஒவ்வொன்றும் மேலும் நான்கு உட்பிரிவுகளாகப் பிரிக்கப்படுகின்றன. உதாரணமாக ஜாக்ரத் - ஸ்வப்ன,

ஜாக்ரத்-ஸுஷுப்தி, ஜாக்ரத்-துரீய, ஜாக்ரத்-ஜாக்ரத், இதுமாதிரி பிரிக்கப்படுகையில் முதல் மூன்று நிலைகள் பன்னிரண்டு உள் நிலைகளாக ஆகின்றன. 13வது நிலை துரீய - ஜாக்ரத் நிலையாகும். வளர்பிறை, தேய்பிறை இரண்டினுடைய 13வது நாளுக்கும் இதற்கும் தொடர்பு உண்டு.

சக்தியை வழிபடுபவர்களிடையே ஒருவித நம்பிக்கை உண்டு. வழிபடப்படும் சக்தி முதல் நாள் முதல், வளர்பிறையில் ஒவ்வொரு நாளிலும் ஒவ்வொரு கலை அல்லது கதிரைப் பெறுகிறாள். இவ்வாறு பௌர்ணமியன்று அம்பிகை பதினைந்து கலைகளைப் பெற்றிருப்பாள். பக்தனை எல்லா வகைகளிலும் அருள்வதற்கு அவள் தயாராகியிருக்கிறாள். எனவேதான் பௌர்ணமியன்று நவாவரண பூஜை செய்யப்படுகிறது.

மனதிற்கும் சந்திரனுக்கும் இடையே மிகுந்த தொடர்பு உண்டு. 'மதி' என்ற வார்த்தை சந்திரனையும், மனத்தையும் குறிக்கிறது.

சிவராஜயோகத்தின்படி பிராணன் இரண்டு வழிகளில் செயல்படுகிறது. இடை, பிங்களை என்ற இவை சந்திரன், சூரியனால் ஆதிக்கம் செலுத்தப் படுகின்றன. இவ்விரண்டிற்கும் இடையில் சுஷும்னை என்ற மூன்றாவது நாடி உள்ளது. சுவாசம் சந்திர கலையில் செல்லும்போது யோகப் பயிற்சியை ஆரம்பிக்குமாறு யோகி கேட்டுக்கொள்ளப்படுகிறார். இடது நாசித் துவாரம் வழியாக சுவாசம் செல்வதுடன் இது இணைகிறது. ஒருவேளை இந்தப் பயிற்சியின் போது சுவாசம் வலது நாசித்துவாரம் வழியாகச் செல்லுமேயாகில், ஒரு சிறப்பு பயிற்சி மூலம் சுவாசத்தை இடது நாசித் துவாரத்திற்கு மாற்றுவதற்கு யோகி கேட்டுக் கொள்ளப்படுகிறார். புருவ மத்தியில் யோகி தியானிக்கையில் படிப்படியாக அவர் முதல்

பன்னிரண்டு கிளைநிலைகளைத் தாண்டிச் செல்கிறார். சுவாசம் சந்திர கலையிலேயே செல்கிறது. சந்திரன் மென்மேலும் ஆற்றலைப் பெறுகிறான். பதிமூன்றாம் நாள் வந்ததும், யோகியின் ஆன்மீக சக்தி படிப்படியாக உயர்ந்து புருவமத்தியில் உள்ள நரம்பு மையத்தில் தோன்றும் ஒளியைப் பார்க்க வல்லவனாகிறான். மன ஒருமைப்பாட்டின் அதிகரிப்பிற்கு எதிர்விகித முறையில் யோகியின் சுவாச நேரம் அமைகிறது. பயிற்சியின் ஆரம்பத்தில் சுவாசம் சுமார் 16 விரல்கள் அளவு (அங்குலத்திற்கு இணை) இருக்கும். ஜாக்ரத நிலையிலிருந்து மன ஒருமைப்பாடானது யோகியை கனவு (ஸ்வப்ன) நிலைக்கு இட்டுச் சென்றதும் சுவாசத்தின் நீளம் 12 அங்குலமாகக் குறைகிறது. இம்முறையில் அவன் 13வது நிலையை அடையும்பொழுது நான்கு அங்குல சுவாசமே எஞ்சுகிறது. இந்த சுவாசம் மூக்கினுள்ளேயே சுழல்வதால் அதை மூக்கு நுனியில் உணர்வது கடினம். அந்த வினாடியிலிருந்து ஒளி கண் புருவங்களுக்கு மத்தியில் நிலைபெறுகிறது. தனது பயிற்சியின் இலட்சியத்தை யோகி அடைகிறான்.

இப்பொழுது சிவராஜயோகத்தை உங்களுக்கு நான் எடுத்துக் கூறுகிறேன்.

கும்மிருட்டில் யோகி தலையையும், உடலையும் நேராக வைத்து கண்களைத் திறந்து பார்வையை இருபுருவங்களுக்கு மத்தியில் செலுத்துகிறான். மானஸீகமாக மந்திரத்தை அவன் உச்சரித்துக் கொண்டே, சுவாசத்தை கட்டுப்படுத்தாமல் எந்த வினாடியிலும் ஒளி தோன்றலாம் என்ற எதிர்பார்ப்புடன் இருபுருவங்களுக்கு மத்தியில் தனது பார்வையை ஒருமைப்படுத்துகிறான். ஆழ்ந்த மன ஒருமைப்பாடு கீழ்க்காணும் பலனை ஏற்படுத்துகிறது.

முதலில் அவன் மனதின் அலைவுகளை வெல்லுகிறான். எவரோ தொலைவில் பேசுவதைக் கேட்கும் உணர்வை அவன் அடைகிறான். வார்த்தைகள் தெளிவில்லையானாலும் ஏதோ முணுமுணுப்பது போல் அவன் உணர்கிறான். இருப்பினும் அவன் மனம் எங்கோ இருப்பதால் அவன் அதற்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. உண்மையில் அந்த ஒலி வேறு எங்கிருந்தோ வெளியிலிருந்து வருவதில்லை. அவனது மனமே அந்த ஒலிகளை உண்டாக்குகிறது. மனம் தான் ஒலிவடிவத்தில் செயல்படுகிறது. தொடர்ந்து ஒலி ஒடுங்குகிறது. சினிமாத் திரையில் பார்ப்பது போல பல்வேறு தோற்றங்களை அவன் காண்கிறான். பல்வகை அழகுள்ள மலைகள், பல நிறங்கள் அளவுகளில் உள்ள கடல்கள், ஏரிகள், பல நிறங்கள் உள்ள மேகங்கள் போன்றவை கனவில்போல் அவன் முன் தோன்று கின்றன. மேகம் முதலில் அடர் கருமையாகக் காட்சி அளித்து பிறகு படிப்படியாக மறைகிறது. இவை காணற்கரிய காட்சிகள். ஆனால் இவை அனைத்தும் எண்ண உருவங்கள். மனம் உண்டாக்கிய வெவ்வேறு தோற்றங்கள். இந்த நிலையில்தான் யோகி புல்லாங்குழல், வயலின் போன்ற இசைக்கருவிகளின் இசையையும் கேட்கக் கூடும்.

இதன்பின் யோகி முற்றிலும் மாறுபட்டதொரு அனுபவத்திற்கு உள்ளாகிறான். திடீரென்று அவன் ஆழ்ந்த தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்கிறான். எப்பொழுது அவன் உறக்க நிலைக்கு உட்பட்டான் என்பது அவனது நினைவில் இல்லாவிட்டாலும் திடீரென்று விழித்தது அவனுக்கு நினைவிருக்கிறது. (உண்மை என்னவெனில் அவன் தூங்கவே இல்லை. அவனது மனம் முழுக்கவும் வெறுமையாயிற்று. அதுவரை செயல்பட்டுக் கொண்டிருந்த அதன்

செயல்பாடுகளை அவன் உணரவில்லை. உணர்வைத் திரும்பப் பெற்றதும், மீண்டும் திடீரென்று தனது இருப்பை அறிகிறான்). தனது ஆசனம் நேராக இருக்கிறதா, புருவமத்தியில் அவனது கண்கள் இன்னும் நிலைபெற்றிருக்கிறதா என்பதை சோதனை செய்ய விரும்புகிறான். இவற்றில் மாற்றமில்லை என்பதைத் தெரிந்து கொண்ட அவன் தாற்காலிக உணர்வு இழப்பானது யோகத்தின் ஒரு நிலை என்பதைத் தெரிந்து கொள்கிறான்.

அடுத்ததாக கண் புருவங்களுக்கு மத்தியில் ஒரு சூடான ஆணி குத்துவதைப் போன்றதொரு உணர்வு நிலையை அவன் அடைகிறான். பயிற்சியின் ஆரம்ப காலத்தில் வெறும் இந்த உணர்வு மட்டும் இருக்கும். ஆனால் பயிற்சியின் மேல் நிலையில் இதைத் தொடர்ந்து ஒளிகளும் தோன்றுகின்றன. சரியான உருவத்தில் ஒளி தோன்றுவதற்கு முன் பல நிலைகளைக் கடந்து செல்ல வேண்டியுள்ளது.

முதலில் மஞ்சள், மற்றும் சிவப்பு ஒளி தோன்றுகிறது. நடுவில் சிவப்பு ஒளியும், அதன் இருபுறத்திலும் ஜ்வாலை போன்ற மஞ்சள் ஒளியும் தோன்றுகின்றன. சில நாட்களுக்குப் பிறகு இந்த எல்லா நிறங்களும் மறைந்துபோய் சந்திரனைப் போன்ற உருவம் மற்றும் ஒளியுடன் நிலையான பிரகாசத்தை அவன் காண்கிறான். நாட்கள் செல்லச் செல்ல இந்த ஒளி அதிகரிக்கிறது. ஆரம்பத்தில் சந்தியாகால மங்கலான ஒளி முதல் இறுதியில் பிரகாசமான கண்ணைப் பறிக்கும் ஒளி வரை யோகி அமர்ந்திருக்கும் அறை ஒளிமயமாகிறது. இருப்பினும் இந்த நிலையில் அந்த அறையில் உள்ள பொருள்கள் எதுவும் தெரிவதில்லை. ஆனால் அங்கு இல்லாத பல பொருள்கள் தெரிய ஆரம்பிக்கின்றன. அவை வேகவேகமாக வந்து

மறைந்து அவனுக்குப் பற்பல காட்சிகளைக் காட்டுகின்றன.

இறுதியில் சிவபெருமானுடன் ஒன்றிப்பதற்கு முன் சிவராஜயோகி கடக்கவேண்டிய பதினாறு நிலைகளில் முதல் நான்கு நிலைகளே இதுவரை சொல்லப்பட்டது. ஒவ்வொரு நிலை அனுபவமும் நபருக்கு நபர் நாளுக்கு நாள் மாறுபடுகிறது. ஆனால் முக்கியமாக இவையே அந்த நிலைகள்.

முதலில், ஒருவன் தன்னைச் சுற்றி என்ன நிகழ்கிறது என்பதை உணர்கிறான். ஜாக்ரத் நிலையின் விழிப்பு பகுதியில் அவன் இருக்கிறான். பின்னர் விழிப்பு நிலையின் சுவப்னப் பகுதியில் காட்சிகள் வருகின்றன. விழிப்பு நிலையின் ஆழ்ந்த உறக்கப் பகுதியில் தூக்கத்தை வெல்லும் உணர்வு வருகிறது. விழிப்பு நிலையின் நான்காவது பகுதியில் ஒளித்தோன்றல் நிகழ்கிறது.

இதைப் போலவே ஸ்வப்ன, சுஷுப்தி நிலைகளும் அவற்றின் நான்கு உட்பிரிவுகளும் கடக்கப்பட வேண்டும். யோகி பதின்மூன்றாவது நிலைக்கு வருகையில் நான்காவது நிலையின் விழிப்பு பகுதியில் அவன் இருக்கிறான். சிவபெருமானின் உண்மையான தரிசனம் ஆத்மபோதம் உருவில் இப்பொழுது ஆரம்பமாகிறது. பதினாறு நிலைகளில் நான்காவது நிலையில் தோன்றிய ஒளிகளிலிருந்து சிவபெருமானின் இந்தத் தோற்றம் அவன்முன் தெரிகிறது. இந்த நிலையிலிருந்து மனம் தனது தனித்த செயலை இழந்து விடுகிறது. உள்ளே அது ஆத்மாவில் லயமாய் விடுகிறது.

பதிமூன்றாம் நாளில் தனது மானஸீக சுஷுப்தியிலிருந்து விழித்து எழுந்திருந்து நான்காவது நிலையினை உணர்வதில் பக்தனுக்கு இயற்கை

உதவுகிறது. பிரதோஷ தினத்தில் யோகத்தைப் பயிலும் யோகி விரைவில் சிவானுபவங்களைப் பெறுகிறான்.

மேற்சொன்னதைப் போலவே விநாயகர் வழிபாட்டின் சாந்திராயன நான்காம் நாளும் குறிக்கிறது. விழிப்பு நிலையின் நான்காம் பகுதியை ஒளிகள் தெரியும் இந்நிலை குறிக்கிறது. அஷ்டமி நாளான எட்டாம் நாளில் துர்க்கை அன்னை வழிபடப்படுகிறாள். சொப்பன நிலையின் நான்காவது நிலையை இது குறிக்கிறது. ஏகாதசியான பதினொன்றாம் நாள் சுஷுப்தி நிலையின் சுஷுப்தி பகுதியை குறிக்கிறது. இந்நிலையில் மனத்தைப் பற்றிய பிரக்ஞையே இல்லை. அந்தர்யாமியான கடவுளுடன் நேரடி தொடர்புக்கு இதுவே மிகவும் ஏற்ற தருணமாகும். அந்த நாளில் நாம் உபவாசமிருந்து பிரார்த்தனை செய்தால் நமது உடல் இயக்கங்களை மிகவும் குறைத்து, உள்ளே நம் இதயத்தில் உறையும் இறைவனின் தரிசனத்தைப் பெறலாம்.

இவ்விதமாக நாம் நமது பண்டிகை தினங்களை ஆராய்ந்தால் நமது முன்னோர் கர்மம், ஞானம், பக்தி போன்ற அனைத்தும் இணைந்த யோகத்தை வலியுறுத்துவதில் விசேஷ கவனம் செலுத்தினர் என்பதை அறிகிறோம்.

சிவானந்தாசிரமத்தில் அனைவரது ஆரோக்யம், நீண்ட ஆயுள், வெற்றி மற்றும் சுபிட்சத்திற்காக ஒரு விசேஷ ஹோமமும், விரிவான வழிபாடும் நடத்தப் படுகின்றன. உலகெங்கும் உள்ள பக்தர்களுக்கு புனித பிரசாதம் அனுப்பப்படுகிறது.

# 24. ஸத்ய நாராயண விரதம்

நாரத ரிஷியைப் பற்றி நீங்கள் அனைவரும் கேட்டிருப்பீர்கள். அவர் மூவுலகிலும் சஞ்சரிக்கும் ஒரு திரிலோக ஸஞ்சாரீ. ஒரு சமயம் அவர் பூவுலகிற்கு விஜயம் செய்தபொழுது அங்கே பெரும் துன்பம் நிலவியது. மனித குல இன்னலைப் போக்குவதற்கான உபாயம் அவருக்குத் தென்படவில்லை. உடனே அவர் ஸ்ரீமந் நாராயணனிடம் சென்று பூமியில் உள்ள பரிதாப நிலையைக் கூறினார்.

அப்பொழுது ஸ்ரீமந் நாராயணர் நாரதரிடம், "போற்றுதற்குரிய ரிஷியே! சங்கராந்தி அல்லது பௌர்ணமி அன்று மாலையில் ஜனங்கள் ஸத்ய நாராயண விரதத்தை அனுஷ்டிக்கட்டும். அவர்கள் ஸத்ய நாராயணனின் கதையைக் கேட்கட்டும். எல்லாத் துன்பங்களும் நீங்கும். இதில் ஐயமில்லை", என்றார்.

ரிஷி நாரதர் பூமிக்குத் திரும்பி வந்து ஸத்ய நாராயணனின் பெருமையை எங்கும் பரப்பினார். அன்று பகலில் எதையும் உண்ணாமல் பலர் விரதத்தைக் கடைப்பிடித்து அவர்கள் விரும்பியதை அடைந்தனர். எல்லோரும் இன்புற்று சுபிட்சமாயிருந்தனர்.

ஸத்ய நாராயண விரதம் இருப்பதற்கு அதிகம் செலவாகாது. அந்தக் கதையைச் சொல்லவரும் பண்டிதருக்கு நீங்கள் சிறிது தானம் அளித்து, எளியதொரு பிரஸாதத்தை விநியோகம் செய்ய வேண்டியதிருக்கும். கொஞ்சம் கோதுமைமாவும் சீனியும் இருந்தால் அதுவே பிரஸாதமாய்விடும். கொஞ்சம் தயிரும் பழமும் தேவைப்படும். பரம ஏழைகூட இந்த விரதத்தை அனுஷ்டிக்கலாம்.

வட இந்தியாவில் பலர் இந்த விரதத்தை அனுஷ்டிக்கின்றனர். முழு சடங்கையும் முடிக்க சுமார் மூன்று மணி நேரம் ஆகும். அது பொதுவாக கார்த்திகை, வைகாசி, ஆவணி, சித்திரை பௌர்ணமிகளிலும், சங்கராந்தி அன்றும் அனுஷ்டிக்கப்படுகிறது. அது அமாவாசைகளிலும் செய்யப்படலாம்.

இந்த விரதத்துடன் தொடர்புடைய ஐந்து கதைகள் சொல்லப்படுகின்றன. பகவான் நாராயணருடைய புகழ், அவரது பிரசாத மகிமை, இந்த விரதத்தை கடைப்பிடிப்பதால் விளையும் அமோக நன்மைகள் பற்றி அவை கூறுகின்றன. இந்தக் கதைகளை, சிரத்தை, பக்தி மற்றும் ஏகாக்கிர சித்தத்துடன் கேட்பவருக்கு மிகுந்த பலன் ஏற்படுகிறது. இதில் முதல் கதைதான் மேலே சொல்லப்பட்ட நாரதரின் கதை. மற்றக் கதைகள் உண்மை, வாக்குறுதி காத்தல் போன்ற நீதிகளை நமக்கு உணர்த்துகின்றன.

## 2. ஏழைப் பிராம்மணனின் கதை

ஓர் ஏழைப் பிராம்மணர் இருந்தார். அவர் பிச்சையேற்று உண்டு வந்தார். பகவான் நாராயணர் அவர் முன் வயதான அந்தணர் வடிவில் தோன்றி ஸத்ய நாராயண விரதத்தை அனுஷ்டித்தால் அவரது ஏழ்மை நீங்கி சுபிட்சத்தை அடைவார் என்று உறுதி கூறினார். பிராம்மணரும் அவ்வாறே செய்தார். அவரது ஆசைகள் அனைத்தும் நிறைவேறின.

## 3. விறகு வெட்டியின் கதை

அதே பிராம்மணர் இந்த விரதத்தை பெரிய அளவில் செய்து வந்தார். ஓர் ஏழை விறகுவெட்டி அந்த பிராம்மணரின் வளாகத்திற்கு தண்ணீர் அருந்துவதற் காகச் சென்றான். ஸத்ய நாராயண கதை நடந்து

கொண்டிருந்தது. கதை சொல்பவரின் திறமையால் ஈர்க்கப்பட்ட விறகுவெட்டி கீழே அமர்ந்து கதையைக் கருத்துடன் கேட்டான். தன் வீட்டில் அந்த விரதத்தைக் கடைப்பிடிக்க அவன் விருப்பம் கொண்டான். கொஞ்சம் பிரஸாதத்தை அவன் ஏற்று உண்டான்.

பிறகு அவன் சந்தைக்குச் சென்று தனது விறகுகளை விற்றான். தனது விறகுகளுக்கு வழக்கமான தொகையைக் காட்டிலும் அவன் இரண்டு மடங்கு தொகையைப் பெற்றான். உடனே அந்த விரதத்திற்கு வேண்டிய பொருள்களை வாங்கி தனது குடும்பத்தாருடன் தீவிர பக்தி சிரத்தையுடன் விரதத்தை அனுஷ்டித்தான். அவனது ஆசைகள் யாவும் நிறைவேறின. இப்புவியில் கிட்டும் அனைத்தையும் அவன் பெற்று மகிழ்ந்தான். மரணத்திற்குப் பின் உண்மை ஒன்றே உறையும் சத்யலோகத்தை அவன் சென்றடைந்தான்.

## 4. ஒரு வணிகனின் கதை

ஒரு சமயம் உல்கமுகன் என்னும் மன்னன் அரசாண்டு வந்தான். அவன் ஸத்யநாராயண பக்தன். அரசியும் பக்தி உடையவள். ஒருநாள் அவர்கள் உபவாசமிருந்து புனித பத்ரசீலக் கரையில் ஸத்ய நாராயண விரதத்தைக் கடைப்பிடித்தனர்.

சாது என்ற பெயர் கொண்ட ஒரு வணிகன் அரசனிடம் வந்து அவன் என்ன செய்து கொண்டிருக்கிறான் என்று கேட்டான். ஸத்யநாராயண விரதத்தைப் பற்றி அரசன் அவனுக்கு விளக்கிக் கூறினான். சாது வீட்டிற்குத் திரும்பியதும் தான் அரசனிடம் கேட்டவாறே ஸத்யநாராயண விரதத்தின் மகிமையை மனைவி லீலாவதியிடம் எடுத்துக் கூறினான். அதன் பின் அவர்களுக்கு ஒரு குழந்தை



பகவான் விஷ்ணு

வேண்டி இருவரும் அந்த விரதம் இருக்கத் தீர்மானித்தனர். விரைவிலேயே அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. கலாவதி என்று அவர்கள் அதற்குப் பெயரிட்டனர்.

தனது மகளுக்குக் கலியாணம் ஆகும் வரை அந்த விரதத்தை ஒத்திப்போடுவது என்று சாது தீர்மானித்தான். கலாவதியின் திருமணம் நிகழ்ந்தது. ஆனால் சாது தனது வாக்குறுதியை மறந்தே விட்டான். சிறிது காலத்திற்குப் பின் தனது மகனுடன் அவன் வியாபார நிமித்தம் அயல்நாடுகளுக்குச் சென்றான்.

சாதுவிற்கு அவனது வாக்குறுதியை நினைவூட்ட அதுவே தருணம் என்று பகவான் திருவுள்ளம் கொண்டார். ஓர் இரவில் ரத்தினசர்புரி என்ற இடத்தில் அவனது குழுவினருடன் அரசாங்கக் காவலர்களால் அவன் திடீரென்று கைது செய்யப்பட்டான். அவர்களைத் திருடர்கள் என்று காவலர்கள் சந்தேகித்தனர். அதே வேளையில் சாதுவின் ஊரில் கள்வர்கள் அவனது பொருள்களைக் களவாடினர்.

இதற்கிடையில் லீலாவதியும் கலாவதியும் தெருவில் பிச்சையேற்று பரிதாப வாழ்க்கை வாழ நேரிட்டது. ஒரு நாள் கலாவதி பிச்சையெடுப்பதற்காக வெளியில் சென்ற பொழுது, ஒரு கோவிலிலிருந்து ஸத்ய நாராயண பெருமாளின் பிரஸாதத்தைப் பெற்றாள். தனது தாயாரிடம் அவள் வந்து அவர்களும் அந்த விரதத்தை கடைப்பிடிக்க வேண்டும் என வேண்டினாள். அவர்கள் விரதத்தை அனுஷ்டித்து ஸத்ய நாராயணப் பெருமாளை வணங்கினர்.

அதே தினத்தில் சாதுவும் குழுவினரும் எந்தத் திருட்டிலும் ஈடுபடாதவர்கள் என்றும், அவர்களை உடனடியாக விடுதலை செய்ய வேண்டும், இன்றேல்

தானும் தனது சுற்றத்தாரும் அழிந்து போவார்கள் என்று ரத்னசர்புரி மன்னன் கனவு கண்டான். உடனேயே அரசன் சாதுவையும் அவனது குழுவினரையும் சிறையிலிருந்து விடுவித்து அவர்களது பொருளுக்கான மதிப்பின் இரண்டு பங்கு தொகையையும் கொடுத்து அனுப்புவித்தான்.

தனது கிராமத்தை நோக்கி சாது திரும்பி வரும் வழியில், பகவான் ஸத்ய நாராயணர் ஒரு துறவியின் வேடத்தில் அவன் முன் தோன்றி அவனது படகில் என்ன இருக்கிறது என்று கேட்டார். துறவி தன்னிடம் பணம் கேட்பார் என்று சாது நினைத்தான். படகில் வெறும் இலைக் கட்டுகள்தான் இருக்கின்றன என்று பதில் சொன்னான்.

"உன் வார்த்தைகள் உண்மையாகும், வியாபாரியே", என்று துறவி பதில் சொன்னார்.

அன்று இரவு தனது படகில் உள்ள பொருள்களை வழக்கமான முறையில் சோதனையிடுகையில், எல்லா ஆபரணங்களும் இலைகளாக மாறியிருப்பதை சாது கண்டான். துறவியிடம் தான் பொய் பேசியதால் வந்த விளைவு அது என்பதை அவன் உணர்ந்தான். உடனே அவன் துறவியைத் தேடிச் சென்று அவரிடம் மன்னிப்பு கேட்டான்.

"நீ ஸத்யநாராயண விரதம் அனுஷ்டிப்பதை விட்டு விட்டாய்", என்று துறவி அவனிடம் எச்சரித்தார். பிறகு அவர் தனது சுயரூபத்தை அவனுக்குக் காட்டி, அவனுக்கு ஆறுதல் கூறி மறைந்து போனார்.

தனது படகிற்குத் திரும்பி வந்த சாது தனது நகைகள் திரும்பவும் பத்திரமாக இருப்பதை அங்கே கண்டான். மிகுந்த பக்தி சிரத்தையுடன் பகவான் ஸத்ய நாராயணரை அவன் வழிபட்டான்.

ஐந்து நாட்களுக்குப் பிறகு சாது தனது ஊரைப் போய்ச் சேர்ந்தான். தான் வந்து சேர்ந்ததை தனது மனைவிக்கும் மகளுக்கும் அவன் தெரிவிக்க விரும்பினான். அந்த விஷயத்தை தூதன் கொண்டு சென்ற போது, லீலாவதியும் கலாவதியும் ஸத்யநாராயண கதையைக் கேட்டுக் கொண்டிருந்தனர். தங்களது வழிபாட்டை முடித்ததும் அவர்கள் சாதுவைக் காணச் சென்றனர். ஆனால் பகவானுடைய பிரஸாதத்தை வாங்காமல் சென்று விட்டனர்.

பிரஸாதம் வாங்கிச் செல்லாதது குற்றம் என்பதை பகவான் நாராயணர் அவர்களுக்கு உணர்த்த விரும்பினார். மருமகன் மற்றும் அனைத்துச் செல்வத்துடன் படகு கவிழ்ந்துவிட்டது. தனது உயிருக்காக மருமகன் மன்றாடினான். கரையில் இருந்த சாது, பகவானை வேண்டிப் பிரார்த்தித்தான். ஆகாயத்தில் ஓர் அசரீரி கேட்டது: "கலாவதி எனது பிரஸாதத்தை ஏற்கவில்லை. எனவே இது நிகழ்ந்தது." கலாவதி உடனே தன் வீட்டிற்குத் திரும்பிச் சென்று பிரஸாதத்தை உட்கொண்டாள். திரும்பி வந்த அவளது முகத்தில் மகிழ்ச்சி தாண்டவாடியது. அதிருஷ்டவசமாக தனது தந்தையும் கணவனும் பகவான் ஸத்யநாராயணரின் அருளால் காப்பாற்றப்பட்டதைக் கண்டாள். படகும் சொத்தும் ஆச்சரியகரமாக மீட்கப்பட்டன. எல்லோரும் மகிழ்ந்தனர். தனது பயணத்தில் நிகழ்ந்தது அனைத்தையும் சாது கூறி, எவ்விதம் ஆபத்துகளிலிருந்து பகவான் தன்னைக் காத்து அருளினார் என்பதையும் விளக்கினான்.

அதன் பிறகு பௌர்ணமி அன்றும் சங்கராந்தி அன்றும் சாதுவும் லீலாவதியும் ஒழுங்காக ஸத்ய நாராயண விரதத்தைச் செய்து வந்தனர். மகிழ்ச்சியுடன்

வாழ்ந்தனர். பகவான் நாராயணரின் பேரின்ப நிலையை அவர்கள் அடைந்தனர்.

### 5. துங்கத்வஜ மன்னனின் கதை

ஒருநாள் துங்கத்வஜ மன்னன் வேட்டையாடச் சென்றான். வெகுதூரம் நடந்து சென்ற பின் அவன் களைப்படைந்தான். ஓர் ஆலமரத்தின் நிழலில் அவன் அமர்ந்தான். ஆலமரத்துக்கருகில் மாடு மேய்க்கும் சில சிறுவர்கள் ஸத்ய நாராயண விரத பூஜையை செய்து கொண்டிருந்தனர். மரத்தடியில் ஒரு மன்னன் தங்கியிருக்கிறான் என்பது சிறுவர்களுக்கு தெரிய வந்தது. அவர்களில் ஒருவன் கொஞ்சம் பிரஸாதத்தை மரியாதையுடன் அரசன் முன் வைத்தான்.

அந்த விரதத்தில் பங்கு கொள்ளவோ, பகவானை நமஸ்காரம் செய்யவோ, அரசன் விரும்பவில்லை. அந்த பிரஸாதத்தையும் அவன் ஏற்கவில்லை. மாறாக, அதை அவன் அலட்சியமாகப் பார்த்து விட்டு, தனது தலைநகருக்குத் திரும்பினான்.

பகவான் அரசனுக்கு ஒரு பாடம் புகட்ட விரும்பினார். அரசனது மகன்களும், மகள்களும் மரணமடைந்தனர். மற்றும் அவனது சொத்து முழுவதும் அழிந்து போயிற்று என்ற செய்தி அவனுக்கு எட்டியது. பகவானையும் அவரது பிரஸாதத்தையும் தான் அவமதித்ததால் ஏற்பட்ட விளைவுகளே அவை என அவனது உள்ளுணர்வு சுட்டிக் காட்டியது. தனது தவறுக்காக அவன் பெரிதும் வருந்தினான். கனத்த இதயத்துடன் சிறுவர்கள் வழிபட்ட அந்த ஆலமரத்தடிக்கு அவன் சென்றான். இப்பொழுது அவனே மிகுந்த பக்தி சிரத்தையுடன் பூஜையைச் செய்தான். அரசன் மீது பகவான் ஸத்ய நாராயணன் தனது கருணையைப் பொழிந்தார். தனது இழந்த சொத்தையும் மக்களையும்

அவன் திரும்பவும் பெற்றான். அதன்பின் அரசன் ஒழுங்காக பகவானை வழிபட்டு ஆனந்தமாக வாழ்ந்தான்.

தேவர்களாலும் செய்யப்படும் இந்த விரதத்தை யார் மிகுந்த பக்தி, சிரத்தை மற்றும் சரணாகதி பாவத்துடன் செய்கிறார்களோ, பக்தி, சிரத்தையுடன் யார் பகவான் ஸத்ய நாராயணரது கதையைக் கேட்கிறார்களோ, பூஜையில் யார் பங்குகொண்டு பிரஸாதத்தையும் உட்கொள்கிறார்களோ அவர்கள், நிச்சயமாக செல்வம், சௌபாக்கியம், சந்தோஷத்தை அடைகிறார்கள். சம்சாரச் சகதியிலிருந்து அவர்கள் விடுவிக்கப்பட்டு மரணத்தின் பிடியிலிருந்து மீட்கப்படுகிறார்கள். இறுதியில் அவர்கள் உண்மையில் உறைகிறார்கள்.

கலியுகத்தில் ஸத்ய நாராயண விரதத்தின் மூலம் ஒருவன் பகவான் ஹரியை வழிபட்டு இன்பம், அமைதி, செழிப்பை அடைகிறான். நமது புராணங்களில் சொல்லப்பட்டுள்ள உண்மை இதுதான்.

## 25. சிவராத்திரி

இது (பிப்ரவரி - மார்ச்) பல்குன மாதத்தின் தேய்பிறை 13வது (அல்லது 14ம் நாள்) நாளன்று வருகிறது. 'சிவனுடைய ராத்திரி' என்பது இதன் பொருள். சடங்குகள் குறிப்பாக இரவில் நடைபெறு கின்றன. சிவபெருமானைக் குறித்து நடைபெறும் விழா இது. இந்த நாளில்தான் பார்வதியுடன் சிவபெருமானின் திருமணம் நடைபெற்றது.

இந்த நாளன்று ஜனங்கள் கடும் உபவாசம் மேற் கொள்கின்றனர். சில பக்தர்கள் ஒரு சொட்டுத் தண்ணீர் கூட அருந்துவதில்லை. இரவு முழுவதும் அவர்கள் கண் விழிக்கின்றனர். இரவு முழுவதும் சிவலிங்கமானது பால், தயிர், தேன், பன்னீர் போன்றவற்றால் ஒவ்வொரு மூன்று மணி நேரத்திற்கொரு முறை அபிஷேகம் செய்யப்படுகிறது. இதற்கிடையில் 'ஓம் நமச்சிவாய' மந்திர பாராயணம் தொடர்ந்து நிகழ்கிறது. வில்வ இலை அர்ச்சனை சிவலிங்கத்திற்குச் செய்யப்படுகிறது. லக்ஷ்மி வசிப்பதால் வில்வ இலைகள் மிகவும் புனிதமானவை.

புஷ்பதந்தரின் சிவமஹிம்னாஸ்தோத்திரம், ராவண னின் சிவதாண்டவ ஸ்தோத்திரம் போன்ற சிவஸ்தோத்திரங்கள் மிகுந்த பக்தி சிரத்தையுடன் பாடப்படுகின்றன. ஜனங்கள் பஞ்சாக்ஷர மந்திரமான 'ஓம் நமச்சிவாய'த்தை உச்சரிக்கின்றனர். சிவராத்திரி யன்று பூரண பக்தி மற்றும் மன ஒருமைப்பாட்டுடன் யார் சிவநாமங்களைச் சொல்கிறார்களோ அவர் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறார். 'அவர் சிவலோகத்தை அடைந்து அங்கு ஆனந்தமாக இருக்கிறார். ஜனன மரணச் சக்கரத்திலிருந்து அவர் விடுவிக்கப்படுகிறார். சிவன் கோவில்கள் இருக்கும் இடங்களில் யாத்திரிகர்கள் ஒன்று கூடுகிறார்கள்.

## சித்திரபானு மன்னனின் கதை

மகாபாரதத்தின் சாந்தி பர்வத்தில் அம்புப் படுக்கையில் படுத்தவாறு பீஷ்மர் தர்மத்தைப் பற்றிக் கூறுகையில், மன்னன் சித்திரபானு மகா சிவராத்திரியை அனுஷ்டித்ததைக் கூறுகிறார். கீழ்க்கண்டவாறு கதை உள்ளது :

இக்ஷ்வாகு குலத்துதித்த மன்னன் சித்திரபானு ஜம்புத்வீபத்தை ஆட்சி புரிகையில் ஒரு சமயம் மஹா சிவராத்திரியன்று தனது மனைவியுடன் உபவாசம் அனுஷ்டித்தான். அஷ்டாவக்கிர முனிவர் மன்னனின் தர்பாருக்கு விஜயம் செய்தார்.

"மன்னவா! இன்று ஏன் விரதம் அனுஷ்டிக்கிறாய்?" என்று முனிவர் கேட்டார்.

ஏன் என்பதை மன்னன் சித்திரபானு விவரித்தான். அவனது பூர்வஜன்ம விருத்தாந்தத்தை நினைவு கூரும் ஆற்றல் அவனிடம் இருந்தது.

"முனிவரே! என் முற்பிறவியில் நான் ஒரு வேடனாயிருந்தேன். எனது பெயர் சுச்வரன். பறவைகளையும் விலங்குகளையும் கொன்று விற்பதுவே எனது தொழில். ஒருநாள் காட்டில் விலங்குகளைத் தேடி அலைந்து கொண்டிருந்தேன். இரவின் இருட்டில் அகப்பட்டுக் கொண்டேன். வீட்டிற்குத் திரும்ப முடியாமல், ஒரு மரத்தில் ஏறி இருக்க இடம் தேடினேன். அது வில்வமரம். அன்று ஒரு மானை நான் கொன்றேன். ஆனால் அதை வீட்டிற்குக் கொண்டு செல்ல என்னால் முடியவில்லை. எனவே அதைக் கட்டி மரத்தின் ஒரு கிளையில் தொங்கவிட்டேன். பசியும் தாகமும் என்னை வாட்டியதால் இரவு முழுவதும் நான் விழித்திருந்தேன். பசியால் வாடி என்னை எதிர்பார்த்துக் காத்திருந்த எனது மனைவி, மக்களை நினைந்து நான் கண்ணீர் விட்டேன்.

நேரத்தைக் கழிப்பதற்காக அந்த வில்வ மரத்தின் இலைகளை ஒவ்வொன்றாகப் பறித்து கீழே தரையில் போட்டுக் கொண்டிருந்தேன்.

பொழுது விடிந்தது. நான் வீட்டிற்குத் திரும்பி, மானை விற்றேன். எனக்கும் என் குடும்பத்தாருக்கும் கொஞ்சம் உணவு வாங்கிக் கொண்டேன். நான் என் உபவாசத்தை முடிக்க இருக்கும் தறுவாயில் யாரோ புதிய நபர் ஒருவன் என்னிடம் வந்து பிச்சைகேட்டான். அவனுக்கு முதலில் உணவளித்து பிறகு நான் சாப்பிட்டேன்.

மரணத் தறுவாயில், நான் இரண்டு சிவதூதர்களைக் கண்டேன். என்னை சிவலோகத்திற்கு இட்டுச் செல்வதற்காக அவர்கள் கீழே அனுப்பப்பட்டிருந்தார்கள். சிவராத்திரி இரவன்று நான் செய்த என்னையறியாத பூஜையின் பலனை உணர்ந்தேன். அந்த மரத்தினடியில் ஒரு சிவலிங்கம் இருந்தது என்று சொன்னார்கள். நான் பறித்துப் போட்ட வில்வ இலைகள் லிங்கத்தின் மீது விழுந்தன. என் குடும்பத்தாரை நினைத்து நான் விட்ட கண்ணீர் அந்த லிங்கத்தின் மீது விழுந்து அதைக் கழுவியது. அன்று பகலும் இரவும் நான் உண்ணாதிருந்தேன். இவ்வாறு நான் என்னையுமறியாது இறைவனை வழிபட்டேன்.

நான் இறைவன் சன்னிதானத்தில் வசித்தேன். வெகுகாலம் தெய்வீக இன்பத்தை அனுபவித்தேன். இப்பொழுது நான் சித்திரபானுவாகப் பிறந்திருக்கிறேன்''.

## விரதத்தின் மறை பொருள்

மேற்காணும் கதையின் உட்பொருளை சாஸ்திரி, ஆத்மநாதன் இருவருக்கிடையேயான உரையாடலாக மறை நூல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

சாஸ்திரி : அது ஓர் உவமானம். அந்த வேடன் சண்டையிட்ட மிருகங்கள் காமம், குரோதம், பேராசை, மோகம், பொறாமை, வெறுப்பு போன்ற குணங்களாகும். காடு அடிமனம், புத்தி, ஆணவம், உணர் மனம் என்ற நான்குபிரிவில் உள்ள மனத்தைக் குறிக்கிறது. இந்த மனத்தில்தான் இந்த கொடிய விலங்குகள் சுதந்திரமாக சஞ்சரிக்கின்றன. அவை கொல்லப்பட வேண்டும். நமது வேடன் அவற்றைத் துரத்தினான். ஏனெனில் அவன் ஒரு யோகி. நீங்கள் ஒரு யோகியாகத் திகழ விரும்பினால் இத்தகைய தீய சுபாவங்களை வென்றாக வேண்டும். இந்தக் கதையில் வரும் வேடனின் பெயர் உங்களுக்கு நினைவிருக்கிறதா?

ஆத்மநாதன் : ஆமாம், அவன் பெயர் ஸுஸ்வரன்.

சாஸ்திரி : அது சரி. 'இனிய குரல்' என்பது அதன் பொருள். அந்த வேடனின் குரல் இனிமையானதாக இருந்தது. ஒருவன் யமம், நியமத்தைப் பழகி, தனது தீய சுபாவங்களை வெல்வானேயாகில் அவன் யோகியின் சில புறச் சின்னங்களைப் பெற்று விளங்குவான். லகுவான உடல், ஆரோக்யம், உறுதி, தெளிவான தோற்றம், இனிய குரல் ஆகியவை முதல் சின்னங்களாகும். ஸ்வேதாஸ்வ்ர உபநிஷதத்தில் இந்த நிலை விரிவாகப் பேசப்படுகிறது. வேடன் அல்லது யோகி பல வருடங்களாக யோகத்தைப் பயின்று முதல் நிலைய அடைந்திருக்கிறான். எனவே அவனுக்கு ஸுஸ்வரன் என்ற பெயர் தரப்பட்டிருக்கிறது. அவன் எங்கே பிறந்தான் தெரியுமா?

ஆத்மநாதன் : ஆம், அவன் காசியில் பிறந்தான்.

சாஸ்திரி : யோகிகள் ஆக்ஞா சக்கரத்தை 'வாராணசி' என்று அழைக்கின்றனர். இது இரண்டு புருவங்கட்கு மத்தியில் உள்ள இடமாகும். அது இடை, பிங்களை, ஸுஷும்னை என்ற மூன்று நாடிகளின் (நரம்பு ஓட்டங்கள்) சங்கமமாகக் கருதப்படுகிறது. சாதகன் இந்த இடத்தில் மனத்தை ஒருமைப்படுத்துமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறான். அது அவனது ஆசைகளையும், கோபம் போன்ற தீய குணங்களையும் வெல்வதற்குப் பெரிதும் உதவுகிறது. அங்குதான் அவன் உள்ளே தெய்வீக ஒளியைத் தரிசிக்கிறான்.

ஆத்மநாதன் : விறுவிறுப்பாக இருக்கிறதே! வில்வமரத்தில் அவன் ஏறுதல் மற்றும் அவனது பல்வேறு பூஜை முறைகளை எவ்வாறு நீங்கள் விளக்குகிறீர்கள்?

சாஸ்திரி : நீங்கள் வில்வ இலையை எப்பொழுதாவது பார்த்ததுண்டா?

ஆத்மநாதன் : ஒரு காம்பில் அதற்கு மூன்று இலைகள் உள்ளன.

சாஸ்திரி : மரம் முதுகுத் தண்டைக் குறிக்கிறது. இலைகள் முப்பிரிவானவை. அவை சிவபெருமானின் முக்கண்களைக் குறிக்கும். அதுபோல சந்திரன், சூரியன், அக்கினி ஆகியவற்றின் செயற்களங்களான இடை, பிங்களை, ஸுஷும்னை நாடிகளை அவை குறிக்கிறது. அடியில் உள்ள நரம்பு மையமான மூலாதாரத்திலிருந்து ஆக்ஞா சக்ரத்திற்கு பாம்பு ஆற்றலான குண்டலினி சக்தி மேலெழும்புவதையே மரமேறுதல் குறிக்கிறது. அது யோகியின் வேலை.

ஆத்மநாதன் : ஆமாம், நான் குண்டலினி போன்ற உடலின் பல்வேறு மனோ மையங்களைப் பற்றிக்

கேள்விப்பட்டிருக்கிறேன். மேற்கொண்டு சொல்லுங்கள், மேலும் தெரிந்து கொள்ள ஆவலாயுள்ளேன்.

சாஸ்திரி : நல்லது. யோகி தியானத்தை ஆரம்பிக்கும் பொழுது விழிப்பு நிலையில் இருந்தான். தான் கொன்ற பறவைகள் மற்றும் மிருகங்களை அவன் ஒரு மூட்டையாகக் கட்டி ஒரு மரக்கிளையில் தொங்கவிட்டு அங்கே ஓய்வெடுத்தான். அது அவன் அவனது எண்ணங்களை முழுமையாக வென்று அவற்றை செயலற்றதாக்கி விட்டான் என்பதைக் காட்டுகிறது. யம, நியம, பிரத்யாஹாரம் போன்ற படிகளை அவன் கடந்துவிட்டான். மரத்தில் அவன் தியானத்தையும் மன ஒருமைப்பாட்டையும் பயின்றான். அவனுக்குத் தூக்கம் வந்ததானது, அவனுக்கு சுய உணர்வு அகன்று ஸுஷுப்தி நிலைக்குச் சென்றதைக் காட்டுகிறது. எனவே அவன் விழித்திருக்க முடிவு செய்தான்.

ஆத்மநாதன் : இது எனக்கு தெளிவாகிறது. நீங்கள் உண்மையிலேயே அழகாக விளக்குகிறீர்கள். ஆனால் அவன் ஏன் தன் மனைவி, குழந்தைகளுக்காக அழுதான்?

சாஸ்திரி : அவனது மனைவி, குழந்தைகள் வேறு எவருமல்ல, உலகம்தான். இறையருளை வேண்டும் ஒருவன் அன்பின் அவதாரமாக ஆகிவிட வேண்டும். அனைத்தையும் அணைக்கும் இரக்கம் அவனிடம் இருக்க வேண்டும். அவன் அழுதது பரந்த அவனது அன்பைக் குறிக்கிறது. யோகத்திலும், இறை அருளின்றி ஒருவனுக்கு ஞானம் கிட்டாது. பரந்த அன்பு இருந்தாலன்றி, ஒருவனால் அந்த அருளைப் பெற முடியாது. ஒருவன் தன்னையே எங்கும் காண வேண்டும். அதற்கு ஆரம்ப கட்டமாக ஒருவன் தன் மனத்தை படைக்கப்பட்ட அனைத்து உயிரின் மனத்துடன் ஒன்றித்துப் பழக வேண்டும். அதுதான் சகோதரத்துவம் அல்லது

இரக்கமாகும். அதன்பின் ஒருவன் மனத்தின் வரம்பு களைக் கடந்து ஆத்மனில் லயிக்க வேண்டும். அது சமாதி நிலையில்தான் கிட்டுகிறது, அதற்கு முன்பு அல்ல.

ஆத்மநாதன் : அவன் ஏன் வில்வ இலைகளைப் பறித்துக் கீழே போட்டான்?

சாஸ்திரி : அவனுக்கு வேறு புற சிந்தனை எதுவும் இல்லை என்பதைக் காட்டவே கதையில் அது சொல்லப்படுகிறது. தான் என்ன செய்கிறோம் என்பதைக் கூட அவன் உணராமல் இருந்தான். அவனது செயல்கள் அனைத்தும் மூன்று நாடிகளில் அடங்கிவிட்டன. இலைகள் இம் மூன்று நாடிகளைக் குறிக்கின்றன. அவன் ஸுஷுப்தி நிலைக்குப் போவதற்கு முன்னர் இரண்டாவது நிலையான கனவு நிலையிலிருந்தான்.

ஆத்மநாதன் : இரவு முழுவதும் அவன் விழித்ததாகச் சொல்லப்படுகிறதே.

சாஸ்திரி : ஆம், அது அவன் ஸுஷுப்தி நிலையை வெற்றிகரமாகக் கடந்துவிட்டான் என்பதைக் குறிக்கிறது. பொழுது விடிவது துரீயம் அல்லது உணர்வு கடந்த நிலையாம் நான்காவது நிலை வருவதைக் குறிக்கிறது.

ஆத்மநாதன் : அவன் கீழே இறங்கி லிங்கத்தைத் தரிசித்ததாகச் சொல்லப்படுகிறதே. அதன் பொருள் என்ன?

சாஸ்திரி : அது துரீய நிலையில் அவன் சிவலிங்கத்தை அதாவது அக ஒளிகள் மூலம் சிவபோதம் பெற்றான் என்பதைக் காட்டுகிறது. அதாவது அவனுக்குக் கடவுள் காட்சி கிட்டியது. காலப்போக்கில் அவனுக்கு சிவன் யாண்டும் இருக்கும் மேலான நிலை கிட்டும் என்பதன் அறிகுறி அது.

ஆத்மநாதன் : எனவே நீங்கள் சொல்வதிலிருந்து ளிகளைக் காண்பது இறுதி நிலை அல்ல என்பது தெரிகிறது. இல்லையா?

சாஸ்திரி : இல்லை, அது ஒரு படியே, கஷ்டமானதும் கூட. கதை எப்படித் தொடர்கிறது என்பதைப் பாருங்கள். அவன் வீட்டிற்குப் போய் யாரோ ஒருவனுக்கு உணவளிக்கிறான். முன்பின் தெரியாதவன்தானே புதியவன் என்பது! புதிய நபராக மாற்றப்பட்ட வேடனேதான் அந்தப் புதியவன்.

முந்தைய இரவில், அவனால் இல்லாதாக்கப்பட்ட விருப்பு வெறுப்புகளே உணவு ஆகும். ஆனால் அந்த உணவு முழுவதையும் அவனே உண்ணவில்லை. கொஞ்சம் மீதமிருந்தது. அதனால்தான் அவன் அரசன் சித்திரபானுவாக மீண்டும் பிறக்க வேண்டி நேரிட்டது. சிவலோகத்திற்குப் போவதால் மட்டும் (ஸாலோக்யம்). இதைத் தடுக்க முடியாது. ஸர்லோக்யத்தினைத் தவிர வேறு நிலைகளும் உள்ளன. ஸாமீப்யம், ஸாரூப்யம், இறுதியில் ஸாயுஜ்யம் ஆகியவையே அவை. வைகுண்டத்திலிருந்து திரும்பிய ஜய, விஜயர்களைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்களே!

ஆத்மநாதன் : இப்பொழுது நான் புரிந்து கொண்டேன்.

## சிவபெருமானின் வாக்குறுதி

படைப்பு முடிந்ததும் சிவனும் பார்வதியும் கயிலாய மலையின் உச்சியில் வசிக்கச் சென்றனர். "நாதா! உங்களை வழிபடுவதில் எந்த வழிபாடு உங்களுக்கு மிகவும் உகந்தது?", என்று கேட்டாள் பார்வதி.

"பல்குன மாதத்தின் தேய்பிறையின் 14ம் நாளான அமாவாசையே எனக்கு மிகவும் உகந்த நாளாகும். அது

சிவராத்திரி என்னப்படுகிறது. சடங்குகளுடன் கூடிய ஸ்நானம், மற்றும் தீப, தூப நைவேத்தியத்தைக் காட்டிலும் அன்று பக்தர்கள் உபவாசம் இருப்பது தான் எனக்கு அதிகம் மகிழ்ச்சியைத் தருகிறது.

பக்தன் பகலில் தீவிர ஆன்மீக கட்டுப்பாட்டினைக் கடைப்பிடிக்கிறான். இரவின் அடுத்தடுத்த மூன்று மணிநேர நான்கு பகுதிகளில் நான்கு வகையாக என்னை வழிபடுகிறான். விலையுர்ந்த நகைகளையும், மலர்களையும்விட வில்வ இலைகளை எனக்கு அர்ப்பணம் செய்வது சாலச் சிறந்தது. இரவின் முதற் பகுதியில் பாலினாலும், இரண்டாம் பகுதியில் தயிரினாலும், அடுத்த பகுதியில் தூய வெண்ணெய்யினாலும், இறுதியில் நான்காவது பகுதியில் தேனினாலும் என் பக்தன் என்னை அபிஷேகம் செய்ய வேண்டும். மறுநாள் காலையில் அவன் அந்தணர்களுக்கு முதலில் உணவளிக்க வேண்டும். பின் குறிப்பிட்ட சடங்குகளைச் செய்த பின் உபவாசத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும். பார்வதி! இந்த விரதத்துடன் தூய்மையில் ஒப்பிடக் கூடியது வேறு எதுவும் கிடையாது'', என்று சிவபெருமான் சொன்னார்.

சிவபெருமான் சொன்னதைக் கேட்ட பார்வதி மிகவும் பரவசமானாள். அவள் தன் தோழியரிடம் இதைக் கூற, அவர்கள் பூமியை ஆண்ட அரசர்களிடம் இதைத் தெரிவித்தார்கள். இப்படித்தான் சிவராத்திரி மகிமை உலகெங்கும் பிரபலமாயிற்று.

மனிதனைப் பாதிக்கும் இரண்டு இயற்கையான சக்திகள் ரஜஸும், தமஸுமாகும். விருப்புடன் கூடிய செயல் ரஜஸ் ஆகும். சோம்பல் தமஸ் ஆகும். சிவராத்திரி விரதம் இவ்விரண்டையும் வெல்லுவதாகும். அன்றைய நாள் முழுவதும் இறைவன் பாதத்தில் கழிக்கப்படுகிறது. தொடர்ந்து பக்தன் வழிபாடு செய்வதானது

வழிபாட்டிடத்தில் பக்தன் இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது. இடம் விட்டு இடம் செல்லுதல் கட்டுப் படுத்தப்படுகிறது. ரஜஸிலிருந்து உதித்த காமம், கோபம், பொறாமை போன்ற குணங்கள் புறக்கணிக்கப்பட்டு அடக்கப்படுகின்றன. இரவு முழுவதும் பக்தன் விழித்திருப்பதால் அவன் தமஸை வென்றவனாகிறான். தொடர்ந்த விழிப்புக்கு மனம் உட்படுத்தப்படுகிறது. ஒவ்வொரு மூன்று மணி நேரத்திற்கொருமுறை சிவலிங்க வழிபாடு செய்யப்படுகிறது. சிவராத்திரி ஒரு பூரண விரதம் ஆகும்.

சிவனை அபிஷேகம் செய்வது புற வழிபாடு ஆகிறது. ஒளிவடிவமாக சிவன் கருதப்படுகிறார். இதைத் தான் சிவலிங்கம் குறிக்கிறது. தவத்தீயால் அவர் ஜொலிக்கிறார். எனவே அவர் குளிர்ந்த நீரினால் அபிஷேகம் செய்யப்படுகிறார். சிவலிங்கத்தை அபிஷேகம் செய்கையில், "இறைவா! தண்ணீர், பால் போன்றவற்றால் நான் உம்மை அபிஷேகம் செய்கிறேன். நீர் என்னை ஞானப் பாலினால் அபிஷேகம் செய்வீராக! எனது பாவங்கள் அனைத்தை யும் நீர் அகற்றுவீராக. என்னைச் சுட்டெரிக்கும் உலகாயதத் தீ உமதருளால் ஒட்டுமொத்தமாக அகற்றப் படுமாக. இரண்டற்ற ஒரே பரம்பொருளான உம்முடன் நான் ஐக்கியமாவேனாக," என்று பக்தன் பிரார்த்திக்கிறார்.

சிவானந்தாசிரமத்தில் கீழ்க்காணும் முறையில் சிவராத்திரி கொண்டாடப்படுகிறது.

1. எல்லா ஆன்மீக சாதகர்களும் அன்று முழுவதும் உபவாசம் இருக்கின்றனர். பலர் ஒரு சொட்டுத் தண்ணீர் கூட அருந்துவதில்லை.

2. அனைவருடைய அமைதி மற்றும் சுபிட்சத்திற்காக ஒரு பெரிய ஹோமம் செய்யப்படுகிறது.

3. 'ஓம் நமசிவாய' மந்திர ஜபம் மற்றும் சிவ தியானம் நாள் முழுவதும் செய்யப்படுகிறது.

4. இரவில் ஆலயத்தில் எல்லோரும் ஒன்று கூடி இரவு முழுவதும் ஓம் நமசிவாய மந்திரத்தை ஜபிக்கிறார்கள்.

5. இரவின் நான்கு ஜாமங்களிலும் மிகுந்த பக்தியுடன் சிவலிங்கம் வழிபடப்படுகிறது.

6. உண்மையான ஆன்ம சாதகர்களுக்கு சன்யாச தீக்ஷை அன்று அளிக்கப்படுகிறது.

"என் இதயத் தாமரையில் வீற்றிருக்கும் ரத்தினமான சிவனை நான் வணங்குகிறேன். சிரத்தை, பக்தி எனும் நதியிலிருந்து கொண்டு வரப்பட்ட புனித நீரான என் தூய மனத்தால் அவரை அபிஷேகம் செய்கிறேன். சமாதியெனும் நறுமணப் பூக்களால் நான் அவரை வழிபடுகிறேன் - இவையெல்லாம் நான் இனி இப்புவியில் பிறக்கக் கூடாது என்பதற்காக", என்று சொல்லி சிவபெருமானை வணங்குங்கள்.

சிவபெருமானை வழிபட இன்னொரு சிறந்த முறை:

"சிவபெருமானே! நீரே எனதாத்மன். என் மனமே பார்வதி. என் பிராணன்களே உமது சேவகர்கள். என் உடலே உமது வீடு. எனது அன்றாட செயல்களே உமது வழிபாடு. என் உறக்கமே சமாதி. என் நடையே உமது பிரதக்ஷிணம். என் பேச்சே பிரார்த்தனை. இவ்விதம் நான் எனதனைத்தையும் உமக்கு அர்ப்பணிக்கிறேன்."

# 26. வைகுண்ட ஏகாதசி

மார்கழி மாதத்தில் (டிசம்பர் - ஜனவரி) வைகுண்ட ஏகாதசி வருகிறது. விஷ்ணு கோவில்களில் பயபக்தியுடன் இது கொண்டாடப்படுகிறது. சாந்திராயன பகுதியின் 11வது நாளான ஏகாதசியில் உபவாசம் மேற்கொள்ள வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தக் கலியுகத்தில் நம்பிக்கை, வைராக்கியம், மற்றும் பக்தியுடன் ஏகாதசி விரதம் அனுஷ்டிக்கப்பட்டு, மனமானது முழுக்க ஹரியிடம் செலுத்தப்பட்டால் ஒருவன் பிறப்பிறப்புச் சுழலிலிருந்து விடுவிக்கப் படுவான். இதில் ஐயமேயில்லை. இந்த விஷயத்தில் மறை நூல்கள் நமக்கு உறுதி அளிக்கின்றன.

பக்தர்கள் இந்த தினத்தில் உபவாசம் இருந்து, இரவு முழுவதும் கண் விழித்து ஜபம் செய்து ஹரி கீர்த்தனம், தியானம் செய்கின்றனர். சிலர் ஒரு சொட்டு ஜலம் கூட அருந்துவதில்லை. பூரண உபவாசம் இருக்க முடியாதவர்கள் சிறிது பால், பழம் சாப்பிடலாம்.

ஏகாதசி நாட்களில் அரிசி சாதம் சாப்பிடக் கூடாது. இது மிகவும் முக்கியம். பிரம்மாவின் தலையிலிருந்து விழுந்த வியர்வை, ஓர் அரக்கனின் உருவத்தை எடுத்து, ''எனக்கு வசிக்க ஒரு இடம் கொடுங்கள்'', என்று கேட்டது.

''அரக்கனே! ஏகாதசி அன்று சாப்பிட்டவர்களின் சாதத்தில் போய் இருந்து கொண்டு அவர்கள் வயிற்றில் புழுக்களாக ஆவாயாக'', என்று பிரம்மா பதில் சொன்னார்.

இதற்காக ஏகாதசி அன்று சாதம் தவிர்க்கப் படுகிறது. ஒருவன் ஏகாதசி உபவாசத்தை தொடர்ந்து செய்தால், பகவான் ஹரி மகிழ்வுறுகிறார். எல்லாப்

பாபங்களும் போக்கப்படுகின்றன. மனம் தூய்மை அடைகிறது. பக்தி படிப்படியாக வளர்கிறது. கடவுளிடம் பக்தி தீவிரமடைகிறது. ஆசார சீலர்கள் சாதாரண ஏகாதசி நாட்களில்கூட பூரண உபவாசத்துடன் விழித்திருக்கின்றனர். விஷ்ணு பக்தர்களுக்கு ஒவ்வொரு ஏகாதசியும் புனிதமான நாள்தான்.

**உபவாசத்தினால் ஏற்படும் நன்மைகள்**

இன்றைய நாட்களில், படித்த பலர் இந்தப் புண்ணிய தினத்தில் உபவாசம் அனுஷ்டிப்பதில்லை. இது கெட்ட உலகாயத சக்திகளின் தர்க்கத்தின் விளைவினால் ஏற்பட்டதாகும். சிறிது அறிவு விருத்தி அடைகின்றபொழுது ஜனங்கள் தேவை இல்லாத விவாதங்களிலும் தர்க்கத்திலும் ஈடுபடுகின்றனர். ஆன்மீக மார்க்கத்தில் அறிவு ஒரு தடங்கலாக இருக்கிறது. இருதயத்தைப் பண்படுத்தாமல், வெறும் அறிவை மட்டும் வளர்த்தவர்கள் ஒவ்வொரு படித்தரத்திலும் சந்தேகப்படத் தொடங்குகின்றனர். அவர்கள் வழிதவறிப் போய்விடு கின்றனர். எல்லாவற்றிற்கும் அவர்கள் 'ஏன்', 'எப்படி' என்ற விளக்கம் கேட்கின்றனர். எல்லா நிகழ்ச்சி களுக்கும் அவர்கள் விஞ்ஞான விளக்கத்தை வேண்டு கின்றனர்.

நிரூபணங்களுக்கும், யூகங்களுக்கும் அப்பாற் பட்டவர் ஆண்டவன். மிகுந்த பக்தி, மரியாதை மற்றும் இதயத் தூய்மையுடன் ஒருவன் சமயத்தை அணுக வேண்டும். அப்பொழுதுதான் உள்ளங்கை நெல்லிக்கனி போல சமயத்தின் நுட்பங்கள் அவனுக்குத் தெரியவரும். தந்தையை நிரூபிக்க வேண்டுமென்று எவராவது தனது தாயைக் கேட்பார்களா?

உபவாசம் காமத்தை அடக்குகிறது. அது உணர்ச்சிகளை கட்டுப்படுத்துகிறது. புலன்களையும் அது

அடக்குகிறது. மனதையும் இதயத்தையும் அது தூய்மைப்படுத்துகிறது. ஏராளமான பாபங்களைப் போக்குகிறது. மனிதனின் பரம விரோதியான நாக்கை உபவாசம் கட்டுப்படுத்துகிறது. சுவாச, ரத்த ஓட்ட, ஜீரண மற்றும் சிறுநீரக மண்டலங்களை உபவாசம் செப்பனிடுகிறது. உடலின் எல்லா அசுத்தங்களையும், நச்சுக்களையும் அது இல்லாதாக்குகிறது. யூரிக் அமிலப் படிவங்களை அது நீக்குகிறது. அசுத்தத் தங்கம் கொள்கலத்தில் இட்டு திரும்பத் திரும்ப உருக்கப்பட்டு தூய்மைப்படுத்தப்படுவது போல அசுத்த மனமும் அடிக்கடி உபவாசத்தால் தூய்மையாக்கப்படுகிறது.

இளம், திடகாத்திரமான பிரம்மச்சாரிகள் எப்பொழு தெல்லாம் காமம் அவர்களைத் தொல்லைப்படுத்து கிறதோ, அப்பொழுதெல்லாம் உபவாசத்தை மேற் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் மனம் அமைதி அடைந்து அவர்களுக்கு நல்ல தியானம் வாய்க்கும். உடல் மண்டலத்தை அமைதியாக்கி தீவிர தியானம் பயில்வது தான் உபவாசத்தின் முக்கிய நோக்கமாகும்.

புலன்களை உள்முகமாக்கி மனத்தை இறைவன் பால் பதியுங்கள். உங்களுக்கு வழிகாட்டி ஆன்மீகப் பாதையில் ஒளியைக் காட்டி அருளுமாறு இறைவனிடம் பிரார்த்தனை செய்யுங்கள். "இறைவனே! எனக்கு வழிகாட்டு. என்னைக் காப்பாற்று. என்னைக் காப்பாற்று. நான் உன்னுடையவன். நான் உன்னுடையவன். என்னைக் கைவிட்டுவிடாதே" என்று மனமுருகிச் சொல்லுங்கள். உபவாச நாட்களில், முக்கியமாக ஏகாதசி தினங்களில் இந்த சாதனையை கடைப்பிடியுங்கள்.

யோகத்தின் பத்து முக்கிய அம்சங்களில் உபவாசமும் ஒன்று. ஆனாலும், அதிகமாகப் பட்டினி இருப்பதை தவிர்க்க வேண்டும். அது பலவீனத்தை உண்டாக்கும். உங்கள் பகுத்தறிவைப் பயன்படுத்துங்கள்.

24 மணி நேர உபவாசம் உங்களால் இருக்க முடியாவிட்டால், 10-12 மணி நேர உபவாசத்தை பால், பழத்துடன் மேற்கொள்ளுங்கள். படிப்படியாக உபவாசத்தை 15 மணி நேரத்திற்கும் அதன்பின் 24 மணி நேரத்திற்கும் உயர்த்துங்கள். உபவாசம் ஒருவனை மானசீகமாகவும், ஆன்மீகமாகவும் ஆற்றல் உடையவனாக்குகிறது.

புகழ் பெற்ற ஹிந்து சட்ட நிபுணரான மனு, தமது மனுஸ்மிருதியில் ஐம்பெரும் பாபங்களைப் போக்குவதற்கு உபவாசத்தை மேற்கொள்ளச் சொல்லுகிறார். டாக்டர்களால் குணப்படுத்த முடியாதது என்று கைவிட்ட வியாதிகளை உபவாசம் குணப்படுத்துகிறது. அவ்வப்பொழுது உள்ளுறுப்புகளுக்கு ஓய்வு அளிப்பதற்கும், பிரம்மச்சர்யத்தைப் பாதுகாப்பதற்கும் நல்லாரோக்கியத்தைப் பேணுவதற்கும் பூரண உபவாசம் தேவைப்படுகிறது. அதிகம் உண்பதாலேயே எல்லா வியாதிகளும் உண்டாகின்றன. உபவாசம் ஒன்றே அவற்றைக் குணமாக்க உள்ள ஒரே வழியாகும்.

தூக்கத்தைக் கட்டுப்படுத்த பூரண உபவாசம் உதவுகிறது. தூக்கத்தைக் கட்டுப்படுத்த மருந்து அருந்துவது விரும்பத்தக்கது அல்ல. புறத்தில் உள்ள ஒன்றை அண்டியிருப்பதால் குறிப்பிடத்தக்க ஆன்மீக பலத்தை உங்களால் அடைய முடியாது. உபவாச காலத்தில் எல்லா தொடர்புகளையும் தவிருங்கள். தனியாக வாழுங்கள். சாதனையில் நேரத்தைச் செலவிடுங்கள். உபவாசத்தை முடிக்கும் பொழுது ஜீரணிப்பதற்குக் கடினமான உணவை உட்கொள்ளாதீர்கள். பாலோ, பழச்சாறோ நன்மை தரும்.

உணவில் மிதமாக இருப்பதும், யோக தியானத்தில் புலன்களை அகமுகமாக்குவதும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் போன்றவை. உடலை நல்ல செயல்

நிலையில் வைக்கப் போதுமான அளவு சிறிது உணவும் தண்ணீரும் கொடுப்பதுதான் 'மிதம்' என்பதன் பொருள்.

"உண்மையில் யோகம் என்பது அதிகமாக உண்பவனுக்கோ, உணவைத் தவிர்ப்பவனுக்கோ, அதிகமாகத் தூங்குபவனுக்கோ, அல்லது அதிகமாக விழித்திருப்பவனுக்கோ இல்லை", என்பதை நீங்கள் பகவத் கீதையில் காண்பீர்கள்.

குறிப்பிட்ட புலனுலகப் பொருள்களிலிருந்து யோகி, தமது புலன்களை இழுத்துக் கொள்கிறார். புலன்கள் மனத்துடன் ஒடுக்கப்படுகின்றன. இந்த இரண்டு பயிற்சிகளிலும் ஒருவன் பூரணமாக நிலைபெறும் போது புலன்களின் மீது வெற்றி சாத்தியமாகும்.

ஒரு சமயம் தேவர்களை முரன் என்ற அசுரன் கொடுமைப்படுத்தி வந்தான். தேவர்கள் விஷ்ணு பகவானிடம் ஆதரவு வேண்டி அணுகினர். அரக்கனை அழிக்க யோகமாயையை ஹரி அனுப்பினார். யோக மாயை வெற்றிகரமாக அதைச் செய்து முடித்தாள்.

"யார் ஏகாதசி உபவாசம் இருக்கின்றார்களோ, அவர்கள் அனைத்துத் துன்பங்களினின்றும் விடுபடுவார்கள். நீயும் 'ஏகாதசி' என்று அழைக்கப்படுவாய்", என்று பகவான் விஷ்ணு யோகமாயையிடம் கூறினார்.

அம்பரீஷ மன்னன் பகவான் விஷ்ணுவின் பரமபக்தன். ஒரு வருடத்திற்கு அவன் ஏகாதசி விரதத்தை அனுஷ்டித்தான். பகவான் அருளை அம்பரீஷன் பெற்றான். ஒரு சமயம் அவன் தொடர்ந்து மூன்று நாட்கள் உபவாசம் இருந்தான். உபவாசத்தை அவன் முடிக்கும் தறுவாயில் துர்வாச மகரிஷி அவன் முன் விருந்தினராகத் தோன்றினார். மன்னன் அவரை சகல மரியாதைகளுடன் வரவேற்று உணவு ஏற்குமாறு வேண்டினான். ரிஷியும் சம்மதித்து ஆற்றில் நீராடி வரச்

சென்றார். அரசன் வெகுநேரம் பொறுமையாகக் காத்திருந்தான். ஆனால் ரிஷி வரவில்லை. நேரம் போய்க் கொண்டிருந்தது. அந்த தினம் முடிவதற்குள் மன்னன் எதையாவது சாப்பிடவில்லை என்றால் விரதபங்கம் ஏற்பட்டு விடும். அவன் சாப்பிட்டால், ரிஷியை அவமதித்ததாய்விடும். இந்த இரண்டிற்கும் இடையில் மத்தியஸ்தமாக அரசன் சிறிது நீரை மட்டும் அருந்தி உபவாசத்தை முடித்துக் கொண்டான்.

துர்வாசர் ஸ்நானம் செய்து திரும்பியதும் என்ன நடந்தது என்பதை அறிந்து கோபம் கொண்டார். தனது சிகையிலிருந்து ஒரு முடியைப் பிடுங்கி அதை அம்பரீஷனைக் கொல்லுவதற்கு ஏவினார். அரசன் சிறிதும் அசையவில்லை. விஷ்ணுவின் சக்கரம் துர்வாசரின் முடியின் சக்கரத்தை ஆற்றல் அற்றதாக்கியது. ரிஷி எங்கே சென்றாலும் அது அவரைத் துரத்தி அவரைக் கொல்ல முனைந்தது.

பிரம்மாவிடமும் சிவனிடமும் துர்வாச ரிஷி அடைக்கலம் புகுந்தார். ஆனால் அது வெற்றி பெறவில்லை. பகவான் விஷ்ணுவிடம் அவர் அடைக்கலம் அடைந்தபொழுது அவர், "நான் எனது பக்தர்களுக்கு அடிமை. என் இதயம் என் பக்தர்கள் வசம் உள்ளது. எனவே நீர் அம்பரீஷனிடமே போய் அவனிடம் மன்னிப்புக் கேளும். நீர் காப்பாற்றப் படுவீர்", என்றார்.

தனது போக்கை மாற்றிக் கொள்ளுமாறு அம்பரீஷன் அந்த முடியிடம் வேண்டி ரிஷியைக் காப்பாற்றினான். தனது இதயத்தின் அடித்தளத்திலிருந்து துர்வாச ரிஷி மன்னனுக்கு நன்றி தெரிவித்தார்.

# 27. வரலக்ஷ்மி விரதம்

ஸ்கந்த புராணத்தில் இந்த விரதத்தின் மகிமையை சிவபெருமான் விளக்குகிறார். உயிருடனிருக்கும் கணவனை உடைய ஒரு பெண்ணால் இது செய்யப்படுகிறது. மகாலக்ஷ்மி எல்லாச் செல்வம் மற்றும் மங்களத்தின் இருப்பிடமாவாள். நல்ல மக்கட்பேறு, கணவனின் ஆரோக்கியம் மற்றும் நீண்ட ஆயுள் வேண்டி மகாலக்ஷ்மி பூஜை செய்யப்படுகிறது.

சிராவண மாதத்து (ஆகஸ்டு-செப்டம்பர்) பௌர்ணமிக்கு முந்தைய வெள்ளிக்கிழமையன்று இந்த விரதம் அனுஷ்டிக்கப்படுகிறது. ஸ்நானம் செய்து, தூய புத்தாடை உடுத்தி இல்லத்தரசி தாமரையுடன் கூடிய ஒரு மண்டலத்தை தரையில் இடுகிறாள். அரிசி, மாவிலை, தேங்காயுடன் கூடிய ஒரு கலசம் அந்த மண்டலத்தில் வைக்கப்படுகிறது. அதில் லக்ஷ்மிதேவி ஆவாஹனம் செய்யப்படுகிறாள். வழிபாட்டில் புது தானியம் பயன்படுத்தப்படுகிறது. ஏனெனில் அது வளர்ச்சியையும் சுபிட்சத்தையும் குறிக்கிறது.

கலச பூஜைகளுக்குப் பிறகு கணேச பூஜையும், பிறகு ரக்ஷை அல்லது மங்கள சூத்திர (தாலி) பூஜையும் தொடர்கின்றன. இப்பொழுது வரலக்ஷ்மி பூஜையின் முக்கிய அம்சம் ஆரம்பமாகிறது. ரக்ஷை இரண்டாவது முறையாக செய்யப்படுகிறது. அது பெண்ணின் வலக்கையில் கட்டப்படுகிறது. வழிபாட்டிற்குப் பின் பல மங்களகரமான பொருள்கள் (கணவன் உள்ள ஒரு ஸ்திரீக்கு) ஒரு சுமங்கலிக்கு தானமாகக் கொடுக்கப் படுகின்றன. அவளுக்கு நல்ல உணவும் அளிக்கப்படுகிறது.

லக்ஷ்மிதேவி தனது பக்தர்களுக்கு வெறும் செல்வத்தையும், பொருள் வளத்தையும் மட்டுமல்லாது, உயர் ஞானத்தையும் அளித்தருள்கிறாள். அவள் வித்யாசக்தி. தன் பக்தர்களை பகவானுக்கு அவள்

அறிமுகம் செய்கிறாள். அவர்களது முக்திக்காக அவள் பகவானிடம் சிபாரிசு செய்கிறாள்.

பகவான் விஷ்ணு அல்லது ஹரியான ஸ்ரீமன் நாராயணனின் சக்தியே மகாலக்ஷ்மி. கடவுளது காக்கும் சக்தியே நாராயணர். சுத்தஸத்துவத்தின் உருவகமே அவர். லக்ஷ்மி அவரது காரண சரீரம். இயற்கையின் மோக சக்தியான மாயை அவள். அகில உலகத்தையும் அவள் தனது மோக சக்தியால் மயக்கி தனது தோற்றும் சக்தியால் தோன்றச் செய்கிறாள். அவளே வித்யா லக்ஷ்மியாக ஆன்ம சாதகனுக்கு விழிப்பூட்டுகிறாள். அழகு, கருணை, அழகான இயற்கைக் காட்சி, நாணம், அன்பு, செழிப்பு, இசை, பஞ்ச பூதங்கள் மற்றும் அவற்றின் சேர்க்கைகள், மனம், புத்தி, பிராணன் - எல்லாமே அவளது தோற்றங்கள்.

லக்ஷ்மி தேவி இன்றி சன்யாசிகள்கூட தங்களது ஆசிரமங்களையோ, பிரச்சாரத்தையோ நடத்த முடியாது. இல்லறத்தாரைக் காட்டிலும் அவர்களுக்குத் தான் லக்ஷ்மி தேவி அதிகம் தேவைப்படுகிறாள். ஏனெனில் மக்கள் நன்மைக்காக அவர்கள் பெரும் தொண்டு செய்ய வேண்டியுள்ளது. ஸ்ரீசங்கரர் தேவியையும், லக்ஷ்மியையும், சரஸ்வதியையும் தமது பணியில் வெற்றிக்காக வழிபட வேண்டி நேரிட்டது. கடந்த காலத்தில் பெரும் ஆன்மீகப் பணி ஆற்றியுள்ள பெருமக்களும் இறை தூதர்களும் அன்னை லக்ஷ்மி தேவி மற்றும் ஸரஸ்வதியை ஆராதித்தவர்களே யாவர்.

அன்னை மகாலக்ஷ்மி உங்கள் அனைவரையும் ஆசீர்வதிப்பாளாக!

அவளது மந்திரத்தை நாம் பாராயணம் செய்வோம்:

*ஓம் மஹாதேவ்யை ச வித்மஹே*
*விஷ்ணு பத்ன்யை ச தீமஹி*
*தன்னோ லக்ஷ்மீ ப்ரசோதயாத் I*



லக்ஷ்மி தேவி

# 28. விசேஷ வழிபாடுகள்

## கிரகணம்

பாற்கடலை தேவர்களும் அசுரர்களும் கடைந்த பொழுது அதிலிருந்து அமிருதம் வந்தது. பகவான் விஷ்ணு ஓர் அழகான மோகினி வடிவம் தாங்கி, அசுரர்களை மயக்கி அந்த அமிருதத்தை தேவர்களுக்கு மட்டுமே வழங்கினார். ஆனால் ராகு தேவனைப் போல உருவம் தரித்தான். சூரிய சந்திரர்கள் இதை மோகினிக்கு எடுத்து உணர்த்தவே, அவர் உடனே அந்த அசுரனின் தலையைக் கொய்து விட்டார். ஆனால் அதற்குள் அமிருதம் கழுத்து வரை சென்று விட்டதால் அவன் சாகவில்லை. இவ்வாறாக தலை ராகு என்றும், உடல் கேது எனவும் அழைக்கப்பட்டன. இதற்குப் பழி வாங்குவதற்காக ராகுவும் கேதுவும் அவ்வப்பொழுது சூரியனையும் சந்திரனையும் மறைக்கின்றனர்.

வானசாஸ்திரப்படி சூரியன், சந்திரன், பூமி ஒரே கோட்டில் வரும்பொழுது, நடுவில் சந்திரனோ, பூமியோ வருகையில் சூரிய, சந்திர கிரகணங்கள் ஏற்படுகின்றன.

கிரகண காலத்தில் மக்கள் புனித நதிகளில் நீராடுகின்றனர். அவர்கள் தானமும் செய்கின்றனர். பசுக்கள், பணம் மற்றும் தங்கத்தை அவர்கள் தானமாக அளிக்கின்றனர். கிரகணத்திற்கு மறுநாள் அவர்கள் ஏழைகள், பிராம்மணர்கள் மற்றும் சாதுக்களுக்கு உணவளிக்கின்றனர். கிரகணம் முடிந்த பின் அவர்கள் தங்கள் வீடுகள் மற்றும் பாத்திரங்களை சுத்தம் செய்கின்றனர். மீண்டும் சமையல் தொடங்குமுன் ஸ்நானம் செய்கின்றனர்.

கிரகண காலத்தில் ஒருவன் சாப்பிடக் கூடாது. கிரகணம் தொடங்கும் காலத்தில், முன் உண்ட உணவு

ஜீரணமாகியிருக்க வேண்டும். கிரகணம் விட்ட பிறகு சந்திரனையோ, சூரியனையோ பார்த்தபின் தான் ஒருவன் உணவு உட்கொள்ள வேண்டும். தெளிவான சந்திரனோ, சூரியனோ சூரிய சந்திர கிரகணங்களின் போது சூரியாஸ்தமனம் அல்லது சூரியோதயத்திற்கு முன் தெரியவில்லையானால் மறுநாள் சூரியனோ, சந்திரனோ தெரிந்தபின்தான் உணவு உட்கொள்ள வேண்டும்.

கிரகணத்தின் போது சூரியனையோ சந்திரனையோ கர்ப்பமான பெண்கள் பார்க்கக் கூடாது. அவர்கள் பார்த்தால் பிறக்கப் போகும் குழந்தைகள் ஊனம் உள்ளவையாக இருக்கும். அது செவிடு, ஊமை அல்லது குருடாக இருக்கும். இதே காரணத்திற்காக இல்லறத்தார் கிரகண காலத்தில் உடலுறவு கொள்ளக் கூடாது.

இந்த நேரத்தில் ஒருவன் தேள்கடி மற்றும் இரத்தப் பெருக்கு நிகழாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இவற்றால் பயங்கர விளைவுகள் ஏற்படும். கிரகணத்தின் பொழுது ஒரு மண்புழு கடித்தால்கூட அதில் விஷம் இருக்கும்.

கிரகண காலத்தில் ஜபம் செய்பவர்கள் பெரும் நன்மை அடைவார்கள். கிரகணத்தின் பொழுது செய்யும் ஜபம், சங்கீர்த்தனத்தால் மனிதகுலத்தின் அல்லல்களும் கிரக பீடையும் அகல்கின்றன. மக்கள் தேவர்களின் ஆசிகளைப் பெறுகின்றனர். அவர்கள் விரைவில் பூரணத்துவத்தை எய்துகின்றனர். தேள் கடி போன்றவற்றைக் குணப்படுத்தவல்ல மந்திரங்களின் அந்தரங்க சக்தியை உணர விரும்புபவர்கள் நீரில் நின்று குறிப்பிட்ட மந்திரத்தை பாராயணம் செய்ய வேண்டும்.

நமது சிற்றறிவினால் பிரபஞ்சத்தில் நிகழும் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடியாது. எனவே முனிவர்களின் வார்த்தைகளை நம்புங்கள்.

ஆத்ம ஞானத்தை அறியாமை மறைக்கிறது. எனினும் இந்தத் திரை அல்லது கிரகணம் அகலும். நீங்கள் உங்கள் இயற்கையான புகழுடன் ஒளிர்வீர்கள். இதுதான் கிரகணத்தின் ஆன்மீக தத்துவமாகும்.

மஹாளய அமாவாசை

(செப்டம்பர்-அக்டோபர்) அஸ்வாயுஜ மாதத்தின் தேய்பிறை பிதுருக்களுக்கான கடன்களைச் செய்வதற்கு உகந்த மஹாளய பக்ஷமாகும். இப்பருவத்தின் கடைசி நாளான அமாவாசை சிராத்த சடங்குகளைச் செய்வதற்கு மிகவும் உகந்ததாகக் கருதப்படுகிறது.

மகாபாரதத்தின் பிரபல வீரனான கர்ணன் தனது பூத உடலை உகுத்து சொர்க்கம் சென்றான். அதுவரை செய்ததான அவனது தருமங்கள் நூறுமடங்காகப் பெருகின. ஆனால் அது அத்தனையும் வெள்ளியும் தங்கமுமாக இருந்தனவே அன்றி, உணவாக இல்லை. ஏனெனில் அவன் அன்னதானம் செய்யவில்லை. அவன் எமதர்மராஜனை வேண்டினான். அதற்காக அவன் 14 நாட்கள் பூமிக்கு இந்தக் குறையை நிவர்த்திக்கும் பொருட்டு திருப்பி அனுப்பப்பட்டான்.

பதினான்கு நாட்களுக்கு அவன் ஏழைகளுக்கும் பிராம்மணர்களுக்கும் அன்னதானம் செய்து அர்க்யம் அளித்தான். பிறகு மேலுலகத்திற்கு அவன் சென்ற பொழுது, அங்கே நிரம்ப உணவு அவனுக்கு இருந்தது. மஹாளய பட்சத்தில் இந்த 14 நாட்கள் தான் கொண்டாடப்படுகின்றன. இந்தப் பருவத்தில்

செய்யப்பட்ட தானங்கள் தொடர்பு இருக்கிறதே இல்லையோ எல்லா பிதிருக்களுக்கும் நலம் தருகின்றன.

இந்தச் சடங்கில் அன்னதானம் முக்கிய இடத்தைப் பெறுகிறது. வாழ்க்கை அன்னத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. காய்ந்த வயிற்றுடன் இருப்பவர்களுக்கு சமயத்தைப் பிரச்சாரம் செய்யாதீர்கள். இறைவனை உணர இம்மானிட சரீரம் மிக முக்கியமான கருவியாகும். யோகத்திற்கு உடலைத் தகுதியாக வைப்பதற்கு உணவு எவ்வளவு இன்றியமையாதது! தானத்தில் சிறந்தது அன்னதானம்! எனவே மஹாளயப் பகுதியில் மட்டுமல்லாது வருடம் முழுவதும் அன்னதானம் செய்யுங்கள்.

*ஓம் தத்ஸத் பிரம்மார்ப்பணமஸ்து.*

# 29. விக்கிரக வழிபாட்டின் தத்துவம்

ஆரம்ப சாதகனுக்கு விக்கிரகம் ஒரு துணையாகும். அவனது ஆன்மீக பால்யத்தில் அது ஒரு தூண்டுகோலாகும். ஆரம்பத்தில் வழிபாட்டிற்கு ஒரு விக்கிரகம் அல்லது உருவம் தேவை. வழிபாட்டிற்கு கடவுளின் ஒரு புறச் சின்னமே அது. அது கடவுளை நினைவூட்டுகிறது. திடப் பொருளாலான விக்கிரகம் மனத்தில் ஓர் உருவத்தை தோற்றுவிக்கிறது. விக்கிரக வழிபாட்டினால் மனம் நிலைபெறுகிறது. பூரணத்துவம், ஸர்வவல்லமை, ஸர்வக்ஞத்வம், தூய்மை, சுதந்திரம், மகிமை, உண்மை மற்றும் ஸர்வ வியாபகத்வம் போன்ற எண்ணங்களைத் தான் விரும்பி ஏற்கும் உருவத்துடன் ஒன்றுபடுத்த வேண்டும்.

பரம்பொருளை தியானிக்க எல்லாராலும் முடியாது. மன ஒருமைப்பாட்டை பயிலுவதற்கு பெரும்பாலோருக்கு ஒரு விக்கிரகம் தேவைப்படுகிறது. எங்கும் கடவுளைக் காண்பதற்கும், இறைவனை உணர்வதற்கும் சாதாரண மனிதனால் முடியாது. தற்கால மனிதனுக்கு உருவ வழிபாடுதான் மிக எளிய வழிபாடாகும்.

மனத்தை லயிக்கச் செய்ய ஓர் உருவம் கண்டிப்பாகத் தேவை. மனத்திற்கு ஓர் ஆதாரம் வேண்டும். ஆரம்ப நிலைகளில் பரம்பொருள் தத்துவத்தை அதனால் கிரகிக்க முடியாது. ஏதாவது புறப் பொருளின் துணையின்றி மனத்தை ஒருநிலைப்படுத்த முடியாது. எனவே ஆரம்பத்தில், ஓர் உருவமின்றி ஒருமைப்பாடு அல்லது தியானம் இயலாததாகும்.

### எல்லோரும் உருவ வழிபாட்டினரே

விக்கிரக வழிபாடு ஹிந்து மதத்திற்கு மட்டுமே அமைந்ததொன்றல்ல. கிறிஸ்துவர்கள் சிலுவையை

வணங்குகின்றனர். அவர்கள் தங்கள் மனத்தில் சிலுவையின் பிம்பத்தை வைத்திருக்கிறார்கள். முஸ்லிம்கள் மண்டியிட்டு பிரார்த்தனை செய்கையில் காபாக் கல்லை நினைக்கின்றனர். ஒருசில யோகிகள், வேதாந்திகளைத் தவிர மற்ற உலக மக்கள் அனைவருமே உருவ வழிபாட்டுக்காரர்கள்தான். ஏதாவது ஓர் உருவத்தை அவர்கள் தங்கள் மனதில் கொண்டுள்ளனர்.

மன உருவமும் விக்கிரகத்தின் வடிவம்தான். வேறுபாடு ரகத்தில் இல்லாமல், தரத்தில் உள்ளது. எல்லா வழிபாட்டினரும், அவர்கள் எவ்வளவு பெரிய அறிவாளிகளாக இருந்தாலும் சரிதான், தங்கள் மனத்தில் ஓர் உருவத்தை உண்டாக்கி, மனத்தை அதில் லயிக்கச் செய்கின்றனர்.

இந்த விதமாக ஒவ்வொருவரும் உருவ வழிபாட்டுக்காரரே. படங்கள், உருவங்கள் எல்லாமே விக்கிரகத்தின் வடிவங்களே. சாதாரண மனத்திற்கு ஸ்தூலமான குறியீடும், சூக்ஷ்மமான மனத்திற்கு நிர்குண குறியீடும் தேவைப்படுகிறது. தனது அலையும் மனத்தை நிலைநிறுத்த வேதாந்திக்கும் 'ஓம்' என்ற குறியீடு தேவைப்படுகிறது. கல் மற்றும் மரத்தில் உள்ளவைதான் விக்கிரங்கள் என்று எண்ண வேண்டாம், ஆனால் பெரும் தலைவர்களும் வழிபடு சின்னங்கள் ஆகின்றார்களே! பிறகு ஏன் உருவ வழிபாட்டை நிந்திக்கிறீர்கள்?

இறைவனுடன் தொடர்பு கொள்ள ஒரு சாதனமே விக்கிரகம். விக்கிரகங்கள் சிற்பிகளின் வீணான கற்பனைகளல்ல. அவை பக்தனின் இதயத்தை கடவுள்பால் ஈர்க்கும் பிரகாசமான ஊடகங்கள். வெளிப்படையாக விக்கிரகம் வழிபடப்பட்டாலும், பக்தன் அதில் இறைவனை உணர்கிறான், தனது பக்தியை அதில் பாய்ச்சுகிறான். தற்கால புலன்வழிச்

செல்லும் மனிதனின் அறியாமைதான் அவனது அறிவை மறைத்து, அழகான, அற்புதமான விக்கிரகங்களில் இறைவனைப் பார்க்கவொட்டாது தடுக்கிறது.

நவீன விஞ்ஞான முன்னேற்றங்கள் விக்கிரக வழிபாட்டின் மேன்மையை விளக்குவனவாக அமைகின்றன. சிறியதொரு ரேடியோ அல்லது டிவி. பெட்டியில் எவ்வளவு பாடகர்களும், பேச்சாளர்களும் அடங்கி விடுகின்றனர்? ரேடியோ, டிவி பெட்டிகள் தூக்கி எறியப்பட்டால் சுக்கல் சுக்கலாகப் போகும்; ஆனாலும் அவற்றை நீங்கள் முறையாகக் கையாண்டால் ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பால் இருக்கும் நபர்களின் பாட்டைக் கேட்கலாம். அல்லது உருவங்களைக் காணலாம். ரேடியோ, டிவி பெட்டி மூலம் உலகெங்கும் பரவியிருக்கும் ஒலி ஒளி அலைகளை உங்களால் ஈர்க்க முடிவதுபோல, விக்கிரகத்தின் மூலம் உலகெங்கும் பரந்துள்ள இறைவனுடன் தொடர்பு கொள்ள முடியும். இறைவனின் தெய்வீகம், படைப்பின் ஒவ்வொரு அணுவிலும் உள்ளது. அவனில்லாத ஓர் அணுவும் கிடையாது. அப்படியானால் அவன் விக்கிரகத்தில் இல்லை என்று ஏன் நீங்கள் சொல்ல வேண்டும்.

“ஓ! கடவுள் எங்கும் நிறைந்த உருவமற்ற பரம் பொருள். அவரை எப்படி இந்த விக்கிரகத்தில் அடைக்க முடியும்?” என்று சிலர் கேலியாகக் கேட்கலாம். இவர்களுக்கு இறைவனது சர்வவியாபகத் தன்மையைப் பற்றிய உணர்வு ஏதாவது உண்டா? அவர்கள் எல்லாவற்றிலும் இறைவன் ஒருவனையே காண்கின்றனரா? இல்லை. அவர்களது ஆணவம்தான் கடவுள் விக்கிரகத்தின் முன் அவர்களை வணங்கவிடாமல் தடுக்கிறது. அதற்காக அவர்கள் சொல்லும் நொண்டிச் சாக்கே இக்கூற்று.

காலிப் பானைகள் ஓசையை உண்டாக்கும். தியானம், வழிபாட்டைச் செய்து, நல்லறிவும் பக்தியும் வாய்க்கப் பெற்ற ஒருவன் அமைதியாக இருக்கிறான். அவன் மௌனத்தின் மூலம் மற்றவர்களை ஈர்த்து, அறிவூட்டுகிறான். மன ஒருமைப்பாட்டின் ஆரம்பத்தில் விக்கிரகம் தேவையா இல்லையா என்பதை அவன்தான் அறிவான்.

ஒருவன் எவ்வளவு பெரிய அறிவாளியாக இருந்தாலும், ஏதாவது உருவகத்தின் துணையின்றி அவனால் மன ஒருமைப்பாட்டைப் பயில முடியாது. "எனக்கு விக்கிரகம் பிடிக்காது. ஓர் உருவத்தில் தியானிக்க நான் விரும்பவில்லை" என்று ஒரு மேதை அல்லது அறிஞன் தனது கர்வத்தின் காரணமாகக் கூறலாம். உருவமற்ற ஒன்றில் அவனால் மனத்தை ஒருமைப்படுத்த முடியாது. ஒரு விக்கிரகத்தில் அவன் தியானிக்கிறான் எனத் தெரிந்தால் மக்கள் அவனைக் கேலி செய்வர் என்று அவன் நினைக்கிறான். உருவமற்ற ஒன்றில் அவனால் தியானிக்கவே முடியாது. வெறுமனே அவன் பேசுகிறான், வாதம் செய்கிறான், நடிக்கிறான். தேவையற்ற விவாதங்களில் அவன் தன் வாழ்வை வீணடிக்கிறான். டன் கணக்கான கொள்கைகளைக் காட்டிலும் ஒரு அவுன்ஸ் நடைமுறைப் பயிற்சி எவ்வளவோ மேலானது.

பெரும்பான்மையான அறிஞர்களிடம் அறிவு ஓர் இடையூறாகவே உள்ளது. பிரம்மன் என்பதெல்லாம் வெறும் ஊகம்; உணர்வு கடந்த நிலை; ஒரு பொய்யுரை; வேதாந்திகளின் ஆத்மபோதம் என்பது ஒரு வெறும் கற்பனை என்று அவர்கள் கூறுகின்றனர். அறியாத மக்கள்! அவர்கள் அறியாமையில் மூழ்கியுள்ளனர். ஆத்ம ஞானத்தின் முன் வெறும் தூசுக்குச் சமமான லோகாயத அறிவினால் அவர்கள் மயக்கப்பட்டிருக்கிறார்கள்.

இத்தகையவர்களுக்கு கதி மோட்சமே கிடையாது! முதலில் சத்சங்கத்தின் மூலம் அவர்களது தவறான கருத்துகள் நல்ல எண்ணங்களால் போக்கடிக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் தங்கள் தவறுகளை அவர்கள் உணருவர். இறைவன் அவர்களுக்குத் தெளிவான புத்தியையும், உண்மை ஞானத்திற்கான நாட்டத்தையும் அருள்வாராக!

## கடவுளின் அறிகுறி

விக்கிரகம் ஓர் அறிகுறி அல்லது குறியீடு. கல்லோ, மரமோ, உலோகமோ - கோவிலில் உள்ள விக்கிரகம் இறைவனைக் குறிப்பதால் ஒரு பக்தனுக்கு மிகவும் மதிப்புடையது. அவன் புனிதமாக, மேலாக மதிக்கும் ஒன்றை அது குறிக்கிறது. கொடி வெறும் ஒரு துணி என்றாலும் போர்வீரனுக்கு அது அவன் மிகவும் நேசிக்கும் ஒரு பொருளாகும். அந்தக் கொடியைக் காக்க அவன் தன் உயிரையும் கொடுக்கத் தயாராயிருக்கிறான். அதுபோல, பக்தன் ஒருவனுக்கு விக்கிரகம் மிகவும் நேசத்திற்குரியது. அதற்கே உரித்தான பக்தி மொழியில் அது அவனுடன் பேசுகிறது. கொடி போர்வீரனிடம் வீரத்தை உண்டாக்குவது போல, விக்கிரகம் பக்தனிடம் பக்தியை ஊட்டுகிறது. விக்கிரகத்தில் கடவுள் ஆவாஹனம் செய்யப்படுகிறார். பக்தனிடம் அது தெய்வீக எண்ணங்களை உருவாக்குகிறது.

வெறும் ஒரு வெள்ளை அல்லது நிறத் தாளுக்கு எவ்வித மதிப்பும் கிடையாது. அதை நீங்கள் தூர எறிந்து விடுகிறீர்கள். ஆனால் அதில் அரசாங்க முத்திரை இருந்து ரூபாய் நோட்டாக இருக்குமானால், அதை நீங்கள் பத்திரமாக பெட்டியில் பூட்டி வைக்கிறீர்கள். அதைப் போல சாதாரணக் கல்லுக்கு எவ்வித மதிப்பும் கிடையாது. அதை நீங்கள் எறிந்து விடுகிறீர்கள். ஆனால்

பண்டரிபுரத்திலோ வேறு ஏதாவது புண்ணியத் தலத்திலோ உள்ள கோவில்களில் உள்ள விக்கிரகங்களைக் கண்டால், கூப்பிய கரங்களுடன் நீங்கள் அவற்றை வணங்குகிறீர்கள். ஏனெனில் இறைவனின் முத்திரை அந்தக் கல்லில் உள்ளது. பக்தன் அந்தக் கல் விக்கிரகத்தில் தனது இஷ்ட தெய்வத்தையும் அவரது திவ்விய குணங்களையும் ஏற்றிப் போற்றுகிறான்.

நீங்கள் ஒரு விக்கிரகத்தை வழிபடுகையில், "இந்த விக்கிரகம் ஜய்பூரிலிருந்து வந்திருக்கிறது. இதை வாங்கியவர் பிரபுசிங். இதன் எடை 50 பவுண்டு. அது வெள்ளை சலவைக் கல்லினால் செய்யப்பட்டிருக்கிறது. அதன் விலை 500 ரூபாய்," என்றெல்லாம் சொல்லுவதில்லை. மாறாக பகவானின் அனைத்து திவ்விய குணங்களையும் அந்த விக்கிரகத்தில் ஏற்றி வைத்து, "அந்தர்யாமியே! நீர் சர்வவியாபி. நீர் சர்வக்ஞர். சர்வவல்லமை வாய்ந்தவர். கருணைக்கடல் அனைத்தின் உற்பத்தி ஸ்தானமும் நீரே. நீர் எனது வாழ்வின் வாழ்வு, ஆன்மாவின் ஆன்மா! எனக்கு ஒளியும் அறிவும் கொடும். யாண்டும் நான் உம்மில் லயிப்பேனாக", என்று சொல்லிப் பிரார்த்திக்கிறீர்கள்.

உங்கள் பக்தியும் தியானமும் தீவிரமாகையில், நீங்கள் கல் விக்கிரகத்தைக் காண்பதில்லை. தூய உணர்வு சொரூபமான பகவானையே நீங்கள் காண்கின்றீர்கள். ஆரம்ப சாதகர்களுக்கு உருவவழிபாடு மிகவும் அவசியம்.

## பிரபஞ்சத்தின் ஒரு உள் அம்சம்

ஆரம்ப பக்தனுக்கு விக்கிரகம் மிகவும் இன்றியமையாததாகும். விக்கிரகத்தை வழிபடுவதால் பகவான் திருப்தி அடைகிறார். விக்கிரகம் பஞ்ச

பூதங்களால் ஆனது. பஞ்ச பூதங்கள் இறைவனது ரூபத்தைக் குறிக்கின்றன. விக்கிரகம் விக்கிரமாகவே இருப்பினும், வழிபாடு பகவானைச் சென்றடைகிறது.

நீங்கள் ஒருவருடன் கைகுலுக்கினால் அவர் மிகவும் திருப்தி அடைகிறார். அவரது உடலின் ஒரு சிறு பகுதியைத்தான் நீங்கள் தொட்டிருக்கிறீர்கள். இருந்தாலும் அவர் அதில் மிகவும் மகிழ்ச்சி அடைகிறார். அவர் முகமலர்ந்து உங்களை வரவேற்கிறார். அதைப்போல, தமது விராட் சொரூபத்தின் ஒரு சிறு அம்சம் வணங்கப்பட்டாலும் இறைவன் மிகவும் திருப்தி அடைகிறார். அகில உலகும் அவரது சரீரம். உங்களது பக்தி பரமனிடம் போகிறது.

பக்தன் பகவானையும் அவரது திவ்விய குணங்களையும் விக்கிரகத்தில் பதிப்பிக்கிறான். அவன் பதினாறு வகையில் பகவானை வழிபடுகிறான். முதலில் இஷ்ட தேவதையை வேண்டுகிறான். பிறகு ஆசனம் அளிக்கப்படுகிறது. பாதங்கள் கழுவப்படுகின்றன. ஜலம் அளிக்கப்படுகிறது. உபசாரம் நிகழ்கிறது. விக்கிரகம் நீராட்டப்படுகிறது. ஆடை உடுத்தி பூணூல் அணிவிக்கப் படுகிறது. அதன் நெற்றியில் சந்தனம் சார்த்தப்படுகிறது. மலர்கள் அணிவிக்கப்பட்டு, தூபம் காட்டப்படுகிறது. பிறகு ஒரு தீபம் ஏற்றப்பட்டு விக்கிரகத்தின் முன் காட்டப்படுகிறது. கற்பூரம் ஏற்றப்பட்டு பிரசாதம் அளிக் கப்படுகிறது. தங்கதானம் செய்யப்படுகிறது. கடைசியில் பதினாறாவது வகையாக தெய்வத்திடம் விடை பெறப்படுகிறது.

இந்தப் புறவழிபாடுகளில், அக அன்பு வெளிப் படுத்தப்படுகிறது. அலையும் மனம் இத்தகைய வழிபாட்டில் நிலை நிறுத்தப்படுகிறது. படிப்படியாக பக்தன் இறைவனது அருகாமையை உணர்கிறான்.

அவனது இதயம் தூய்மை அடைகிறது. மெதுவாக அவனது ஆணவம் இல்லாதாகிறது.

உருவத்தில் நம்பிக்கை உள்ள பக்தனுக்கு அது கல், களிமண், வெண்கலம், எதில் செய்யப்பட்டிருந்தாலும், அது வெறும் படமோ ஓவியமோ ஆனாலும் எந்த உருவமும் பகவானின் உருவகமே. அனைத்துப் பொருளும் இறைவனின் தோற்றமே. கடவுள் அனைத்திலும் இருக்கிறார். ஒவ்வொன்றும் வழிபடு பொருளே. ஏனெனில் வழிபாட்டிற்குரிய இறைவனின் தோற்றமேயாம். வழிபடுதலாகிய செயலே வழிபாட்டுப் பொருள். மேலானது உணர்வுடையது என்பதைக் குறிக்கிறது. பக்தன் இத்தகைய பார்வையைப் பெற்று விளங்க வேண்டும். பயிற்சி பெறாத மனம் பழக்கத்தால் மேற்காணும் முறையில் பயிற்றுவிக்கப்பட வேண்டும்.

**விக்கிரக வழிபாடு பக்தியை வளர்க்கிறது**

விக்கிரக வழிபாடு மனிதனது மன ஒருமைப்பாட்டை எளிமையாக்கி இலகுவாக்குகிறது. நீங்கள் எந்த உருவத்தில் இறைவனை வணங்குகிறீர்களோ அந்த வடிவில் அவரது லீலைகளை மனக்கண் முன் கொண்டு வாருங்கள். ஆத்ம ஞானம் பெறுவதற்கு இது ஒரு மிக எளிய வழியாகும். இன்று பெருவாரியான பக்தர்களுக்கு ஏற்ற முறையும் இதுவேயாகும்.

புகழ் பெற்ற வீரர் ஒருவரது படம் உங்கள் இதயத்தில் வீரத்தை வளர்ப்பது போல், இறைவனது படம் உங்கள் மனத்தை தெய்வீக நிலைக்கு உயர்த்தும். குழந்தை தன் கையில் உள்ள துணிப் பொம்மையை சீராட்டிப், பாராட்டி அன்பு காட்டுவது போல், பக்தனும் விக்கிரகத்தை வணங்கி அதில் மனத்தை ஒருமைப்படுத்தி பக்தி பாவத்தை வளர்க்கிறான்.

## விக்கிரகத்தில் தெய்வீகத்தை வெளிக்கொணரல்

பக்தி பாவத்துடன் விக்கிரகத்தை வழிபடுவதானது அதில் அடங்கியுள்ள தெய்வீகத்தை வெளிக் கொணர உதவுகிறது. இது உண்மையிலேயே ஓர் அதிசயமும், அற்புதமும் ஆகும். படத்திற்கு உயிர் வருகிறது. விக்கிரகம் பேசுகிறது. உங்கள் கேள்விகளுக்கு அது பதில் சொல்லி, உங்கள் பிரச்சினைகளைத் தீர்த்து வைக்கிறது. உங்களிடம் உள்ள கடவுள், விக்கிரகத்தில் மறைந்துள்ள தெய்வீகத்தைத் தட்டி எழுப்ப வல்லவராகிறார். பஞ்சுப் பொதியின் மீது சூரியக் கதிர்களை குவிக்க வல்ல சக்தி வாய்ந்த லென்சுக்கு நிகர் அது. லென்சோ, பஞ்சோ நெருப்பல்ல. அல்லது வெறும் சூரிய ஒளிக்கற்றையும் பஞ்சை எரிக்காது. ஆனால் இந்த மூன்றும் ஒரு குறிப்பிட்ட முறையில் ஒன்று சேர்க்கப்படும்போது, நெருப்பு உண்டாகிறது, பஞ்சு எரிகிறது. இதே போலத்தான் விக்கிரகம், பக்தன், பகவானுக்கிடையில் உள்ள தொடர்பாகும். எங்கும் நிறைந்த தெய்வத்தின் கதிர்களைக் குவிக்கவல்ல லென்ஸ்தான் விக்கிரகம். அது பக்தனை தெய்வீக ஒளியுடன் ஒளிரச் செய்கிறது.

கடவுள் விக்கிரகத்தில் குடிகொண்டுள்ளார். அதிலிருந்து கொண்டு அவர் உங்களை விசேஷமான முறையில் காத்தருள்வார். விக்கிரகம் அற்புதங்களைச் செய்யும். விக்கிரகம் பிரதிஷ்டை செய்யப்பட்ட இடம் உடனே வைகுண்டமாகவோ அல்லது கைலாசமாகவோ ஆகிறது. இத்தகைய இடத்தில் வாழ்பவர்கள் துன்பங்கள், வியாதிகள், தோல்விகள் மற்றும் லௌகிகத்திலிருந்தே விடுபடுகிறார்கள். விக்கிரகத்தில் தூண்டப்பட்ட தெய்வீகம் காவல் தெய்வம் போல செயல்பட்டு, அதை வணங்குவார்களுக்கு ஒப்பற்ற நலம் புரிகிறது.

### உருவம் - உணர்வின் உருவகம்

தெய்வீகத்தின் ஓர் அடையாளமே விக்கிரகம் அதில் கல்லையோ உலகத்தையோ பக்தன் காண்பதில்லை. கடவுளின் சின்னமாக அவனுக்கு அது விளங்குகிறது. விக்கிரகத்தில் உறையும் தெய்வீகத்தை அவன் காண்கிறான். சிவபெருமானின் உருவகமான சிவலிங்கத்தை வழிபட்டே அறுபத்து மூன்று நாயன்மார்களும் இறையுணர்வு பெற்றனர். பக்தனுக்கு விக்கிரகம் உணர்வுப் பெட்டகமாகும். அதிலிருந்து அவன் ஊக்கத்தைப் பெறுகிறான். அது அவனுக்கு வழிகாட்டுகிறது. அது அவனுடன் பேசுகிறது. அவனுக்கு அது பல விதங்களில் வழிகாட்ட மனித உருவத்தை எடுக்கிறது.

தென்னிந்தியாவில் மதுரைக் கோவிலில் உள்ள சிவ விக்கிரகம் விறகு வெட்டிக்கும் மூதாட்டிக்கும் உதவி புரிந்தது. திருப்பதியில் உள்ள விக்கிரகம் மனித வடிவம் தாங்கி தன் பக்தர்களுக்கு உதவுவதற்காக நீதிமன்றத்தில் சாட்சி சொல்லிற்று. இவையெல்லாம் அதிசயங்களும் அற்புதங்களுமாகும். பக்தர்கள்தான் இவற்றைப் புரிந்துகொள்ள முடியும்.

### விக்கிரகங்கள் எப்பொழுது உயிர் பெறுகின்றன?

பக்தன் அல்லது துறவி ஒருவருக்கு அசேதனப் பொருள் என்று எதுவுமே கிடையாது. அனைத்துமே உணர்வுதான். பக்தன் விக்கிரகத்தில் கடவுளை நேருக்கு நேர் காண்கிறான். நரசி மேத்தா அரசனால் சோதனைக்கு உட்படுத்தப்பட்டார். "நரசியே! நீ சொல்வது போல பகவான் கிருஷ்ணரின் உண்மையான பக்தன் நீ என்பது உண்மையானால், இந்த கிருஷ்ண விக்கிரகம் நகரட்டும்'', என்றான் அரசன். நரசி

மேத்தாவின் பிரார்த்தனைக்கு இணங்க விக்கிரகம் நகர்ந்தது. சிவலிங்கத்திற்கு முன் இருந்த நந்தி துளசிதாசரால் அளிக்கப்பட்ட உணவை ஏற்றது. கிருஷ்ண விக்கிரகம் மீராபாயுடன் விளையாடியது. அவளைப் பொருத்த மட்டில், அதில் உணர்வும் உயிரும் நிறைந்திருந்தன.

அப்பைய தீக்ஷிதர் திருப்பதி கோவிலுக்குச் சென்றபோது, அங்குள்ள வைஷ்ணவர்கள் அவருக்கு அனுமதி தர மறுத்தனர். மறுநாள் காலை அர்ச்சகர்கள் அங்கிருந்த விஷ்ணு விக்கிரகம் சிவ விக்கிரகமாக மாறியிருப்பதைக் கண்டனர். அர்ச்சகர் அதைக் கண்டு பெரிதும் திடுக்கிட்டார். அவர் அப்பைய தீட்சிதரிடம் மன்னிப்புக் கேட்டு அதை மீண்டும் விஷ்ணு விக்கிரகமாக மாற்றி அருளும்படி வேண்டினார்.

தென்னிந்தியாவில் தெற்கு கன்னட ஜில்லாவில் உள்ள உடுப்பியில் வாழ்ந்த கனகதாசர் ஒரு பெரும் கிருஷ்ண பக்தர். அவர் தாழ்ந்த குலத்தவர் என்பதால் ஆலயத்தினுள் செல்ல அனுமதிக்கப்படவில்லை. கனகதாசர் ஆலயத்தைப் பிரதக்ஷிணம் செய்து கோவிலின் பின்புறம் ஒரு சிறு ஜன்னல் இருக்கக் கண்டார். அந்த ஜன்னலின் முன் அவர் அமர்ந்து கொண்டார். தன்னை மறந்து பகவான் கிருஷ்ணர் மீது பக்திப் பாடல்களை அவர் பாடினார். அவரைச் சுற்றி பலர் கூடினர். அவரது இனிய இசை மற்றும் ஆழ்ந்த பக்தியினால் அவர்கள் பெரிதும் கவரப்பட்டனர். பகவான் ஸ்ரீகிருஷ்ணர் திரும்பி நின்று கனகதாசருக்கு தரிசனம் அளித்தார். அர்ச்சகர்கள் அதிசயித்தனர். இன்றும் கனகதாசருக்கு கிருஷ்ண பகவான் காட்சி அளித்த ஜன்னல் பக்தர்களுக்குக் காட்டப்படுகிறது.

தெய்வத்தின் மந்திர சக்தியைத் தாங்கி நிற்கும் பகவான் தான் விக்கிரக வடிவில் உள்ளார். தனக்கு முன்

பகவானே தோன்றி பேசினால் எந்த அளவு பக்தியையும் மரியாதையையும் பக்தன் காண்பிப்பானோ அந்த அளவு பக்தியை ஆலயத்தில் உள்ள விக்கிரகத்தினிடமும் பக்தன் காண்பிக்க வேண்டும்.

## வேதாந்தமும் விக்கிரக வழிபாடும்

போலி வேதாந்தி ஆலயத்தில் விக்கிரகத்தின் முன் வணங்க வெட்கப்படுகிறான். விக்கிரகத்தை விழுந்து வணங்கினால் அவனது அத்வைதம் பறந்து போய் விடும் என்று அவன் நினைக்கிறான். புகழ் பெற்ற தமிழ் துறவியரான அப்பர், சம்பந்தர், சுந்தரர் போன்றோரது வாழ்க்கைச் சரிதத்தைப் படியுங்கள். அவர்களிடம் உயரிய அத்வைத பாவனை விளங்கியது. சிவபெருமானை அவர்கள் எங்கும் கண்டனர். இருப்பினும் அவர்கள் எல்லா சிவன் கோவில்களுக்கும் சென்று விக்கிரகத்தின் முன் வணங்கி, இன்று வரை அனைவராலும் பாடப்படும் பதிகங்களைப் பாடிச் சென்றிருக்கின்றனர். அறுபத்து மூன்று நாயன்மார்களும் சிவலிங்கத்தையே வழிபட்டு சிவபோதத்தைப் பெற்றனர். அவர்கள் ஆலயத்தை மெழுகிப் பெருக்கி, மலர் கொய்து, பகவானுக்கு மாலை தொடுத்து விளக்கேற்றினர். அவர்கள் படிக்காதவர்கள் எனினும் மிக உயர்ந்த ஆத்ம போதத்தை அடைந்தனர். அவர்கள் நடைமுறை யோகிகள். அவர்களது இதயம் தூய பக்தியினால் நிரம்பியிருந்தது. அவர்கள் கர்மயோகத்தின் பிரதிநிதிகள். அனைவரும் சம்பூர்ணயோகத்தைக் கடைப்பிடித்தனர். விக்கிரகம் வெறும் கல்லாக இராமல் உணர்வு மயமாக இருந்தது.

அத்வைத அனுபவம் பெற்றவரும், ஒரே ஆன்மாவை எங்கும் கண்டவரும், எல்லாப் படைப்

புடனும் ஒற்றுமையை உணர்ந்தவருமான மதுசூதன சுவாமி, கையில் புல்லாங்குழலேந்திய ஸ்ரீகிருஷ்ணரின் வடிவத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டு விளங்கினார்.

எங்கும் நிறைந்த சாரத்தை துளசிதாசர் உணர்ந்திருந்தார். அவருக்கு பரம்பொருள் உணர்வு இருந்தது. நிர்குணமான, எங்கும் நிறைந்த பகவானை அவர் உணர்ந்திருந்தாலும், கையில் கோதண்டமேந்திய ஸ்ரீராமரிடம் அவர் கொண்டு விளங்கிய அன்பு கொஞ்ச நஞ்சமல்ல. பிருந்தாவனத்தில் கையில் புல்லாங்குழலுடன் கூடிய ஸ்ரீகிருஷ்ணபிரானை அவர் கண்டதும், "இந்த உருவத்தை நான் வணங்க மாட்டேன்", என்று கூறினார். உடனே கிருஷ்ணரின் உருவம் ராமனாக மாறியது. அதன் பின் தான் அவர் அதை வணங்கினார்.

துளசிதாசரைப் போலவே துகாராமும் பரந்த அனுபவத்தைப் பெற்றிருந்தார். "கரும்பில் இனிமை எங்கும் பரவியிருப்பது போல நான் என் இறைவனை எங்கும் நிறைந்தவராகக் காண்கிறேன்", என்று அவர் ஒரு பாடலில் பாடுகிறார். ஆனாலும் அவர் இடுப்பில் கைவைத்துள்ள பண்டரிபுர விட்டலனையே பெரிதும் விரும்புகிறார். எங்கும் நிறைந்த கிருஷ்ணனுடன் தனது ஐக்கியத்தை மீராபாய் உணர்ந்தாலும், 'எனது கிரிதர நாகர' என்று மீண்டும் மீண்டும் அவனை சளைக்காமல் அழைக்கிறாள்.

மேற்கூறிய விளக்கங்களிலிருந்து விக்கிரக வழிபாட்டின் மூலம் ஒருவன் இறைவனை உணர முடியும். எங்கும் நிறைந்த நிர்குண ரூபத்தில் இறைவனை உணர விக்கிரகம் பெரிதும் உதவுகிறது. ஆரம்பத்தில் தியானத்திற்கும் மன ஒருமைப்பாட்டிற்கும் விக்கிரகம் மிகவும் அவசியம். மேலும் இத்தகையதொரு விக்கிரக வழிபாடு இறையுணர்வைப் பெறுவதற்கு எந்த விதத்

திலும் தடை அல்ல என்பதை நாம் தெளிவாக உணரலாம்.

விக்கிரக வழிபாட்டை வன்மையாகக் கண்டிப் பவர்கள் காரிருளிலும் அறியாமையிலும் உழல்கின்றனர். அவர்களுக்கு வழிபாட்டின் உட்பொருளே தெரியாது. தாங்கள் படித்தவர்கள் என்பதைக் காண்பிப்பதற்காக அவர்கள் வீண்வாதங்களிலும் தர்க்கங்களிலும் ஈடுபடு கின்றனர். அவர்கள் எந்தவிதமான உண்மையான சாதனையையும் செய்ததே கிடையாது. வீண்பேச்சு, வெட்டிப் பேச்சு இவைதான் அவர்களது தொழில். அவர்கள் தங்களைத் தாங்களே கெடுத்துக் கொண்டார்கள். எண்ணற்றவர்களின் மனங்களையும் பாழ்படுத்தி தங்களையும் பாழ்படுத்திக் கொண்டு விட்டார்கள். உலகம் முழுவதும் ஏதாவது ஒரு விதத்தில் விக்கிரகத்தை வழிபடுகிறது.

ஆரம்பத்தில் மனமானது ஏதாவது ஒரு குறிப்பிட்ட பொருள் அல்லது வடிவத்தில் லயித்தே கட்டுப்படுத்தப் படுகிறது. அது நிலைப்படுத்தப்பட்டபின் 'அஹம் பிரம்மாஸ்மி' போன்ற சூக்ஷ்மமான தத்துவத்தில் அதை ஒருநிலைப்படுத்தலாம். தியானத்தில் மேலே செல்லச் செல்ல உருவம் அருவத்தில் கரைந்து விடுகிறது. எனவே விக்கிரக வழிபாடு வேதாந்தத்திற்கு முரணானது அல்ல. மாறாக, உயரிய வேதாந்த அனுபவத்திற்கு அது உறுதுணையாக ஆகிறது.



# முடிவுரை

விக்கிரக வழிபாடு சமயத்தின் ஆரம்பமாகும். நிச்சயமாக அது முடிவல்ல. எந்த ஹிந்து மறை நூல்கள் ஆரம்ப சாதகர்களுக்கு விக்கிரக வழிபாட்டை வலியுறுத்துகின்றனவோ, அதே மறைநூல்கள் முதிர்ந்த சாதகர்களுக்கு பூரணப் பொருளில் தியானத்தையும் தத் த்வம் அஸி மகாவாக்கியத்தின் உட்பொருளில் ஓர்மையையும் வலியுறுத்துகின்றன.

வழிபாட்டில் பல படித்தரங்கள் உண்டு. ஆத்மபோதமே மேலான நிலை. அதற்கு அடுத்த நிலைதான் பரம்பொருளில் தியானம். மூன்றாவது, சின்னங்களை வழிபடுதல். நான்காவது, சடங்குகளைச் செய்தலும், புண்ணிய ஸ்தலங்கட்கு யாத்திரை செல்வதுமாகும். சாஸ்திரங்களும், குருமாரும் அன்புள்ள தாய்மாருக்கு நிகர். அவை சாதகர்களின் கையைப் பிடித்து படிப்படியாக அழைத்துச் சென்று போதம் கடந்த பெருநிலைக்கு இட்டுச் செல்கின்றன. வழிபாட்டின் கீழ்நிலையிலிருந்து மேல்நிலைக்கு சாதகர்களை இட்டுச் செல்கின்ற ஹிந்து ரிஷிகளுக்கு வணக்கம்.

கடவுளின் அன்புக் குழந்தைகளே! உங்களது மோசமான அவநம்பிக்கையை உதறித் தள்ளுங்கள். இந்த வினாடியே மேலான, அசையாத, உயிருள்ள நம்பிக்கையை உங்கள் இதயத்தில் பதியுங்கள். கடந்த கால புகழ்மிக்க முனிவர்களின் உதாரணங்களை மனதில் திரும்பத் திரும்ப நினைவு கூருங்கள். அவர்கள் நம்பினார்கள். செழுமையான ஆன்மீக அறுவடையையும் அவர்கள் பெற்றார்கள். நீங்களும் விக்கிரக வழிபாட்டில் நம்பிக்கை வைத்தால் அமைதி, ஆனந்தம், சுபிட்சத்தைப் பெற்று, ஆண்டவனையும் அடையலாம்.

